


வெளுக்கும் துணிகளெல்லாம் வெண்மை மயம், துப்புரவான தூய்மை மயம்: வெல்வது ஸர்ப் சலவையின் எல்லைமீறிய வல்லமை! கரைகடந்த நுரைவளம்! கேட்பானேன். சேலை, சிற்றுடை முதல் சிறுவரின் ஆடைவரை ... எதற்கும் நிகரிலாத. வெண்மை, சிகரமான தூய்மை! கைப்பட வீட்டிலே துணி வெளுக்க ஒரே வழி:; கைகண்ட ஸர்ப்!

# ஸர்ப் சலவை: வெள்ளைவெளேர் சலவை

இந்துஸ்தான் லீவர் தயாரிப்பு

SU. 38-140 TM

# கல்கி

நகைச்சுவை மலர்

சோபகிருது, கார்த்திகை 29 ★ டிசம்பர் 15


## பொருளடக்கம்



படவிளக்கம் 101ம் பக்கம் பார்க்க





புகைபிடிக்கும் இங்கிதம்

# பெண் மனம் புண்படா வண்ணம்...

மாதர்களோடு புழங்குகையில், இன்றியமையாதபோது மட்டுமே புகைபிடியுங்கள்—அதுவும் பெண் மனம் நோகாத வண்ணம். புகைபிடிக்கையிலே பெண்மணிகளை எதிர்ப்பட்டால், முகமன் கூறுவதற்கு முன் சிகரெட்டை அகற்றிக்கொள்வதே நலம். அவர்களைக் கடந்து சென்ற பிறகே தொடர்ந்து புகைபிடிப்பது நாசூக்கு.



உயரிய பண்போடு உபயோகிப்பதற்கும் உதவுவதற்கும் உகந்தது

**பனமா**

Panama
20
CIGARETTES

இழுக்க
இழுக்க
இன்பம்—
இறுதிவரை

விசேஷக் கலவை செய்வோர்,
கோல்டன் டுபாக்கோ கம்., ப்ரைவேட் லிட்.,
பம்பாய்-56.

**பாரதத்தில் இத்தகைய தேசிய ஸ்தாபனங்களில் மிகப் பெரியது.**

GT. 617. TAM. Greens' Advtg.



மலர் 23

தமிழ்த்திரு நாடுதன்னைப்—பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார்

இதழ் 20

# குதிரைக் கொம்பு

உலக சரித்திரம் இதுவரை கண்டிராத 'சோஷலிஸ ஜனநாயக'த்தை இந்தியாவில் நிறுவப்போவதாக காங்கிரஸ் மகாசபை பறைசாற்றி யிருக்கிறது. சோஷலிஸம் என்றால் என்னவென்றோ, ஜனநாயகம் என்றால் என்னவென்றோ இதுவரை ஒருபோதும் வரையறை செய்து தெளிவு தராத காங்கிரஸ் தலைவர்கள் இப்போது இரண்டையும் சேர்த்துக் குழப்பி ஒரு கபந்த தத்துவத்தைப் பற்றிப் பேசத் தொடங்கி யிருக்கிறார்கள். 'சோஷலிஸ ஜனநாயகம்' 'ஜனநாயக சோஷலிஸம்' என்ற பிரசார மந்திரங்களை உண்டாக்கி யிருக்கின்றனர். ஜனநாயகமும் சோஷலிஸமும் முரண்பட்ட இரண்டு தத்துவங்கள்—கொம்பு உள்ள குதிரை, பார்வையுள்ள குருடன், பேசும் ஊமை என்பனவற்றைப் போல்.

அரசனுக்கு அடங்கிய குடிகளாக வாழ்ந்து பழக்கப்பட்ட பாரம்பரிய குணம் பொருந்திய ஆசிய மக்களை - குறிப்பாக பாரத மக்களை - சோஷலிஸம் என்ற பெயரில் எவ்வளவு எளிதில் ஆட்டுக் கூட்டமாக்கிவிட முடியும் என்பதை ராஜாஜி உள்ளங்கை நெல்லிக்கனியாக விளக்கி யிருக்கிறார். ஜனநாயகத்தின் தனி லட்சணமாகிய வாக்குரிமையைக் கொடுப்பதுபோல் கொடுத்து, அதைப் பண பலத்தால் அபகரிப்பதையும் இதன் மூலம் எதிர்க்கட்சி ஏதும் தோன்ற இடமில்லாமல் செய்து, இருக்கும் எதிர்க் கட்சிகளையும் ஒடுக்கி ஏக கட்சி ஏகாதிபத்தியம் நிறுவப்படுவதையும் அவர் எடுத்துக் காட்டி யிருக்கிறார். மக்கள் எல்லா உரிமைகளையும் பெற்றிருக்கும் ஜனநாயகமும், சர்க்காரே சகல உரிமைகளையும் பெற்றிருக்கும் சோஷலிஸமும், ஒன்றுக்கொன்று இரு எதிர் துருவங்களாக முரண்பட்டு நிற்பவை என்பதை அவர் தெளிவாக்கி யுள்ளார்.

"சோஷலிஸ ஜனநாயகம் என்பதாக ஒன்று ஒருபோதும் இருந்தது கிடையாது" என்று கெல்ஸ் மார்டினெட் என்பவர் தாம் எழுதியுள்ள 'நம் காலத்திய மார்க்ஸீயம்' (The Marxism of our Times) என்ற நூலில் கூறி யிருக்கிறார். "சர்வாதிபத்தியம் பொருந்திய சர்க்காரால்தான் சோஷலிஸத்தை நிறுவ முடியும். கொள்கை வெறி பிடித்த ஒரு சிலரும் அதிகார வர்க்கத்தினரும்தான் சோஷலிஸத்தை நடைமுறையாக்குவார்கள். இந்தச் சூழ்நிலையில் மக்கள் ஆட்சி எப்படி ஏற்பட முடியும்?" என்று அவர் ஆணித்தரமாக வினவுகிறார். நமது நாட்டைப் பொறுத்தமட்டில் சர்க்கார் ஊழியர்களான அதிகார வர்க்கத்தினரை நேரடியாகக் குறை சொல்வதற்கில்லை. இங்கே ஆளும் கட்சிக்காரர்களின் அடக்குமுறையில்தான் சர்க்கார் சிப்பந்திகள் உள்ளனர். சர்க்கார் சிப்பந்திகளுக்கும் மந்திரிசபைகளுக்கும் மேலாகக் கட்சியின் அதிகாரத்தை ஓங்கச் செய்வதிலேயே இன்று காங்கிரஸ் தலைவர்கள் முனைந்திருக்கிறார்கள். இந்த முயற்சிதான் 'காமராஜ் திட்டம்' என நாமகரணம் பெற்றுள்ளது.

'ஜனநாயகம் என்பதற்கு எப்படியெல்லாம் இலக்கணம் கூறினாலும் நாள் தோறும் நாட்டில் படர்ந்து வரும் ஏகாதிபத்திய ஆட்சியுடன் அதை இணைக்க முடியாது. காங்கிரஸ் கட்சியானது தேசம் தனக்குச் சேர்ந்த ஒரு சொத்து என்று எண்ணுகிறது. காங்கிரஸ் கட்சி ஸ்ரீ ஜவஹர்லால் நேருவைச் சேர்ந்தது. ஸ்ரீ நேருவோ - அவர் எவ்வளவு மறுப்பினும் - ஆதிகாலத்துப் பயிற்சியிலிருந்து கம்யூனிஸ்டு மனப்பான்மைக்கு ஆட்பட்டவர்' என்கிறார் ராஜாஜி. இவரது ஆட்சியில் தனி மனிதன் சுதந்திரம் பெற்று விளங்கும்

ஜனநாயகத்தைக் காண முடியாது. சோஷலிஸத்தின் லட்சியமான சம விநியோகத்தையும் காண முடியாது. 'காங்கிரஸின் 'சோஷலிஸம்' பொருளாதாரக் கொள்கையே அல்ல. அது கட்சிக்காரர்கள் மட்டும் முன்னேற உதவும் அரசியல் கொள்கைதான். பேரை மாற்றி அமைப்பதால் உப்பு சீனியாகி விடாது' என்கிறார் ராஜாஜி. 'ஜனநாயக சோஷலிஸம்' என்ற நூதன சித்தாந்தத்தைப் பற்றிக் காங்கிரஸ் கட்சியினர் பேசுவது புதியதொரு பித்தலாட்டமே யாகும்.

# ஸி. பி. அளிக்கும் சீரிய திட்டம்

முன் காலத்தில் நம் நாட்டில் கல்வி என்பது ஆத்மிகத்தைத்தான் ஆதாரமாகக் கொண்டிருந்தது. ஆனால் இன்றோ நிலைமை அடியோடு மாறிவிட்டது. அறிவை விருத்தி செய்து கொள்ளவும், பொருளாதார முன்னேற்றம் பெறவும் கல்வி உதவுகிறதே யன்றி, நன்னெறிகளையும், ஒப்புரவு உணர்ச்சியையும் ஊட்டத் தவறிவிட்டது. இதனால்தான் மக்களிடையே நிம்மதியையோ, திருப்தியையோ காண முடியவில்லை.

இந்த நிலைமையை மாற்ற வேண்டுமானால் மாணவர்களுக்கு ஆன்மிக உணர்வைப் புகட்ட வேண்டியது அவசியம். இவ்விஷயத்தில் அரசாங்கம் எதுவும் செய்யவில்லை. 'மதச் சார்பு அற்ற' என்ற கொள்கையை அது சுட்டிக் காட்டி எந்த மதத்துக்குமே உதவாமல் நாட்டை நாஸ்திகத்தில் இழுத்துச் செல்கிறது. எனவே, தனி மனிதர்களும் ஸ்தாபனங்களும் நம் தேசத்து 'இளைஞர்களை ஆன்மிகப் பாதையில் இட்டுச் செல்வதில் முனைந்தால் தான் நமது நாட்டில் சாந்தியும், மன நிறைவும் ஏற்பட இடமுண்டு.

இவ்விதமான நன் முயற்சி ஒன்றில் ஈடுபட்டிருக்கிறார் அண்ணாமலை பல்கலைக் கழக உப அத்யட்சகர் டாக்டர் ஸி. பி. ராமஸ்வாமி அய்யர் அவர்கள். அவரவரும் தாம் பிறந்த சமயத்தில் பற்றுக் கொள்ளவும், பிற மதங்களைத் தாராள மனப்பான்மையுடன் மதிக்கவும் உதவுகிற திட்ட மொன்றை வகுத்திருக்கிறார். சமயம், தத்துவம், பண்பாடு இவற்றில் பரீட்சைகள் வைத்து அவற்றில் தேறும் அண்ணாமலை பல்கலைக் கழக மாணவர்களுக்கு மாதம் தோறும் ஐம்பது ரூபாய் உபகாரச் சம்பளம் வழங்குவதற்கு ஸி. பி. அவர்கள் உத்தேசித்திருக்கிறார். ஸி. பி. அவர்களின் இந்தச் சிறந்த திட்டம் நாட்டில் உள்ள எல்லாப் பல்கலைக் கழகங்களிலும் அமுலாக வேண்டும் என்று விரும்புகிறோம்.





# திருக்குறளைச் சென்று ஓதுவோம்

இம் மார்கழி மாதத்தில் திருப்பாவை — திருவெம்பாவைப் பாசுரங்களைக் குழந்தைகளுக்கு மனப்பாடம் செய்விப்பதுடன், திருக்குறளில் கடவுள் வாழ்த்து அதிகாரத்திலுள்ள கீழ்க்காணும் பத்துக் குறள்களையும் மனப்பாடம் செய்விக்க வேண்டுகிறோம்.

அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு

கற்றதனால் ஆய பயனென்கொல் வாலறிவன்
நற்றாள் தொழாஅர் எனின்.

மலர்மிசை ஏகினான் மாணடி சேர்ந்தார்
நிலமிசை நீடுவாழ் வார்.

வேண்டுதல் வேண்டாமை இலான்அடி சேர்ந்தார்க்(கு)
யாண்டும் இடும்பை இல.

இருள்சேர் இருவினையும் சேரா இறைவன்
பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு.

பொறிவாயில் ஐந்தவித்தான் பொய்தீர் ஒழுக்க
நெறிநின்றார் நீடுவாழ் வார்.

தனக்குவமை இல்லாதான் தாள்சேர்ந்தார்க்(கு) அல்லால்
மனக்கவலை மாற்றல் அரிது.

அறவாழி அந்தணன் தாள்சேர்ந்தார்க்(கு) அல்லால்
பிறவாழி நீந்தல் அரிது.

கோளில் பொறியின் குணமிலவே எண்குணத்தான்
தாளை வணங்காத் தலை.

பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவன் அடிசேரா தார்.

திருவெம்பாவை, திருப்பாவைப் பாசுரங்களை மனப்பாடம் செய்து ஒப்பிக்கும் குழந்தைகளுக்கு ஆங்காங்கு நடைபெறும் பாவை மகாநாடுகளின் பரிசளிப்பு விழாவில், காஞ்சி காமகோடி பீடம் ஸ்ரீ சங்கராசாரிய ஸ்வாமிகளின் ஆசியுடன் காமாட்சி அம்மன் முத்திரை பொறிக்கப்பட்ட வெள்ளிக்காசு பரிசாக வழங்கப்படும்.







# சிரித்து மகிழ ஒரு சிறப்பு மலர்

இந்தத் தமிழன் இருக்கிறானே, இவன் சிரிக்கவே பிறந்தவன். ஆம், ஏதாவது கவலைக்கிடம் தருவதாக நேர்ந்தாலும்கூட அவன் உடனே அழுது விடுவதில்லை. 'அழுவதா, சிரிப்பதா?' என்று கேட்பதே அவனது இரத்தத்தோடு பிறந்த இயல்பு. தமிழனுக்கு அவனது மறையைத் தந்த பொய்யாமொழிப் புலவரோ, 'அழுவதா, சிரிப்பதா?' என்று இரண்டுங் கெட்டானகக் கேள்வி கேட்கவில்லை. 'இடுக்கண் வருங்கால் நகுக' என்றே ஆணையிட்டு விட்டார். இன்று நம் தேசத்தின் முன்னுள்ள பல இடுக்கண்களை எடுத்துக் காட்டி மக்களைத் தட்டி எழுப்பிய 'கல்கி' அவற்றைக் கண்டு யாரும் மனம் கலங்கி விடாமல் நகைத்து மகிழ்வதற்கென்றே ஓர் அரிய மலரை இன்று வெளியிடுகிறது.

இமைகளை நகைத்தே எரித்த நாயகன் நம் தெய்வம். மாய லீலை புரியும் மாலவன் நமது பரமாசாரியன். ஹாஸ்யத்தை நவரஸங்களில் ஒன்றுகப் போற்றுவது நமது மரபு. விதூஷக பரம்பரையினரும், காளமேகமும், திருவாழத்தானும், தெனலிராமனும், பீர்பலும் நகைச்சுவையைப் பொங்க விட்ட நாடு நம்முடையது. 'எனக்கு மட்டும் ஹாஸ்ய உணர்ச்சி இல்லா விடில் நான் என்றோ தற்கொலை செய்து கொண்டிருப்பேன்' என்று கூறிய காந்திஜி நமது தேச பிதா. காந்திஜியின் திருமொழியால், 'தம்மைக் கண்டே செய்யப்படும் கேலியைக் கூட ரசிக்குமனவுக்கு ஹாஸ்ய உணர்ச்சி பெற்றவர்' என்று பாராட்டப்பட்ட ராஜாஜி நமது தனிப் பெரும் தலைவர். நம் பத்திரிகையின் ஸ்தாபக ஆசிரியராகிய கல்கி அவர்களோ நகைச்சுவைக்கே மறு பெயராக மதிக்கப்பட்டவர். எனவே இப்போது கல்கிப் பத்திரிகை தனது இதழ் ஒன்றை நகைச்சுவைக்காகவே அளித்திருப்பது பொருத்தமல்லவா?

தமிழ் நாட்டின் பிரபல நகைச்சுவை எழுத்தாளர்கள் ஓவியர்கள் ஆகியோரில் பலர் இங்கு உங்களைச் சிரித்து மகிழ வைக்கிறார்கள். அதோடு பாரதத்தின் பிற பகுதிகளைச் சேர்ந்த சிரிப்புச் சிற்பிகளின் சிந்தனைப் பணியாரங்களையும் இவ்விதழில் படைக்கிறோம். வயிறு புடைக்க உண்டு விலாப்புடைக்கச் சிரிப்பீர்களாக!

## சென்னையின் புதிய மேயர்


திரு சிவசங்கர மேதா

சென்னை நகரத்துக்குப் புதிய மேயரும், துணை மேயரும் வந்திருக்கிறார்கள். மகிழ்ச்சியுடன் வரவேற்கிறோம்.

நகராண்மைக் கழகத் தேர்தலில்கூட இவ்வளவு கட்சி மனப்பான்மை இருக்க வேண்டுமா, 'அதிசய' முடிவுகள் ஏற்பட வேண்டுமா என்று நாம் எண்ணிப் பார்க்காமல் இருக்க முடியவில்லை.

அந்த எண்ணம் ஒருபுறம் இருக்கட்டும். மேயரையும், துணை மேயரையும் பொறுத்தமட்டில் கட்சி மனப்பான்மைக்கு இனி இடமில்லை. திரு சிவசங்கர மேதா அவர்கள் காங்கிரஸ்காரர் என்பதும், திரு மணிவண்ணன் அவர்கள் தமிழ் தேசியக் கட்சியைச் சேர்ந்தவர் என்பதும் அவர்கள் மேயராகவும் துணை மேயராகவும் தேர்வு பெற்றவரைதான். இனி இவர்கள் பதவிக்காலத்தில் இருக்கும் வரை கட்சிகளை எண்ணுமல், சென்னை மாநகரின் வசதிகளை வளர்க்க வேண்டிய கடமையிலுள்ளவர்கள். அத்திசையில் அவர்கள் முயல்வார்கள் என்று நம்புகிறோம். புது மேயர் நகரை அழகுபடுத்துவதில் விசேஷ ஈடுபாடு காட்டுவார் என்று அறிந்து மகிழ்கிறோம். அவரது நடவடிக்கைகள் வெற்றி பெறவேண்டுமென வாழ்த்துகிறோம்.


திரு மணிவண்ணன்

# கி.பி. 2063-ம் ஆண்டில்...



பாரத-மேல்நாட்டுக் கலாசார இணைப்பு.



முக்கால்பங்கு இத்தாலிய-பிரெஞ்சு உதவியுடனும் கால்பங்கு உள்நாட்டுச் சரக்குடனும் உருவான திட்டம்.



அன்றைய விலைப்படி கறி காய் வாங்கப் பணமும் பையுமாக மார்க்கெட் செல்லும் ஒருவர்.





'தேசிய ஒருமைப்பாட்டு மொழி'யிலுள்ள இந்த போர்டு 'காரை இங்கே நிறுத்தாதே' என்கிறது

(ஆர்.கே.லக்ஷ்மண்)




**36**

**ம**ணிகள் இழைத்த தேரின் மேல் ஏறி வந்து போர் செய்தான் பாணாசுரன். அவனுக்கு ஆயிரம் கைகள். அந்த ஆயிரம் கைகளையும் அறுத்துத் தள்ளி வெற்றி கொண்டான் எம்பெருமான்! பாணாசுரன் என்றால் மக்கள் மனத்தைக் கெடுக்கும் தீய எண்ணங்கள். அந்த எண்ணங்களின் பலத்தையும் மாயங்களையும் காட்ட ஆயிரங் கைகளும் அழகிய தேர் முதலியவையும்! இந்தத் தீய எண்ணங்களை வீழ்த்தி நம்மை உய்வித்தருளிய திருவடியிலே தமது மனம் ஆசை கொண்டது என்கிறார் ஆழ்வார்:

நின்று எதிராய
  நிரைமணித்தேர் வாணன்தோள்
ஒன்றிய ஈரைஞ்ஞூறுடன்
  துணிய—

*[நிரைமணித்தேர் நின்று எதிராய-மணிகள் இழைத்த தேரிலே நின்று எதிர்த்து வந்த. வாணன்-பாணனுடைய, பாணாசுரனுடைய. தோள் ஒன்றிய ஈரைஞ்ஞூறு - தோளிலே பொருந்திய ஆயிரம் கைகளை; பக்கம் ஒன்றுக்கு ஐந்நூறான ஆயிரம் கைகளை. உடன் துணிய - அந்த விநாடியே அறுபடும்படி. துணிதல் - அறுதல்.]*

  —வென்று இலங்கும்
ஆர்படுவான் நேமி
  அரவணையான் சேவடிக்கே
நேர்படுவான் தான்முயலும்
  நெஞ்சு

*[வென்றிலங்கும் - வென்று விளங்குகிற. ஆர்படு - ஆரக் கால்களோடு கூடிய. வான் நேமி - சிறப்புமிக்க சக்கராயுதத்தைத் தாங்கிய. அரவணையான் - அனந்தசயனனாகிய எம்பெருமானுடைய. சேவடிக்கே - திருவடிகளிலே. நேர்படுவான் - கூடி நிற்க. தான் முயலும் - தானாகவே ஆசைப்பட்டு முனைகிறது. நெஞ்சு - என் நெஞ்சம்.]*

தானாகவே ஆசைப்படுவதற்குக் காரணம் பகவானுடைய திருவருள். என் முயற்சியில்லை என்கிறார் ஆழ்வார். எம்பெருமானுடைய திருவருட் பெருஞ்செயலை எண்ணி மனமானது அப்படியே அந்தத் திருவடிகளிலே கூடி நிற்க முனைகிறது என்கிறார். இறைவனுடைய அனந்த கல்யாண குணங்களைத் தியானிக்கத் தியானிக்க மனம் அவன்பால் ஈடுபட்டு நிற்கிறது. பகவானிடம் முற்றிலும் சரணடைந்து, நமக்குப் பயமோ ஆபத்தோ ஏதும் இனி இல்லை, பாணனும் மாய்ந்தான், மற்ற எல்லா அரக்கர்களும் மாய்ந்தார்கள் என்று உறுதிகொண்டு விடுகிறது மனம். இது பக்தியோகத்தின் அனுபவம்.

நின்றுஎதி ராய
  நிரைமணித்தேர் வாணன்தோள்
ஒன்றிய ஈர்ஐஞ்ஞூறு
  உடன்துணிய— வென்றிலங்கும்
ஆர்படுவான் நேமி
  அரவணையான் சேவடிக்கே
நேர்படுவான் தான்முயலும்
  நெஞ்சு

விக்ஸிலிருந்து இருமலை நிறுத்தும் புதிய கண்டுபிடிப்பு

# அடமுள்ள இருமலை நிறுத்துகிறது

இருமல் கட்டுப்பாடு கேந்திரத்தில் இருமல் ஆரம்பமாகும் இடத்தில் செயல் புரிகிறது.



நமைச்சலுக்குள்ளான இருமல் கட்டுப்பாடு கேந்திரம் உங்களை இருமச் செய்கிறது, இருமச் செய்கிறது —தொடர்ந்து இருமச் செய்கிறது.



விக்ஸ் பார்முலா 44 உங்கள் இருமல் கட்டுப்பாடு கேந்திரத்தை அமைதிப்படுத்துகிறது; இருமல் நிற்கிறது; நீங்கள் சுகமாகத் தூங்குகிறீர்கள்.

இருமல் உங்கள் தொண்டையில் மட்டும் இருப்பதல்ல. டாக்டர்களுக்குத் தெரியும், உண்மையில் 'இருமல் கட்டுப்பாடு கேந்திரத்தில்தான்' இருமலானது ஆரம்பமாகிறதென்று. தொண்டை அழற்சி, மார்புக்குழாய் அடைப்பு ஆகியவைகள் இருமல் கட்டுப்பாடு கேந்திரத்தைத் தூண்ட நீங்கள் இருமுகிறீர்கள். இருமுகிறீர்கள் அப்படித் தொடர்ந்து இருமுகிறீர்கள்.

விக்ஸ் பார்முலா 44-ல் உள்ள புதிய பிரத்யேகமான "இருமல் சமனி" நமைச்சலுக்குள்ளான உங்கள் இருமல் கட்டுப்பாடு கேந்திரத்தை அமைதிப்படுத்த, இருமல் நிற்கிறது. அடமுள்ள, அழற்சி மிக்க இருமலிலிருந்து விடுதலை பெற்ற நீங்கள் அமைதியான இரவை ஆனந்தமாக அனுபவிக்கிறீர்கள்.

அதே நேரத்தில் விக்ஸ் பார்முலா 44-ல் உள்ள, அறிவியல் முறைப்படி சேர்க்கப்பட்ட சக்திவாய்ந்த மருந்து அடமுள்ள இருமலிலிருந்து உங்களுக்கு பூரண விடுதலை அளிக்க, உடலின் மூன்று முக்கிய பாகங்களில் செயல் புரிகிறது.

**• உங்கள் மார்பில் செயல் புரிகிறது**

விக்ஸ் பார்முலா 44-ல் உள்ள விசேஷ கட்டும் பொருள் சுவாசக் குழாய்களில் ஆழ்ந்து வேலை செய்து கனியூட்டும் நெஞ்சடைப்பை நீக்குகிறது.

**• உங்கள் தொண்டையில் செயல் புரிகிறது**

விக்ஸ் பார்முலா 44 இருமலினால் தொண்டையினுள் ஏற்படும் எரிச்சலை வேகமாகக் குணப்படுத்துகிறது. தொண்டை அழற்சியை உடனடியாக நிறுத்துகிறது.

**• உங்கள் மூக்கில் செயல் புரிகிறது**

விக்ஸ் பார்முலா 44 மூக்கடைப்பை குணப்படுத்துகிறது. உங்களை மறுபடியும் தாராளமாகச் சுவாசிக்கச் செய்கிறது. நீங்கள் இரவில் தூங்குவதற்கு வேண்டிய ஆசுவாசமடைகிறீர்கள்.




# விக்ஸ் பார்முலா 44

காஃப் மிக்ஸர் இருமல் ஆரம்பமாகும் இடத்தில் வேலை செய்கிறது

# மெய்யாகவே ஒரு நல்ல கோப்பை தேனீருக்கு — *வாங்குங்கள்!*




மூடிஸ் ராணி சுபீரியர் டஸ்ட் டீ
நறுமணத்துடன்கூடிய, கூடுதலான கோப்பைகள்
தேனீர் கிடைக்கும் மூடிஸ் டீயை அருந்துங்கள்—
பணத்தை மிச்சப்படுத்துங்கள்

# தமிழில் சிறுகதைகள்

## கல்கி

[இன்றையத் தமிழ் இலக்கியத்தின் வளர்ச்சிக்குப் பாடுபட்டவர்களில் அமரர் 'கல்கி' தமக்கென்று தனியானதொரு பாதை வகுத்துக் கொண்டவர். சிறந்த சிறு கதைகளும் நவீனங்களும் எழுதி வழிகாட்டியவர். 'நகைச்சுவைக்கு ஒரு கல்கி' என்று சொல்லுமளவுக்கு நகைச்சுவையைச் சுவைபடக் கையாண்டவர். 'தமிழில் சிறுகதைகள்' என்ற தலைப்பில் 22-6-38ல் சென்னை வானொலி நிலையத்தில் அவர் நிகழ்த்திய சொற்பொழிவு நகைச்சுவைக்கும் ஓர் எடுத்துக்காட்டாக விளங்குகிறது. 'கல்கி' நகைச்சுவை மலருக்கும் ஓர் எடுப்பான அணிகலனாகத் திகழ்கிறது.]



இன்று ''தமிழில் சிறுகதை'' என்னும் விஷயத்தைப் பற்றிப் பேசுவதற்கு உங்கள் முன்னால் – இல்லை, இந்த உயிரற்ற ஒலிக் கருவியின் முன்னால் – வந்திருக்கிறேன். ஆனால் 'தமிழ்' என்ற மாத்திரத்தில் இந்த உயிரற்ற கருவிக்கும் உயிர் வருவதுபோல்தோன்றுகிறது. கதை என்ற மாத்திரத்தில் அது 'ஊம்' கொட்டிக் கொண்டு காதைச் சாய்த்துக் கேட்கத் தொடங்குகிறது.

ஆனால் நான் இன்று கதை சொல்ல வரவில்லை. தமிழில் உள்ள சிறுகதை இலக்கியத்தைப் பற்றிச் சொல்லத்தான் வந்திருக்கிறேன். அதற்குப் பூர்வ பீடிகையாக, சிறுகதை என்றால் என்ன வென்பதைச் சிறிது கவனித்துக் கொள்வோம்.

### சிறுகதை இலட்சணம்

சிறுகதை என்ற உடனேயே, அதில் ஒருகதை இருக்க வேண்டும், அது சின்னதாயும் இருக்க வேண்டும் என்று ஏற்படுகிறது.

கதை என்றால் என்ன? ''ஒரே ஒரு ஊரில் ஒரே ஒரு ராஜா இருந்தானாம்.....'' என்று பாட்டி சொன்னவுடனேயே, ''ஊம்; அப்புறம்?'' என்று குழந்தைகளுக்குக் கேட்கத் தோன்றுகிறதல்லவா? இம்மாதிரி 'அப்புறம் என்ன?' என்று தெரிந்து கொள்வதில் நமக்கு ஆவலைக் கிளப்பக் கூடிய முறையில் ஏதாவது நடந்த சம்பவத்தையோ அல்லது நடக்காத சம்பவத்தையோ சொன்னால், அதுதான் கதை. சரி, சிறுகதை என்றால் எவ்வளவு சின்னதாயிருக்க வேண்டும்? அது அந்தந்தக் கதையின் போக்கையே பொறுத்தது. சிறுகதையின் முக்கியமான அம்சம், அதில் ஒரே ஒரு பிரதான அம்சம்தான் இருக்க வேண்டும். அந்தச் சம்பவத்தை, வெறும் வளர்த்தல் இல்லாமல், வேறு சம்பந்தமற்ற விஷயங்களுக்குப் போகாமல் நேரே நெடுகச் சொல்லிக் கொண்டு போனால், அது நாலு வரியில் இருந்தாலும் சிறுகதைதான்; நாற்பது பக்கங்கள் வந்தாலும் சிறுகதைதான்.

இதற்கு ஓர் உதாரணம் பார்ப்போம். ஒரு நாள் காஞ்சீபுரம் உபய வேதாந்த தாத்தையங்கார் ஸ்வாமிகள், அவருடைய வேலைக்காரன் குப்பனைக் கூப்பிட்டு, ''அடே, குப்பா! நீ உடனே ஸ்ரீபெரும்புதூர் திருவேங்கடாச்சாரி ஸ்வாமி வீட்டுக்கு ஓடிப் போய், 'திருக்குடந்தை திருநாராயண அய்யங்கார் ஸ்வாமி திருக்கோவில் ஆராதனைக்குத் திருத்துழாய் எடுத்து விட்டுத் திருக்குளத்துக்குப் போனபோது திருப்பாசி வழுக்கவே திருவடி தவறி விழுந்தார்' என்று சொல்லு'' என்பதாகத் திருவாய் மலர்ந்தருளினார்.

''ஆகட்டும், சாமி!'' என்றான் குப்பன்.

தாத்தய்யங்கார் தமது வைஷ்ணவ பரிபாஷை அவனுக்குப் புரிந்ததோ என்னமோ என்று சந்தேகப்பட்டு, ''என்னடா, சொல்கிறாய்?'' என்று கேட்டார்.

அதற்குக் குப்பன், ''தெரியாதா, சாமி! கும்பகோணத்துப் பாப்பான் குட்டையிலே விழுந்தானென்று சொல்கிறேன்'' என்றான்.

நேயர்களே! ஒரே சம்பவத்தை அய்யங்கார் ஸ்வாமிகளும் தான் சொன்னார்; குப்பனும் தான் சொன்னான். ஆனால் குப்பன் சொன்ன முறை சிறுகதை லட்சணத்துக்குப் பொருத்தமானது: ''கும்பகோணத்துப் பாப்பான் குட்டையிலே விழுந்தான்'' என்று நீட்டாமல், வளர்த்தாமல், நாலே வார்த்தைகளில் பளிச் சென்று விஷயத்தைச் சொன்னான், பாருங்கள்!

### நாலு வகைக் கதைகள்

இந்த முக்கிய லட்சணத்தோடு எழுதப்படும் சிறுகதைகளைச் சாதாரணமாய் நாலு விதமாகப் பிரிக்கலாம்.





முதலிலே, கட்டுக்கதைகள். இவற்றைப் படிக்கும்போதே பொய்க் கதைகள் என்று நன்றாய்த் தெரிந்துவிடும். ஆனால், அவற்றைக் கேட்கவும் படிக்கவும் விருப்பமாயிருக்கும். ''ஒரு காட்டில் ஒரு சிங்கமும் முயலும் சிநேகமாயிருந்தன....'' என்று ஆரம்பிக்கும்போதே, இது நடக்காத விஷயம் என்று குழந்தைகளுக்குக் கூடத் தெரிந்துதான் இருக்கிறது. ஆனாலும் நடந்ததாக வைத்துக் கொண்டு கதை கேட்பதற்குத் தயாராயிருக்கிறோமல்லவா ?

இரண்டாவது, வேடிக்கைக் கதைகள். இவற்றில் அமானுஷ்யமான சம்பவம் ஒன்றும் வராது. ஆனாலும், நடந்தவையல்ல, வெறும் கற்பனையென்று நமக்குத் தெரிந்தேயிருக்கும். அப்படித் தெரிந்தே, தமாஷுக்காக அந்தக் கதைகளைக் கேட்டு அநுபவிக்கிறோம்.

மூன்றாவது காவிய ரஸமுள்ள கதைகள். இவை மனித வர்க்கத்தின் இருதய தத்துவத்துக்கே சென்று, வீரம், சோகம், காதல், ஹாஸ்யம் முதலிய நவரஸங்களுடனே எழுதப்படுகிறவை. உருவத்தில் சின்னவையே தவிர, சிறந்த காவியப் பகுதியாகக் கருதப்பட வேண்டியவை.

நாலாவது கருத்து அமைந்த கதைகள். சமூக உத்தாரணத்தையோ தேச முன்னேற்றத்தையோ உத்தேசித்து, பெரியோர்கள் தங்களுடைய உயர் நோக்கங்களைப் பரப்புவதற்காக எழுதும் கதைகள் இவை.

## திடுக்கிடும் செய்தி

இத்தகைய சிறுகதைகள் தமிழ் மொழியில் எந்த அளவில் இருக்கின்றன என்பதை இப்போது கவனிக்கலாம். நண்பர்களே ! உங்களைத் திடுக்கிடச் செய்யப் போகிறேன். இந்தச் சிறுகதை இலக்கியம் என்பதே முதன் முதலில் தோன்றியது நமது தமிழ் மொழியிலேதான். இது கதையல்ல; நிஜமான சமாசாரம்.

தமிழில் உள்ள பழைய நூல்களுக்குள்ளே மிகவும் பழைமையானது தொல்காப்பியம் என்று கேட்டிருக்கிறோமல்லவா? இந்த நூல் மூவாயிரம் வருஷங்களுக்கு முந்தியது என்று பலரும் நம்புகிறார்கள். இது ஓர் இலக்கண நூல். பல வகைப்பட்ட இலக்கியங்களுக்கும் தொல்காப்பியத்தில் இலக்கணம் கூறப்பட்டிருக்கிறது. முதலிலே இலக்கியம் தோன்றிப் பிறகு அதற்கு இலக்கணம் ஏற்படுவதுதான் மரபல்லவா? ஆகவே, தொல்காப்பியத்தில் சிறுகதைக்கு இலக்கணம் கூறியிருக்கிறது என்றால், அந்தக் காலத்துத் தமிழ் இலக்கியத்தில் சிறுகதையும் பிரதானமாயிருந்திருக்க வேண்டும் என்று நிச்சயிக்கலாம்.



தொல்காப்பியத்தில் சிறுகதை இலக்கணம் சொல்லியிருக்கிறதா ? ஆகா ! சொல்லியிருக்கிறது. உரைநடை, அதாவது வசன இலக்கியத்தைப் பற்றிச் சொல்லும்போது சிறுகதை இலக்கணம் வருகிறது. கேளுங்கள்:

''பாட்டிடை வைத்த
குறிப்பினானும்
பாவின் றெழுந்த
கிளவி யானும்
பொருளொடு புணராப் பொய்ம்
மொழி யானும்
பொருளொடு புணர்ந்த நகைமொழி
யானு மென்(று)
உரைவகை நடையே நான்கெனமொழிப''

இந்தத் தொல்காப்பிய சூத்திரத்தில், ''பொருளொடு புணராப் பொய்ம் மொழி'' என்பதற்கு, பேராசிரியர் கூறும் உரையில், ''ஒரு யானையும் குருவியும் தம்முள் நட்பாடி—இன்னவாறு செய்தன என்பது போல'' என்று உதாரணம் கூறுகிறார்.

ஆகவே, அந்த நாளில் அதாவது மூவாயிரம் வருஷங்களுக்கு முன்பு தமிழில் (Aesoph's Fables) என்று சொல்லப்படும் கதைகளைப் போன்று பிராணி வர்க்கங்களைப் பற்றிச் சொல்லும் கட்டுக் கதைகள் இருந்தனவென்று ஏற்படுகிறது. அது போலவே, ''பொருளொடு புணர்ந்த நகை மொழி'' அதாவது வாழ்க்கையில் இயற்கையாக நடக்கும் சம்பவங்களை நகைச்சுவையுடன் மிகைப்படுத்திக் கூறும் கதைகளும் இருந்தனவென்று ஏற்படுகிறது. ஆனால் அந்தக் கதைகள், அந்த உரைநடை நூல்களெல்லாம் இப்போது எங்கே? கடலுக்கோ, கரையானுக்கோதான் இரையாகி இருக்க வேண்டும்!

ஆனால் அதிர்ஷ்டவசமாகத் தமிழில் பாடல்களின் உருவத்திலுள்ள சிறுகதைகள் சிலவற்றைக் கரையானுக்கு உணவாகாமல் மகோபாத்தியாய டாக்டர் சாமிநாதய்யர் அவர்களைப் போன்ற தமிழ்ப் பெரியார்கள் நமக்குக் காப்பாற்றிக் கொடுத்திருக்கிறார்கள். புறநானூறு, கலித்தொகை முதலிய பழந்தமிழ் நூல்களில் அநேகபாடல்கள், ஒவ்வொன்றும் காவிய ரஸம் பொருந்திய ஒரு சிறுகதையாக அமைந்திருக்கின்றன.

## கலித்தொகையின் காதல் கதை

தமிழ்க் காதலை முக்கிய விஷயமாகக் கொண்ட கதையிலிருந்து, ஸ்திரீ புருஷர்களின் காதலை விஷயமாகக் கொண்ட ஒரு கதைக்குப் போவோம். கலித்தொகையில் அத்தகைய கதை ஒன்று காணப்படுகிறது. கதாநாயகியே கதையைச் சொல்கிறாள். இந்த நாளிலும் சிறுகதைகள் கதாபாத்திரங்களே சொல்வது போல எழுதப்படு

கின்றனவல்லவா? ஆனால் அவை பெரும்பாலும், நான் இப்போது இந்த ரேடியோவின் முன்னால் பேசுவது போல, யாருக்குக் கதை சொல்லப்படுகிறது என்பது தெரியாமலே ஆரம்பமாகி முடிந்து விடும். கலித்தொகைக் கதையோ அப்படியில்லை. ''தோழி! கேள்!'' என்று கதாநாயகி கதையைத் தொடங்குகிறாள். ''நாம் சிறு குழந்தைகளாயிருந்த போது தெருவில் மண் வீடுகள் கட்டி விளையாடுவோமே, ஞாபகமிருக்கிறதா? அந்தச் சிறு வீடுகளை ஒரு துஷ்டச் சிறுவன் வந்து கலைத்து விட்டுப் போவானல்லவா? அவன்தான் நமது கூந்தலில் சூடிய மலர்களையும் பிய்த்தெறிந்து தொல்லை கொடுப்பான்! அந்தத் துஷ்டப் பிள்ளையைத் தோழி! நான் பார்த்து எத்தனையோ நாள் ஆயிற்று! ஒரு நாள் நானும் அம்மாவும் வீட்டுக்குள் இருந்தபோது, வாசலில் யாரோ ஒருவன் வந்து, ''தாகத்துக்குத் தண்ணீர் கிடைக்குமா?'' என்று கேட்டான். அம்மா என்னைத் தண்ணீர் கொண்டு கொடுக்கச் சொன்னாள். அந்தப்படியே நானும் போனேன். வாசலில் கட்டழகனான வாலிபன் ஒருவன் நின்று கொண்டிருந்தான். அவன், நமது மண் வீடுகளைக் கலைத்த பொல்லாத பிள்ளைதான் என்பதை நான் உடனே தெரிந்து கொண்டேன். தண்ணீரை நான் அவன் கையில் கொடுக்கும் போது அந்தப் பாவி வளையல் அணிந்த என் கையைப் பிடித்தான். நான் மருண்டு போய், ''அம்மா! இவன் செய்வதைப் பார்!'' என்று கத்தி விட்டேன். ஆனால் மறுகணத்தில், 'ஐயோ! என்ன அசட்டுத்தனம் செய்து விட்டோம்' என்று தோன்றியது. இதற்குள் அம்மாவும் வந்து விட்டாள்: ''அம்மா! இவன் தண்ணீர் குடிக்கும் போது தொண்டையில் விக்கிக் கொண்டு விட்டது'' என்று ஒரு சின்னப் பொய் சொன்னேன். அம்மா அவனருகில் சென்று அவன் முதுகைத் தட்டிக் கொடுத்தாள். அச்சமயம், தோழி, கடைக் கண்ணால் கொல்வான் போல் நோக்கி நகைக் கூட்டம் செய்தான் அக்கள்வன் மகன்!'' என்று ஓர் அருமையான வசவோடு கதாநாயகி கதையை முடிக்கிறாள்.

அக்கள்வன் மகன் கடைக்கண்ணால் கொல்கிறவனைப் போலப் பார்த்துச் சிரித்தவுடன் கதை நின்றுவிடுகிறது. அப்புறம் என்ன நடந்தது. மகளின் திருட்டுத்தனத்தைத் தாயார் கண்டுபிடித்தாளா, கதாநாயகியும் கதாநாயகனும் கலியாணம் செய்து கொண்டார்களா என்றெல்லாம் கவி நமக்குச் சொல்லவில்லை. அதை நமது மனக் கற்பனைக்கே விட்டு விடுகிறார்.

இந்தக் காலத்தில் சிறுகதை 'டெக்னிக்' என்று பிரமாதமாய்ச் சொல்கிறோமே, இரண்டாயிரம் வருஷங்களுக்கு முந்தி எழுதிய மேற்படி கதையில் அந்த டெக்னிக் எவ்வளவு பரிபூரணமாய் அமைந்திருக்கிறது! எவ்வளவு சொல் செட்டு! ரஸக் குறைவுதான் அணுவளவேனும் உண்டா? இதற்கும் இந்தக் காலத்தில் நாம் சினிமாக்களில் பார்க்கும் அஸப்யமான காதல் கதைகளுக்கும் எவ்வளவு தூரத்துக்கு எவ்வளவு தூரம்?

## பூணாரம் பூண்ட புதுமைக் கதை

காவிய ரஸமுள்ள சிறுகதைகளை விட்டு நகைச்சுவைக் கதைகளைக் கொஞ்சம் கவனிக்கலாம். இம்மாதிரி வசன நடைக் கதைகள் அழிந்தவை போக, ஒரு சில மிஞ்சி, இன்னமும் தமிழில் வழங்கி வருகின்றன. ஒரு கதையைக் கேளுங்கள்:

ஒருவன் சண்டைக்காரியான தன் மனைவியிடம், ''என் அத்தியந்த நண்பன் ஒருவனைச் சாப்பிட வரச் சொல்லியிருக்கிறேன்; அவனுக்கு விருந்தளிக்க வேண்டும்'' என்று நயந்து வேண்டினான். அவள் கடைசியாக அதற்குச் சம்மதித்ததும், ''இன்னொரு விஷயம். என் நண்பன் முன்னால் நீ ஏறுமாறாய்ப் பேசி என்னை அவமானப்படுத்தக் கூடாது'' என்றான் கணவன். ''ஆனால் நீயும் என்னைப் பொட்டை அதிகாரம் பண்ணக் கூடாது'' என்றாள் மனைவி.

''கொஞ்சம் அதிகாரம் பண்ணத்தான் பண்ணுவேன். இல்லாவிட்டால் என் நண்பன் முன்னால் எனக்கெப்படி மதிப்பு ஏற்படும்?'' என்றான் கணவன். ''சரி, போனால் போகிற

### சிறுகதை இலக்கணம்

''மனிதனுடைய விலை ரொம்பக் குறைந்து போச்சே'' என்று வருந்தும் ஒரு புகழ்பெற்ற அமெரிக்க எழுத்தாளர் சிறுகதையின் இலக்கணத்தை மிகத் தெளிவாகவும் அழகாகவும் விளக்குகிறார்: சொல்ல வேண்டியதை யெல்லாம் சொல்ல வேண்டும். அதைச் சீக்கிரமாகவும் சொல்ல வேண்டும். இரண்டு பேர் ஒரு ஹோட்டலில் அல்லது ரயில்வே ஸ்டேஷனில் சந்தித்து, 'நானும் நீயும் ஒரு குலம்—மனித ஜாதி. இந்தக் கதையைக் கேள், ஒப்புக் கொள்வாய்' என்று அவசரமாக கதையைச் சொல்லுவது போல் கதை ஓட வேண்டும் என்கிறார். சிறு பாத்திரத்தில் ரொம்ப வைக்க வேண்டும். அதற்கு வேண்டிய சாமர்த்தியம் காட்ட வேண்டும். கதையில் கருத்தின் பாரம் அளவுக்குக் குறையாமலும் மிஞ்சாமலும் இருக்க வேண்டும். கருத்து ரொம்ப அற்பமானாலும் தவறு; அதிக பாரமானாலும் தவறு, உபந்நியாசமாகப் போகும். இரண்டு விதத்திலும் பிழைபடாமல் இருக்க வேண்டும் என்கிறார்.

இந்தக் காலத்தில் நம் தேச மொழிகளில் சிறுகதைகள் ஏராளமாக எழுதுகிறார்கள். அவர்களுக்கு இக் குறிப்பு மிகவும் பயன்படும். நெடுங்கதைக்கும் சிறு கதைக்கும் வித்தியாசம் நீளத்தில் மட்டுமல்ல. இலக்கணமே வேறு.-ராஜாஜி



தென்று, மூன்று தடவை பொறுத்திருப்பேன். அதற்குமேல் அதிகாரம் பண்ணினாயோ என் விசுவரூபத்தைக் காட்டி விடுவேன்'' என்றாள். நண்பன் சாப்பிட வந்தான். அவனுடன் உட்கார்ந்து சாப்பிடும் போது, கணவன் மனைவியைக் கொஞ்சம் அதிகாரம் பண்ணினான். ஆனால் மூன்று தடவை ஆகி, நாலாவது தடவை வந்ததும், மனைவி கையிலிருந்த குழம்புச் சட்டியை அவன் தலையில் தொப்பென்று போட்டாள். சட்டி உடைந்தது. ஆனால் அதன் விளிம்பு மட்டுமே உடையவில்லை. அது கணவனுடைய கழுத்தில் ஒரு மாலையைப் போல் தொத்திக் கொண்டு நின்றது.

சாப்பிட வந்த சினேகிதன் இருக்கிறானே, அவன் வீட்டிலும் இந்த மாதிரி சம்பிரமங்கள் அடிக்கடி நடப்பது வழக்கமாம். எத்தனையோ சட்டிகள் அவன் தலையிலேயும் உடைபட்டதுண்டு. ஆனால் இம்மாதிரி சட்டியின் விளிம்பு மாலையாக விழுந்த அனுபவம் மட்டும் அவனுக்குக் கிடையாது. ஆகவே, இந்த அதிசயத்தைப் பார்த்ததும் அவன் கவியாகவே ஆகி,

**''வீணுயுடைந்த சட்டி வேணதுண்டு என்**
**தலைமேல்**
**பூணாரம் பூண்ட புதுமைதனைக்**
**கண்டதில்லை''**

என்று இரண்டு வரி பாட்டும் பாடி விட்டான்.

இம்மாதிரியான வாழ்க்கையோடு ஒட்டிய ஹாஸ்யக் கதைகளை எழுதிய தமிழ் நாட்டு டபிள்யூ. டபிள்யூ. ஜேகாப்ஸ்கள் எத்தனையோ பேர்கள் இருந்திருக்க வேண்டும். ஆனால் அவர்களுடைய பெயர்கள்கூட நமக்குத் தெரிந்திருக்க வில்லை.

## தற்காலக் கதாசிரியர்கள்

நல்லது: பழைய காலத்திலிருந்து இந்தக் காலத்துக்கு வருவோம். முற்காலத்தில் தமிழ் மொழி சிறுகதை இலக்கியத்தில் எவ்வளவு மேம்பட்டிருந்ததாயினும், இந்த நாளில் மேனாட்டார்கள்தான் அந்த இலக்கியத்தை வெகுதூரம் வளர்த்திருக்கிறார்கள். எத்தனை எத்தனையோ பிரசித்தமான ஆசிரியர்கள் நவ நவமான உத்திகளை அதாவது 'டெக்னிக்'கைக் கையாண்டு அற்புதமான சிறுகதைகளை எழுதியிருக்கிறார்கள். அந்தக் கதைகளைப் படித்த தமிழர்களில் சிலர், தமிழிலும் புதிய முறையில் சிறுகதைகளை எழுதத் தொடங்கினார்கள். இவர்களில் முதன்மையானவர் காலஞ்சென்ற ஸ்ரீ ஏ. மாதவய்யா. தமிழில் நாவல்கள் எழுதுவதற்கு ஸ்ரீ வேதநாயகம் பிள்ளை எப்படி வழிகாட்டியா யிருந்தாரோ, அது போலவே சிறுகதைத் துறையில் வழிகாட்டியவர் ஸ்ரீ மாதவய்யா என்று சொல்லலாம். அவர் எழுதிய சிறுகதைகள் ''குசிகர் குட்டிக் கதைகள்'' என்ற பெயருடன் நாலு பாகங்களாக வெளி வந்திருக்கின்றன. அந்தக் கதைகள் எல்லாம் சமூக வாழ்வை அடிப்படையாகக் கொண்டவை; காவிய ரஸம் பொருந்தியவை. அத்துடன், அவை கருத்தமைந்த கதைகளாகும். ஒவ்வொரு கதையிலும், சமூக சீர்திருத்தநோக்கம் ஏதேனுமொன்று இருக்கும்.

ஸ்ரீ மாதவய்யாவைப் போலவே, சமூக சீர்திருத்த நோக்கத்துடன் கருத்தமைந்த கதைகள் எழுதுகிறவர் தற்சமயம் தமிழ் நாட்டில் ஒருவர் உண்டு. அவர் நமது பிரதம மந்திரி ராஜாஜிதான்.

காலஞ்சென்ற வ. வே. சு. ஐயரின் 'லைலா மஜ்னூன்' 'குளத்தங்கரை அரச மரம்' என்னும் கதைகளைக் காவிய ரஸமுள்ள கதைக்கு உதாரணமாகச் சொல்லலாம். இந்நாளில் இன்னும் எத்தனையோ தமிழ் எழுத்தாளர்கள் விதம் விதமான சிறுகதைகள் எழுதித் தமிழ் மொழியை வளம்படுத்தி வருகிறார்கள். சிலர் காவிய ரஸமுள்ள கதைகள் எழுதுகிறார்கள். சிலர் ஹாஸ்யக் கதைகள் எழுதுகிறார்கள். சிலர் கருத்து அமைந்த கதைகள் எழுதுகிறார்கள். சிலர் கதைகளின் முடிவில் ஒரு திடுக்கிடும் சம்பவத்தை வைத்து நம்மைத் தூக்கிவாரிப் போடுகிறார்கள். சிலருக்குக் கதையில் வரும் கதாபாத்திரம் ஒவ்வொருவரையும் கொலை செய்து தீர்த்தாலொழியக் கதை முடிவு ரசப்படுவதில்லை! வேறு சிலருக்குக் கதை முடிவில் ஒரு கல்யாணம் வைத்தாலொழியக் கலாரசியப்படுவதில்லை.

இத்தகைய நவீன சிறு கதாசிரியர்கள் எல்லாருடைய தொண்டும் தமிழ்த் தாய்க்கு அவசியமேயாகும்.

நண்பர்களே! எனக்குக் கொடுத்திருந்த நேரம் ஆகி விட்டது. இன்னும் கொஞ்ச நேரம் இருந்தால் சிறுகதை எப்படி எழுத வேண்டும் என்பதைப் பற்றி என் அபிப்பிராயத்தை உங்களுக்குச் சொல்லி யிருப்பேன். ஆனால், அதைச் சொல்லாததினாலே உங்களுக்கு அதிக நஷ்டமில்லை. ஏனெனில், கதை எழுதுவது ஒருவரிடம் கற்றுக் கொண்டு நடக்கிற காரியமில்லை. கதை சொல்லும் ஆசை இருந்தால், அது எப்படியாவது பீறிக் கொண்டு வந்து விடும். இது வரையில், நான் சொன்னதில் ஏதாவது சிறப்பு இருந்தால் அதைத் தமிழ் மொழிக்கு அளியுங்கள். ஏதாவது குற்றம் குறை இருந்தால், அதை இந்த உயிரற்ற ஒலிக் கருவியின் மீது போடுங்கள். என்னுடைய பேச்சைக் கேட்டவர்கள், கேளாதவர்கள் எல்லாருக்கும் மிக்க வந்தனம்.

**வாழ்க நிரந்தரம் வாழ்க தமிழ்மொழி**
**வாழிய வாழியவே**
**வான மளந்த தனைத்தும் அளந்திடும்**
**வண் மொழி வாழியவே!**

# கொக்கரக்கோ...!

## போத்தன் ஜோஸப்



'ஸ்வராஜ்யா' ஆசிரியர் ஸ்ரீ போத்தன் ஜோஸப் அவர்கள் அந்தச் சஞ்சிகையில் எழுதிவரும் 'கூவும் சேவல்' (A Crowing Chanticleer) என்ற ஹாஸ்யப் பகுதியிலிருந்து சில துணுக்குகளை அளிக்கிறோம்.

❁ விவசாயத்தின் விசேஷ நிபுணராகிய பிரதம மந்திரி அவர்கள் உழவர்களுக்குச் 'சவுக்கடி' கொடுத்திருக்கிறார் — மண்ணைக் கிளறுகிற பழைய நாள் கலப்பையையே அவர்கள் உபயோகித்து வருகிறார்கள் என்பதற்காக. அடுத்த பொதுத் தேர்தல்களில் மாடு பூட்டிய ஏருக்குப் பதிலாக டிராக்டரைக் காங்கிரஸின் சின்னமாக வைத்துக் கொள்ளப் போகிறார்களாம்! அவை (நிலவரம்புச் சட்டத்தின் விளைவாகக்) கைக்குட்டை அளவுக்கு ஆகிவிட்ட வயல்கள் வழியே பாய்ந்து செல்லுமாம்!

❁ மகாராஷ்டிரத்தில் காங்கிரஸின் அமோகமான வெற்றி பற்றிச் செய்திகள் வந்திருக்கின்றன. ஜனசங்க அபேட்சகர்களைப் பெருக்கி வாரிப் போட்டு விட்டார்களாம். எனவே அடுத்த தேர்தல்களில் காங்கிரஸின் சின்னம் துடைப்பமாகத்தான் இருக்க வேண்டும்!

❁ பிச்சைக்காரன் (கோடீசுவரனிடம்):— உமக்கும் எனக்கும் அதிக வித்தியாசம் ஒன்றும் இல்லை. நீர் இரண்டாவது கோடி ரூபாய் சேர்க்கத் தொடங்கி யிருக்கிறீர்; நான் என் முதல் கோடியைச் சேர்க்க ஆரம்பித்திருக்கிறேன்.

❁ மந்திரிமார்கள் ஒருவர்கூட இல்லாததால் மே இரண்டாந் தேதியன்று (1962) ராஜ்ய சபை கலக்கப்பட்டது. சபாநாயகராகிய டாக்டர் ராதாகிருஷ்ணன் இம்மாதிரி இனி நடக்காது எனத் தாம் நம்புவதாகக் கூறினார். இதிலிருந்து என்ன தெரிகிறது? பத்தொன்பதே மத்திய மந்திரிகள் இருப்பது போதவே போதாது. மந்திரி சபையை இன்னும் விஸ்தரிக்க வேண்டும் என்று ஆட்சியாளர்கள் கூறுவது எவ்வளவு நியாயம் பார்த்தீர்களா?

❁ குமாரி ஜோன்ஸ் அலுவலகத்தை விட்டுச் சென்று மணமுடித்துக்கொள்ளு முன்பு அவளுக்குச் சகபாடிகள் பிரிவுபசாரம் அளித்தார்கள். சுத்திகரிப்பு யந்திரம் ஒன்றை அவளுக்குப் பரிசளித்தார்கள். அலுவலகத்தின் சார்பில் ஸ்ரீமான் பிங்பின் பேசினார்:

''குமாரி ஜோன்ஸ் அவர்களே! சுத்தம் செய்யும் இந்தக் கருவியை ஏற்றுக் கொள்ளுங்கள். தாங்கள் தங்களது புது இல்லத்தில் உள்ள அழுக்குகளையும், குப்பைகளையும் காணும்போதெல்லாம் எங்களை நினைத்துக்கொள்வீர்கள் என்று நம்புகிறோம்.''

❁ ''தடிக்கம்பு உடைந்து போகும் வரையில் பிரதிவாதியின் தலையில் நீர் அடித்தது தவறில்லை?''

''தவறுதான் நீதிபதி அவர்களே! தடிக்கம்பை உடைக்க வேண்டும் என்று நான் உத்தேசிக்கவேயில்லை.''

❁ ஆஸ்கார் ஒயில்டை அவரது நாடகமொன்றின் அரங்கேற்றத்துக்குப் பின் சந்தித்த நண்பர் நாடகம் எப்படி நடந்தேறியது என்று விசாரித்தார். ''நாடகம் மகத்தான வெற்றி. ஆனால் ரசிகர்கள்தான் மகத்தான தோல்வி'' என்றார் ஒயில்ட். பஞ்சசீலக் கொள்கை குறித்தும் இதே போல் வெற்றி முழக்கம் செய்யலாம்.

❁ வாழ்க டுடோரியல் கல்லூரிகள்! பரீட்சை முடிவுகளை யொட்டி பத்திரிகைகளுக்கு நிறைய விளம்பரம் கிடைக்கிறது. ஹாதியொரு கல்லூரி யொன்று, 'நேரில் வராமலே போதனை பெறலாம்' என்று விளம்பரம் செய்கிறது. மாணவர்கள் நேரில் கலந்துகொள்ளாமலே பரீட்சை எழுத பதில் ஆட்களும் தயாரிக்கக் கூடாதோ?

❁ 'சீனர்களைப் பின்னடையச் செய்திருக்கிறோம்! ஆனால் எவ்வளவு சீனர்கள் பின்வாங்கினார்கள், பின்வாங்குகிறார்கள் என்பது தெரியவில்லை' என்கிறார் பிரதமர். சீனர்கள் தங்கள் கழுத்தில் அடையாளச் சீட்டைக் கட்டிக் கொண்டு தாங்களாகவே பிடிபட்டால் கணக்கெடுப்பதில் சிரமமே இராது.

பழைய சம்பவம் ஒன்று நினைவு வருகிறது. இரண்டாம் உலக யுத்தம் தொடங்கியபோது ஆப்பிரிக்காவிலிருந்த ஆங்கில ராணுவ அதிகாரி ஒருவருக்குப் பின்வருமாறு மேலிடத்திலிருந்து கம்பியில்லாச் செய்தி வந்தது: ''யுத்தம் பிரகடனமாகி விட்டது. உமது மாவட்டத்தில் உள்ள எல்லா அயல்நாட்டு விரோதிகளையும் கைதாக்குக.''

உடனுக்குடன் ஆப்பிரிக்காவிலிருந்த அதிகாரி இப்படிச் செய்தி அனுப்பினார்: ''ஜெர்மானியர், பெல்ஜியத்தினர், அமெரிக்கர் யாவரையும் கைது செய்துவிட்டேன். தயவு செய்து நாம் யாருடன் யுத்தம் தொடங்கியுள்ளோம் என்று தெரிவிக்கவும்.''

❁ ''முதுகுப் பிடிப்புச் சரியாவதற்காக ஒரு கலவையைச் சில நாட்களுக்கு முன் உங்களிடம் வாங்கினேனல்லவா?''

''ஆமாம். முதுகுப் பிடிப்பு எப்படி இருக்கிறது?''

''அது சரியாகி விட்டது. ஆனால் கலவை முதுகில் பிடித்துக் கொண்டு விட்டது. அது போவதற்கு ஏதேனும் மருந்து தாருங்கள்.''



போத்தன் ஜோஸப்

—சித்திரம்: வாசு

# உங்கள் கேசம் உதிருகிறதா?

## இந்த மாதிரி அபாயக் குறிகள் அதை அறிவிக்கின்றன.



**பொடுகு**
இது சாதாரணமான உபாதை. இதை ஒருபோதும் அலட்சியம் செய்யக்கூடாது.





**கேசம் உதிருதல்**
உங்கள் ரோமம் உதிருகிறது, ஏனெனில், ரோமக்கால்களுக்குப் போதிய ஊட்டம் இல்லாததுதான்.

**இளமையில் வழுக்கை**
இந்நிலையை நீங்கள் அநேகமாகத் தவிர்த்திருக்கக்கூடும்.

பொடுகு, ரோமம் உதிருதல் மற்றும் கேசம் குறைதல் முதலிய உபாதைகளால் நீங்கள் சிரமப்பட்டால் இன்றே ப்யூர் சில்விக்ரீன் உபயோகிக்கத் தொடங்குங்கள். ப்யூர் சில்விக்ரீனில் உங்கள் ரோமத்தின் வளர்ச்சிக்குத் தேவையான எல்லா பதினெட்டு 'அமினே ஆஸிட்'களும் தீவிரமான வகையிலிருக்கின்றன. தலையில் நன்ருக அழுத்தித் தேய்ப்பதன் மூலம் ப்யூர் சில்விக்ரீன் ரோமகால்களில் புகுந்து அவைகளுக்குத் தேவையான இயற்கையான ஊட்டத்தையளித்து, கேசத்தை மறுபடியும் ஆரோக்கியமாக இருக்கச் செய்கிறது.

'ஆல் எபௌட் ஹேயர்' (All About Hair) என்ற, படங்கள் கொண்ட, இலவசப் புத்தகத்தை நீங்கள் பெற விரும்பினுல் தயவுசெய்து கீழ்க்கண்ட விலாசத்திற்கு எழுதவும்: டிபார்ட்மெண்ட் K-1 சில்விக்ரீன் அட்வைஸரி சர்வீஸ் தபால் பை 10022, பம்பாய்-1

**Silvikrin**

சில்விக்ரீன் – கேச ஆரோக்கியத்துக்கான வழி




### ப்யூர் சில்விக்ரீன்

கேச சம்பந்தமான உபாதைகளுக்குக் குணமளிக்கும் ஓர் மிகத் தீவிரமான தயாரிப்பு. ஒரு மாத கால வைத்தியத்துக்குப் போதுமானது.

### சில்விக்ரீன் ஹேர் டிரெஸிங்

உங்கள் கேசத்தை நாள் பூராவுக்கும் நன்கு சீவியபடி வைக்கிறது. பொடுகு ஏற்படாமல் தடுப்பதற்குப் போதுமான ப்யூர் சில்விக்ரீன் கலந்துள்ளது.




SP/1/P/6/63

# நகைச்சுவை வரலாறு



**கல்யாணசுந்தரி ஜகந்நாத்**

மனிதனுக்குப் பசி, தாகம் போல் சில ஜீவாதார உணர்ச்சிகள் உண்டு. அவற்றைப் போன்றதுதான் சிரிப்பும் என்று மனோதத்துவ ஆசிரியர்கள் கூறுகிறார்கள். இவற்றை வைத்துத்தான் மனிதனுடைய ஆசை, அபிலாஷைகள் உருவாகின்றன. மிருகங்கள் விளையாடித் தம் களிப்பைக் காட்டிக் கொள்வது போன்றதுதான் மனிதனின் சிரிப்பும் என்கிறார்கள். விளையாட்டு உள்ளத்தின் குதூகல உணர்ச்சி தசைகள், சதைகள் மூலம் வெளிப்படுகிறது. சிரிப்பு சற்று உயர்தரமான வெளியீடு-மனத்தின்பால் பட்டது அவ்வளவுதான்,

சிரிப்பில் சில மாறுபாடுகள் உள்ளன. ஒருவர் சிரிக்க ஆரம்பித்தால் அடுத்தவரையும் அச்சிரிப்பு உணர்ச்சி தொத்திக்கொண்டு சிரிக்க வைக்கிறது. உள்ளத்தின் நோவையோ உடலின் வலியையோ மறைக்க ஒருவிதமாகச் சிரிப்பதுண்டு. தற்காப்புக்காகச் சிரித்து மழுப்பும் வகையையும் பார்த்திருக்கிறோம். ஒருவர் சற்றும் எதிர்பாராத சமயத்தில், அவர் கழுத்திலோ, இடுப்பிலோ 'கிசுகிசு' மூட்டினால் சிரிக்கத் தொடங்குகிறார். அதே காரியத்தை நமக்கு நாமே செய்துகொண்டால் சிரிப்பு வருவதில்லை. ஆகவே வேறொருவரின் தொடர்பு ஏற்பட்டால் சிரிப்பு மூளுகிறது. இதிலிருந்து என்ன தெரிகிறது? சிரிப்புக்கு ஓர் 'எதிர்பாராத தத்துவம்' தேவைப்படுகிறது என்பது அல்லவா? இந்த எதிர்பாராத தன்மை நகைச்சுவைக்கே மிக மிக அவசியம் என்றும் தெரிகிறது. எவ்வளவுக்கெவ்வளவு இவ்வகைத் திடீர்த் தொடர்பு எதிர்பாராமல் ஏற்படுகிறதோ, அவ்வளவுக்கவ்வளவு நாம் அதிகமாகச் சிரிக்கிறோம்.

ஏதாவது ஒரு விநோதப் பொருளைக் காண நேரும்பொழுது மனிதனுக்குத் தன்னையும் அறியாமல் சிரிப்பு வருகிறது. மேற்படி சிரிப்புக்கு அடிப்படைக் காரணம் என்னவென்று ஆராய்ந்து நோக்குவோமானால் அவன் சற்றும் எதிர்பாராத ஒன்றைக் கண்டதே என்பது புலனாகும். எதிர்பாராத சம்பவத்தோடு மௌடீகமும் கலந்துகொண்டுவிட்டால் சிரிப்புக்கு கேட்கவா வேண்டும்!

சாதாரணமாக இயல்பான நிகழ்ச்சிகளுக்கும் புறம்பாக எது நிகழ்ந்தாலும் நமக்குச் சிரிப்பு வந்து விடுகிறது: ஆனால் அது உயிருக்கு அபாயம் உண்டாக்கும் நிகழ்ச்சியாக மட்டும் இருந்து விடக்கூடாது. பிறருடைய சிறு சிறு தோல்விகளைக் கண்டு நாம் சிரிக்கிறோம்; அதே மாதிரி நம்முடைய குறைபாடுகளையும் கண்டு சிரித்துக் கொள்கிறோம்.

மனித குலம் தோன்றிய நாளிலிருந்து எல்லா நாகரிக காலத்திலும் — சிற்சில மாறுபாடுகளுடன் — சிரித்து வந்திருக்கிறது. சில வகை கேளிக்கைகளும் திருவிழாக்களும் சில வகை இலக்கியங்களும் ராஜசபை விதூஷகர்களும் மனிதனுடைய அடிப்படை நகைச்சுவை உணர்ச்சியை நிறைவு செய்வதற்காக ஏற்படுத்தப்பட்டவையே.

வாழ்க்கையில் எப்படியோ அப்படியேதான் இலக்கியத்திலும். பொருந்தாத சம்பவங்களும், வேடிக்கையான பதச் சேர்க்கைகளும், கோணங்கித்தனமான சேஷ்டைகளும் சிரிப்பு மூட்டுகின்றன. இந்த நகைச்சுவை இலக்கியங்கள் பலவகைப்படும். நாடகங்களில் புகுத்தப்படும் விதூஷகன் என்ற பாத்திரம், பார்ப்பவர்களுக்குச் சிரிப்பூட்டுவதற்கென்றே ஏற்பட்டதல்லவா?

கி. மு. ஐந்தாம் நூற்றாண்டில் கிரேக்க நாகரிகம் மகோன்னத நிலையில் இருந்தது. அந்த நாட்களில் கிரேக்க நாடகம் இலக்கிய சிகரத்தை எட்டியது. அன்றைய அத்தீனிய மக்கள் யூரிபிடீஸ் எழுதிய சோக நாடகங்களைக் கண்டு எவ்வளவு அழுதார்களோ அவ்வளவுக்கு அரிஸ்டோபனீஸ் எழுதிய நகைச்சுவை நாடகங்களைப் பார்த்து விழுந்து விழுந்து சிரித்தார்கள்.

தற்காலத்தில் நாடகங்களில் நகைச்சுவைக்காகப் பொருந்தாத சம்பவங்களை நுழைப்பதோடு, சிரிப்பு மூட்டும் பாத்திரங்களையும் நுழைக்கிறார்கள். அந்நாட்களில் அரிஸ்டாட்டில் பிரத்தியேகமான பாத்திரமின்றிச் சோக நாடகத்தை எழுதலாம்; ஹாஸ்ய நாடகத்தை அதற்கென்று ஒரு பாத்திரமின்றி எழுத முடியாது என்றார். ஆனால் இன்று ஹாஸ்ய நாடகத்தை அதற்கென பிரத்யேக பாத்திரமின்றி எழுதி விடலாம், ஆனால் சோக நாடகத்தை அப்படி எழுத முடியாது என்ற கருத்து நிலவுகிறது. சம்பவத்தை விட, பாத்திரம் அவ்வளவு முக்கியமல்ல மங்களகரமான நாடகத்துக்கு.

தற்காலக் கருத்தையும் ஷேக்ஸ்பியர் நிரூபித்துக் காண்பித்துவிட்டார். சோக நாடகம்,





மனித வாழ்வின் உள் போராட்டங்களையே காட்டுகின்றது. ஆகவே சோக நாடகத்துக்கு வரம்பும் எல்லையும் உண்டு.

மேனாடுகளில் முன் காலத்திலிருந்தே ஹாஸ்ய நாடகங்களுக்கு வரம்பு ஒரு நிலையிலிருந்ததில்லை. முன் நாடகங்களில் கோமாளித்தனம் ஹாஸ்யத்துக்கு ஏற்றது என்று கருதப்பட்டு வந்தது. ஆனால் மக்களின் ருசி இன்று முற்றும் மாறிவிட்டது. சோக நாடகம் எழுதும் ஆசிரியனுக்கு எதையும் சமமாகப் பார்க்கும் நோக்குத் தேவை என்றால், மங்கள நாடகம் எழுதும் ஆசிரியனுக்கு மனப் பண்புகளை நுட்பமாகத் தீட்டும் திறமை தேவை என்று கருதுகிறார்கள் இன்று.

எந்தக் கலையும் சிறப்பது, சிருஷ்டி கர்த்தா, ரஸிகர்கள் ஆகிய இருவர்களின் உயரிய பண்பாடு, கலையை ரஸிக்கும் திறமை, அறிவு, ஆற்றல் ஆகியவற்றைப் பொருத்தே இருக்கிறது. அதிலும் நல்ல ஹாஸ்ய நாடகம் சிறக்க, ஆசிரியன் எவ்வளவு உயர்ந்த கலைப் பண்பும் திறமையும் உள்ளவனாக இருக்க வேண்டும்; ரஸிகர்கள் எவ்வளவு சிறந்த ரஸிகர்களாக இருக்க வேண்டும் என்பதைச் சொல்லத் தேவை இல்லை.

நம் நாட்டில் சோக நாடகம் கிடையாது. நம் புலவர்களும் நாடகாசிரியர்களும் எந்த நாடகத்தையும் மங்களகரமாக முடித்து வந்தார்கள். ஆனால் நகைச்சுவை கருதி விதூஷகர்களைப் படைத்து வந்தார்கள். இவர்கள் பெரும்பாலும் பெருந்தீனிக்காரர்களாகவோ, பொருத்தமற்ற செய்கைகளைச் செய்பவர்களாகவோதான் வடமொழி நாடகாசிரியர்கள் சிருஷ்டித்து வந்தார்கள். பிரதான கதைக்கும் விதூஷகனின் பகுதிக்கும்யாதொரு சம்பந்தமுமிராது. இப்படிப்பட்ட விதூஷக பாத்திரம், பாமர மக்களை மகிழ்விப்பதற்காகச் சிருஷ்டித்தார்களோ, என்னவோ!

இந்த வழிமுறையை விட்டு, விதூஷகனுக்கும் பிரதான நாடகப் பகுதியில் முக்கியப் பணி கொடுத்து விதூஷகனின் அந்தஸ்தை உயர்த்தியது மகாகவி காளிதாஸன் தான். மாளவிகாக்னிமித்ரத்தில், மன்னனைப் பட்ட மகிஷிக்குத் தெரியாமல் மாளவிகாவைச் சந்திக்க ஏற்பாடு செய்வது விதூஷகன் தான். மன்னனுக்கு ஒவ்வொரு கட்டத்திலும் ஆலோசனை கூறி நடத்திச் செல்வதைப் பார்க்கும்போது நாடகம் முழுவதும் அந்த விதூஷகனைப் பொறுத்தேயிருக்கிறது என்று சொல்ல வேண்டியிருக்கிறது.

ஷேக்ஸ்பியர் 'லியர்' என்னும் தம் சோக நாடகத்தில் விதூஷகனுக்கு முக்கிய பணி கொடுத்து எப்படி அந்தஸ்தை உயர்த்தினாரோ அப்படி மாளவிகாக்னி மித்ரத்தில் மகாகவி காளிதாஸன் உயர்த்தி விட்டார்.

வடமொழி லட்சண ஆசிரியர்கள், நகைச் சுவைக்கு மிக முக்கியமான இடமளித்தார்கள். காதலுக்கும் வீரத்துக்கும் இணையான இடம் அளித்தார்கள்.

அப்படியே நம் முன்னோர்கள் நகைச் சுவையை ஆறு வகையாகப் பிரித்தார்கள்.

ஸ்மிதம்: ஒருவகைச் சிரிப்பு. இதில் மனிதனின் கண்களில்தான் புத்தொளியும் மலர்ச்சியும் காணலாம்.

ஹஸிதம்: இந்தச் சிரிப்பில் சிறிது பற்கள் வெளிப்படும். — மேற்கூறிய இருவகைச் சிரிப்புக்களும் மிக உயர்தரமானவை.

விஹஸிதம்: தொண்டையிலிருந்து சங்கீதத் தொனியோடு சிரிப்பது. உபஹஸிதம்: இந்தச் சிரிப்பில் தலையாடும். இந்த இருவகைச் சிரிப்புக்களும் மத்தியமம் என்று கருதப்படுகின்றன.

அபஹஸிதம்: கண்களில் கண்ணீர் கசிந்து பெருகும்வரையில் சிரிக்கும் சிரிப்பு.

அதிஹஸிதம்: உடல் முழுதும் குலுங்கக் குலுங்கச் சிரிக்கும் சிரிப்பு. கடைசி இரண்டு வகைச் சிரிப்புக்களும் மிக மட்டரகமான சிரிப்புக்களாகக் கருதப்படுகின்றன.

இப்படிச் சிரிப்பைப் பகுத்துப் பார்த்திருப்பதிலிருந்தே வடமொழி இலக்கண ஆசிரியர்கள் எப்படிச் சிரிப்பை ஆராய்ந்திருக்கிறார்கள் என்பது புலனாகும்.



ஆகவே, எவ்வளவோ பாடுபட்டு எத்தகைய மகத்தான சாதனைகள் புரிந்திருந்தாலும், மனிதன் சற்று ஓய்வு பெற விதூஷகனும், நகைச் சுவையும் என்றென்றும் தேவை என்று ஏற்படுகிறதல்லவா?

---

நன்றி: சார்ட்டர்டு பாங்க் பொழுது போக்குச் சங்கத்தினரின் ஆண்டு மலர்.




**நா**தமுனி: என்ன மாணிக்கம் இந்நேரத்திலே எங்கே புறப்பட்டீங்க?

மாணிக்கம்: உறவினர்களைப் பார்த்து விட்டுத் திரும்பினேன். ரொம்ப நேரமாகி விட்டது. வீட்டுக்குப் போக இன்னும் ஒரு மைல் நடக்க வேண்டும். பஸ்ஸில் போகலாமென்றால் இனிமேல் பஸ் கிடைக்காது. அதனால்தான் எப்படிப் போவது என்று யோசிக்கிறேன்.

நாதமுனி: ஒரு மைல் தூரம்தானே? பொடி நடையிலே போய்விடலாமே!

மாணிக்கம்: போய்விடலாம்..... நானும் போய்க் கொண்டுதான் இருந்தேன்....

நாதமுனி: என்னய்யா இழுக்கிறீர்?

மாணிக்கம்: இழுக்காமல் என்ன பண்ணுவது? எப்பொழுதும் நானே நடந்துபோகிறது தான் வழக்கம். அந்த ராமசாமிப் பயல் தான்.... ஒரு நாள் என்னோடு வந்து எனக்குப் பயம் காட்டி விட்டான் சார்!

நாதமுனி: பயமா? என்னய்யா பச்சைப் பிள்ளை மாதிரி பேசறே? நீ இவ்வளவு கோழையா! அப்படி அவன் என்னய்யா சொன்னான்?....

மாணிக்கம்: சொல்கிறேன்....அந்தச் சாலையோடு போய்ச் சாத்தான்குளம் தாண்டினவுடனே ஒரு பெரிய பாழுங் கிணறு இருக்கிறதே—ரோடு ஓரமாக — அதைப் பார்த்திருக்கிறீரா?

நாதமுனி: பார்த்திருக்கிறீரா என்று கேட்கிறாயே! நான் அந்தக் கிணற்றங்கரையிலேயே ஓர் இரவு படுத்திருக்கிறேன். போதுமா? ஆமாம், அதுக்கென்னவாம்?

மாணிக்கம்: அங்கே ஒரு பேயும் முனியும் இருக்கின்றனவாம். அகாலத்திலே அந்தப் பக்கம் போகிறவர்கள் வீடு திரும்புவதே இல்லையாம்!

நாதமுனி: ஹஹ்ஹஹ.... ஹா... ஆமாம்! கிணறு வரையிலும் போவானேன்? என் பெரிலேயும் முனி இருக்கே, அதைக் கண்டு நீ பயப்படவில்லையா.... அட போய்யா.... தனியாகப் போவதற்குத்தானே பயப்படுகிறீர்? நான் வருகிறேன். என் கூட வாய்யா.

(இரண்டு பேரும் நடந்து பாழுங் கிணற்றை அடைகிறார்கள்)

நாதமுனி: இதானே ஐயா உங்க பாழுங் கிணறு? வருகிறீரா போய் எட்டிப் பார்த்து விட்டு வரலாம்....!

மாணிக்கம்: இப்ப வாண்டாங்க. இன்னொரு சமயம் பார்த்துக் கொள்ளலாம்...

நாதமுனி: என்னய்யா நடுங்கிச் செத்தீரே! பாழுங் கிணற்றையும் தாண்டியாகி விட்டது. பயம் இப்பவாவது விட்டதா?

மாணிக்கம்: நீங்க கூட வரும்போது என்னங்க பயம்? உங்க மாதிரி தைரியமாயும் பிறருக்கு உபகாரமாகவும் இருக்கணும். இன்னும் கொஞ்ச தூரம்தான்.... என் வீடு வந்து விட்டது.

நாதமுனி: பயத்தை விடுங்க. இது மாதிரி பயந்தீங்கன்னு தினமும் யார் உம்மை அழைத்து வருவார்கள்?

மாணிக்கம்: ரொம்ப நன்றிங்க: இதுதான் என் வீடு. நான் இனிமேல் உள்ளே போய்க்கறேன். நீங்க போய் வாருங்கள். ரொம்ப நேரமாகி விட்டது. உங்களுக்கு ரொம்ப நன்றி. ஆனால் ஒரு விஷயம்? ஞாபகம் வைத்துக் கொள்ள வேண்டும். அதாவது என்னோடு துணைக்கு வந்ததாக மட்டும் யாரிடமும் சொல்லாதீங்க. அப்புறம் எனக்கு ரொம்ப அவமானமாகப் போயிடும்.

நாதமுனி: எங்கே ஐயா போய் வருகிறது? நான் உங்க வீட்டிலேயே படுத்து விட்டுக் காலையில் தான் போகப் போறேன். ஆனால் ஒரு விஷயம். நீங்க கேட்டுக் கொண்ட மாதிரி உங்களுக்குத் துணை வந்துவிட்டுத் தனியாகத் திரும்பிப் போகப் பயந்து கொண்டு உங்கள் வீட்டிலேயே படுத்துக் கொண்டு விட்டேன் நான் என்பதை மட்டும் நீங்கள் யாரிடமும் தயவுசெய்து சொல்லி விட வேண்டாம்!



# இந்திய மொழிகளில் நகைச்சுவை

## நிறுத்து, நிறுத்து!

சமஸ்கிருத மொழியிலே 'மிருச்சகடிகம்' என்னும் நாடகம் மிகப் புகழ் பெற்றது. நவரசங்களும் ததும்பிய நாடகம். நகைச் சுவையும் எடுப்பாகக் கையாளப்பட்ட நாடகம். அதிலிருந்து ஒரு காட்சியின் சுருக்கம் தான் கீழ்க் காணும் கருத்துக் கொண்ட சம்பாஷணை.

நல்ல மழை பெய்து ஓய்ந்த நேரம். அரச குடும்பத்தைச் சேர்ந்த சகாரனுக்குப் பூங்காவில் போய் உலவி விட்டு வர வேண்டும் என்ற ஆசை. அரச குடும்பத்துக்கேற்ற இரட்டை மாட்டு வண்டியில் பூங்காவுக்குச் செல்கிறான். பூங்காவின் அருகில் சென்றதும் வண்டிக்காரன் வண்டியை நிறுத்தி விடுகிறான்.

சகாரன்: ஓட்டு, ஓட்டு! உள்ளே ஓட்டு! ஏன் நிறுத்தி விட்டாய்?

வண்டிக்காரன்: இனியும் வண்டியை மேலே ஓட்டினால் ஆபத்துங்க!



சகாரன்: ஆபத்தா? என்ன ஆபத்து?

வண்டிக்காரன்: வண்டி மாடுங்க உளையிலே மாட்டிக் கொண்டு இறந்துபோயிடுமுங்க!

சகாரன்: அந்தக் கவலை உனக்கு வேண்டாம். இந்த மாதிரி ஆயிரம் ஜோடி வாங்க எனக்குச் சக்தி இருக்கிறது. பேசாமல் ஓட்டு!

வண்டிக்காரன்: வண்டி உளையிலே புதைந்து போயிடுமுங்களே!

சகாரன்: போனால் போகட்டுமே! இந்த மாதிரி ஐயாயிரம் வண்டிகள் கொக்க என்னால் முடியும். ஓட்டு!

வண்டிக்காரன்: இந்த உளையிலே மாட்டிக்கிட்டா நானே செத்துப் போயிடுவேனுங்களே!

சகாரன்: போனால் என்ன? உன்னைப்போல் பத்தாயிரம் பேர் எனக்கு வேலைக்குக் கிடைப்பார்கள். கவலைப்படாமல் ஓட்டு!

வண்டிக்காரன்: மகாராஜாவே உளையிலே புதைந்து செத்து விடுவீங்களே!

சகாரன்: என்ன? நான் செத்து விடுவேனா? அப்படியானால் திருப்பு வண்டியை!

## நஞ்சுண்டார்

பாற்கடலைக் கடைந்த பொழுது, எழுந்த விஷத்தைச் சிவபெருமான் உண்டு 'நஞ்சுண்டன்' என்று பெயர் கொண்டாரே; அப்படிச் செய்தது, **உண்மையில் அந்த விஷத்தின் வெப்பத்திலிருந்து உலகைக் காக்கவா?**

"இல்லை, இல்லை!" என்கிறார் ஒரு சமஸ்கிருதக் கவி.

சிவபெருமானது வீட்டில் ஒரே கலகமாம். குடும்பமே நரகமாகக் காட்சி அளித்ததாம். அதைக் காண அவருக்குப் பொறுக்க வில்லையாம். அதனால்தான் ஆலாஹல விஷத்தையே அருந்தி உயிரை மாய்த்துக் கொள்ள முயன்றாராம். தற்கொலை செய்து கொள்ளுமளவுக்குத் துணிவு கொள்ளக் குடும்பத்தில் என்ன கலகம் என்று கேட்கத் தோன்றுகிறதல்லவா?

கவி சொல்கிறார்:



விநாயகப் பெருமானது வாகனமான மூஞ்சூறைச் சிவபெருமானது ஆபரணமான பாம்பு விழுங்கப் பார்க்கிறதாம். அப்பாம்பைமுருகப் பெருமானது மயில் கொத்தப் பார்க்கிறதாம். பார்வதியின் வாகனமான சிங்கமோ ஆனைமுகத்தானையே அடித்துச் சாப்பிட முயல்கிறதாம். பரமசிவன் தலையில் தூக்கி வைத்துக்கொண்டு கூத்தாடும் கங்கையைக் காணக் காணப் பார்வதிக்குப் பற்றிக்கொண்டு வருகிறதாம். பிறைச் சந்திரனுக்கோ நெற்றிக் கண்ணிலிருந்து எழும் கோபத் தீயைக் கண்டால் பிடிக்கவில்லையாம். இப்படி ஒருவரை ஒருவர் கபளீகரம் செய்ய முயல்வதைக் காணச் சிவபெருமானுக்கு நிம்மதியே போய், நஞ்சைத் தின்று விட்டாராம்!

## இன்னுமொரு கிரகம்

இந்த மாப்பிள்ளைகள் மாமனார்களுக்கு எப்படித் தோன்றுகிறார்கள், தெரியுமா? ஏதனை பெண்களைப் பெற்ற கவியோ, தெரியவில்லை! வெகு அழகாகச் சொல்லுகிறார்:

'சோதிட சாஸ்திரப்படி ஒன்பது கிரகங்கள் தான் உண்டு என்று யாரோ ஒரு புண்ணியவான் தப்புக் கணக்குப் போட்டுப் போயிருக்கிறார். உண்மையைக் கேட்கப் போனால், இந்த மாப்பிள்ளைகள் பத்தாவது கிரகமாவார்கள். எப்பொழுதும் வக்கரித்துக் கொண்டிருப்பார்கள். சிடுசிடு வென்று இருப்பார்கள். எப்பொழுதும் தம்மைப் பூசிக்க வேண்டும் என்று விரும்புவார்கள். தினம் கன்னி ராசியில் இருந்து கொண்டு நவக்கிரகங்களைக் காட்டிலும் உபத்திரவப்படுத்துவார்கள்.'

இதைக் கேட்டு இந்தக் காலத்து மாப்**பிள்ளைகள் முரண்டு பிடித்து வக்கரித்துக் கொள்ளாமல் இருக்க வேண்டுமே!**

## மாமனார் வீடு



சாரமற்ற இந்த உலகத்தில் 'சம்'சாரம் இருக்கவே செய்கிறது என்கிறார்கள் பெரியவர்கள். சம்சாரத்தின் பிறந்த வீடு, அதாவது மாமனார் வீடு மக்களுக்குச் சொர்க்கத்துக்குச் சமானமாகும் என்கிறது வடமொழிச் சுலோகம் ஒன்று. அது மட்டுமா? அதற்கு எடுத்துக்காட்டாக அரனும் அரியும் கூட இருக்கிறார்கள்.

பார்வத ராஜன் புத்திரியான பார்வதிக்குப் பிறந்த வீடு ஹிமாசலம் அல்லவா? பரமசிவன் மாமனார் வீட்டைத் தம் இருப்பிடமாகக்கொண்டு விட்டார். கைலாசத்தில் அவர் வாழ்கிறார்.

அதே போலக் கடலரசன் மகள் அல்லவா மகாலக்ஷ்மி? பாற்கடலைத் தம் இருப்பிடமாகக் கொண்டு மகா விஷ்ணுவும் 'மாமனார் வீட்டி'ன் பெருமையை உணர்த்துகிறாராம், மாப்பிள்ளைகளுக்கு! மாமனார் வீட்டு மாப்பிள்ளையாகிச் சாரமற்ற இந்த உலகத்தில் சம்சாரத்தோடு வாழ உபதேசிக்கிறார்களாம், சிவனும் விஷ்ணுவும்.

## ஒரு ரூபாய் எருமை! - ஹிந்தி

இந்தக் கதை பாடலிபுரத்தில் நடந்தது. அங்கே ஒரே ஒரு எசமான் இருந்தான். அவனிடம் ஒரே ஒரு எருமை இருந்தது. அதை மேய்க்க ஒரே ஒரு ஆளைப் போட்டான். அந்த ஆளிடம் மேய்ச்சலுக்கு எருமையை ஒப்படைக்கும்போது அவன் ஒரே ஒரு விஷயத்தைத் தெளிவுபடுத்தினான். அது ஒரே ஒரு நிபந்தனை. அது என்னவெனில், எருமை காணாமல் கெட்டுக் கிட்டுப் போய்விட்டால் அந்த நிமிஷமே அதற்குண்டான கிரயமாக முந்நூறு ரூபாயை எண்ணி வைத்துவிட வேண்டும் என்பதே.

அந்த ஆள் அதற்குச் சம்மதித்து எருமையை மேய்க்க ஓட்டிக்கொண்டு போனான்.

ஒரு நாள் நடுப்பகல் மரத்தடி நிழலில் அவன் உட்கார்ந்து ஆனந்தமாக ஒரே ஒரு பாட்டை முணு முணுத்துக் கொண்டிருந்தான். எருமையும் ஒரே ஒரு ஓரத்தில் படுத்து அசை போட்டுக் கொண்டிருந்தது.

அவனுக்கு அப்போது ஒரே ஒரு யோசனை தோன்றியது. 'முந்நூறு ரூபாய் கிடைத்தால் இந்த எருமையை நமக்குச் சொந்தமாக்கிக் கொண்டு விடலாமே?' என்று எண்ணினான். ஆனால் முந்நூறு ரூபாய்க்கு எங்கே போவது? தீவிர யோசனைக்குப் பின் அவனுக்கு நல்லதொரு யோசனை தோன்றியது.



மறுநாள் காலை எருமையை மேய்க்க ஓட்டி வரும்பொழுது அதன் கறுப்பு உடலில் இருபுறத்திலும் வெள்ளைச் சாக்குக் கட்டியினால் கொட்டை கொட்டையான எழுத்துக்களில் பளிச்சென்று எழுதினான்:

"ஒரே ரூபாயில் இந்த எருமையைப் பெறலாம்."

வழியில் ஒவ்வொரு ரூபாயாகப் பெற்றுக்கொண்டு போனான். ரூபாய் கொடுப்பவர்களின் பெயரையும், விலாசத்தையும் குறித்துக்கொண்டும் போனான்.

மாலையில் பணம் கொடுத்தவர்களின் பெயர்களுக்குச் சீட்டுக் குலுக்கிப் போட்டான். ஒரே ஒரு சின்னக் குழந்தையை விட்டு ஒரே ஒரு சீட்டைமட்டும் எடுக்கச் சொன்னான். சீட்டு ஓர் ஏழைக் குடியானவன் பெயருக்கு விழுந்தது. அவனுக்கு அந்த எருமையைச் சொன்னபடி அவன் கொடுத்த ஒரு ரூபாய்க்கே கொடுத்து விட்டான்.

எருமையின் சொந்தக்காரனிடம் சென்று எருமை கெட்டுவிட்டது என்று சொல்லி அதே நேரம் நிபந்தனைப் பிரகாரம் முந்நூறு ரூபாயை எண்ணி வைத்தான். பிறகு தன் பையைத் திறந்து எண்ணிப் பார்த்தால் ஆயிரத்து நானூறு ரூபாய் இருந்தது. ஒரு ரூபாய் எருமை தனக்கு ஆயிரத்து நானூறு ரூபாய் தந்ததைக் கண்டு மகிழ்ந்தான்!

## வெற்றிக்கு வழி - குஜராத்தி

### முதல் களம்

முதல்வர்: அடுத்த தடவை எங்கள் மன்றக் கூட்டத்தில் தங்கள் சொற்பொழிவுக்கு ஏற்பாடு செய்யப் பெரிதும் விரும்புகிறோம்.

இரண்டாமவர்: பயன் என்ன? மக்கள் தான் சொற்பொழிவு கேட்க வருவதேயில்லையே!

முதல்வர்: அதெல்லாம் இல்லை. இந்தத் தடவை பாட்டு, கூத்து எல்லாம் வைத்து அமர்க்களப்படுத்துவோம். பொதுமக்கள் கட்டாயம் வருவார்கள்.

இரண்டாமவர்: ஆயினும் என்னால் ஐந்தரை மணிக்கு முன்னால் வர முடியாதே!

முதல்வர்: பரவாயில்லை. அதுவரையில் இன்னிசைக் கச்சேரிக்கு ஏற்பாடு செய்து மக்களை மகிழ்வித்து நிறுத்தி வைக்க முயல்கிறோம். (இருவரும் போகிறார்கள்)

### இரண்டாம் களம்

முதல்வர்: அன்றென்ன, நீங்கள் வராமல் இருந்து விட்டீர்களே சொற்பொழிவுக்கு? நீங்கள் வருவீர்களென்று இரவு ஏழு மணி வரையில் இசைக் கச்சேரியை நீடிக்கக்கூடச் செய்தோம். ஏன் வரவில்லை?

இரண்டாமவர்: நான் எப்படி வருவது? கூட்டம்தான் ஏராளமாகக் கூடியிருந்ததே! உள்ளே நுழைய எனக்கு வழி கிடைத்தால்தானே?

முதல்வர்: அப்படியானால் கூட்டத்தை வெற்றிகரமாக நடத்தச் சொற்பொழிவுகளைக் காட்டிலும் இன்னிசைதான் சிறந்தவழி என்று சொல்லுங்க!

(இருவரும் பிரிகிறார்கள். நாடகமும் இனிது முடிவுறுகிறது).

## வில்லை ஒடித்தது யார்? - பஞ்சாபி

கதையில்லை, கற்பனை இல்லை, கட்டுக் கதை இல்லை. இது உண்மையாகவே நடந்தது. என் நண்பன் கூறியது. நம்பினால் நம்புங்கள், நம்பாவிட்டால் போங்கள்!

ஓர் உபாத்தியாயர் புதிதாக ஆசிரியப் பயிற்சி பெற்ற பின் ஒரு பள்ளியில் வேலைக்கு அமர்ந்தாராம். ஆரம்ப சூரத்தனம் என்பார்களே, அது போல் ஆரம்பத்தில் நாம் மேற்கொண்ட தொழிலில் உற்சாகம் காட்டுவது யாருக்கும் இயல்புதானே? அதுவும் இந்த உபாத்திமைத் தொழில் இருக்கிறதே, இது மாணவர்களுக்குக் கண் திறந்து விடுவதாகும். கல்வியை நிரப்பி அறிவொளியைப் பரப்புவதாகும். இந்தப் பேருண்மையை ஏதோ ஒரு நூலில் அவர் படித்திருந்தார். போதனை முறையில் பழையது — புதியது இரண்டையும் அவர் நன்கு கற்று உணர்ந்திருந்தார்.

'ஒரு சிறு பள்ளியின் சூழ்நிலையையே மாற்றியமைக்கும் சாமர்த்தியம் எனக்கு இல்லையா? புது முறையில் அவர்களுக்குப் போதித்து நாட்டையே அடியோடு மாற்றிவிடுவேன். குழந்தைகள் நாட்டின் வருங்காலச் செல்வங்கள். வருங்கால சமுதாய மாளிகையின் வலுவான அஸ்திவாரக் கற்கள்' இப்படி யெல்லாம் எண்ணங்கள் அவரது மனக் கடலை அலைமோதச் செய்து கொண்டிருந்தன.



முதல் நாள் முதல் பீரியடில் புதிதாக எட்டாவதிலிருந்து ஒன்பதாவது வகுப்புக்குத் தேறிப்போயிருக்கும் மாணவர்களுக்கு வரலாறு போதிக்கும் பொறுப்பு அவருக்கு அளிக்கப்பட்டது.

வகுப்பு அறைக்குள் நுழைந்தவர் ஒரு முறை கம்பீரமாக மாணவர்களைப் பார்த்தார். தொண்டையைக் கனைத்துக் கொண்டார். பிறகு வகுப்புக் கோடியில் இடது புறத்துப் பெஞ்சியின் ஓரமாக அமர்ந்திருந்த மாணவன் ஒருவனை ஆள்காட்டி விரலால் சுட்டிக் காட்டி, உபாத்தியாயர்களுக்கே உரிய மிடுக்கான குரலில், "ஜனகன் வில்லை ஒடித்தது யார்?" என்று கேட்டார்.

புது உபாத்தியாயர் என்ற பயம் ஒரு புறம், வெட வெடக்கும் குளிர் ஒரு புறம். இரண்டு கைகளையும் மேஜையில் ஊன்றிக்கொண்டு மெதுவாக எழுந்து நின்றான் பையன். கால்கள் கடகட வென்று தந்தி பேசிக் கொண்டிருந்தன.

"சார், சார்! நான் இல்லை சார்!"

எப்படியோ சொல்லி முடித்தான் பையன் இந்தச் சொற்களை.

விடையைக் கேட்ட ஆசிரியருக்குப் பேரதிர்ச்சியாய்ப் போய்விட்டது. மேலே சொல்லிக் கொடுக்கவோ கேள்வி கேட்கவோ அவருக்குத் துணிச்சல் ஏற்படவில்லை. சட்டென்று வகுப்பை விட்டு வெளியேறினார். உபாத்தியாயர்கள் அறைக்குச் சென்று ஒன்பதாவது வகுப்புக்கு வரலாறு போதிக்கும் பழைய உபாத்தியாயரைப் பார்த்தார்.

"சார், இன்று உங்கள் ஒன்பதாவது வகுப்புக்கு வரலாறு சொல்லிக் கொடுக்கப் போனேன். வகுப்புக் கோடியில் இடது புறத்துப் பெஞ்சில் ஓரமாக உட்கார்ந்திருப்பானே, ஒரு பையன், ஜதோராம் என்று! அவனிடம் 'ஜனகர் வில்லை ஒடித்தது யார்?' என்று கேட்டேன். நடுங்கிக் கொண்டே, 'நான் இல்லை சார்!' என்றான். பதிலைக் கேட்டு எனக்கு வியப்பாயிருந்தது!" என்றார்.

'சார், ஜதோராம் ரொம்ப நல்ல பையன். பொய் சொல்ல மாட்டான்!" என்றார் வகுப்பின் பழைய ஆசிரியர்.

இதைக் கேட்டுப் புதிய உபாத்தியாயருக்கு மேலும் பேரதிர்ச்சியாய்ப் போய்விட்டது. பேச்சை அப்படியே நடுவில் நிறுத்திவிட்டுத் தலைமை உபாத்தியாயரிடம் சென்றார்.

"என்ன?" என்று கேட்கும் தோரணையில் தலையை ஆட்டினார் தலைமை ஆசிரியர்.

"ஒன்பதாவது வகுப்புக்குப் போனேன். ஒரு மாணவனிடம் 'ஜனகர் வில்லை ஒடித்தது யார்?' என்று கேட்டேன். 'நான் இல்லை' என்றான். முன்பு அந்த வகுப்பை எடுத்துக் கொண்டிருந்த ஆசிரியரிடம் போய்ச் சொன்னால், 'ஜதோராம் ரொம்ப நல்ல பையன். பொய் சொல்ல மாட்டான்' என்கிறார்."

புது உபாத்தியாயர் தம் பேச்சை முடித்துக் கூட இருக்கமாட்டார்; தலைமை ஆசிரியரின் புருவங்கள் நெரிந்தன. கோபத்தில் கண்கள் 'ஜிவு ஜிவு' என்று சிவந்தன. அவரது வலது கை அவரையறியாமலே மேஜை மீது கிடந்த மூன்றடிப் பிரம்பை எடுத்துக் கொண்டது. "என்ன பையன்களோ, என்ன வாத்தியார்களோ! எல்லோருமே பொய்யர்கள்! அடி உதவுகிற போல் அண்ணன் தம்பிகூட உதவ மாட்டான் என்கிறது உண்மையாகத்தான் போச்சு! இதோ ஒரு நொடியில் உண்மையைக் கக்க வைக்கிறேன், பாருங்கள்!" என்று எழுந்தார்.

'யார் அங்கே?' என்று தலைமையாசிரியர் கேட்பதற்குள்ளாகவே, புது உபாத்தியாயர் பள்ளிக்கூடத்தை விட்டு வெளியேறி விட்டார். அவர் மனசு 'பட் பட்' என்று அடித்துக் கொண்டது.

தெருவில் இறங்கினவர் நேரே மாவட்டக் கல்வி அதிகாரியின் அலுவலகத்தை அடைந்தார். "என்ன சார், என்ன விசேஷம்?" என்று புன்முறுவலுடன் கல்வி அதிகாரி அவரை வரவேற்று உட்காரச் சொன்னார்.

"சார்! நான் கால்வா ஹைஸ்கூலில் இன்றுதான் உபாத்தியாயராக அமர்ந்திருக்கிறேன். ஒன்பதாவது வகுப்புக்கு 'வரலாறு'

சொல்லிக் கொடுக்கப் போயிருந்தேன்: 'ஜனகன் வில்லை யார் ஒடித்தது?' என்று உபகாரச் சம்பளம் பெறும் மாணவன் ஒருவனைக் கேட்டேன். 'நான் இல்லை சார்' என்று அவன் பயந்து கொண்டே பதில் சொன்னான். பழைய வகுப்பு உபாத்தியாயரிடம் இதுபற்றிக் கூறிய பொழுது, 'ஊதோராம் நல்ல பையன். பொய் சொல்ல மாட்டான்!' என்றார். உடனே தலைமையாசிரியரிடம் போய்ப் புகார் செய்தேன். அவர் ஆத்திரம் தெறிக்க, "என்ன பையன்களோ, என்ன உபாத்தியாயர்களோ? எல்லோருமே பொய்யர்கள். அடி வாங்காமல் யாருமே உண்மையைச் சொல்ல மாட்டார்கள்' என்றார். இப்படியிருக்குமானால், கல்வி அதிகாரியான நீங்களே சொல்லுங்கள், என்ன படிப்பைச் சொல்லிக் கொடுத்து என்ன பூண்டு வாழ்வது? பையன்களின் நிலை என்ன ஆவது? நாட்டின் கதி என்ன ஆவது?'' — உணர்ச்சி வேகத்தில் புதிய உபாத்தியாயர் படபடவென்று பேசிக் கொண்டே போனார்.

''நீங்கள் எதற்காக இவ்வளவு கவலைப் படுகிறீர்கள், உடைந்து போனது போய் விட்டது. வருத்தப்பட்டுப் பயன் என்ன? புது வருஷத்துப் பட்ஜெட்டிலே புதிதாக ஒன்று செய்யச் சொல்லி விட்டால் போச்சு! நீங்கள் கவலைப்படாமல் உங்கள் காரியத்தைப் பாருங்கள்!''- என்று கல்வியதிகாரி மென்னகையுடன் அவர் கவலையைக் குறைக்கும் பாவனையில் பேசினார்.



சுவரில் மாட்டியிருந்த கல்வி மந்திரியின் சித்திரமும் பெருமித உணர்வோடு சிரித்தது!

## வாசகன் எங்கே? - வங்காளி

ஏறக்குறைய பத்தாண்டுகளுக்கு முன் நடந்தது.

அஸன்ஸோல் ஸ்டேஷனில் வண்டியை எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன். என்னருகிலேயே ஒரு பிரமுகரும் இருந்தார். அவர் கையில் ஒரு பெரும் புஸ்தகம் இருந்தது. பெரிய நவீனம் அது. பேச்சுவாக்கில், வண்டிக்காக அவர் வெகு நேரம் காத்திருக்க வேண்டும் என்பது தெரிந்தது. என் வண்டி வரவும் மூன்று மணி நேரம் இருந்தது.

''உங்கள் கைப் புஸ்தகத்தை ஒரு முறை பார்க்கலாமா?'' என்று கேட்டேன் நான்.

''தாராளமாக!'' என்றார் அவர்.

நல்ல கோடை வெய்யில். நடுப் பகல் நேரம். ஸ்டேஷன் கூரையோ தகரத்தால் ஆனது. அனலைக் கக்கிக்கொண்டிருந்தது.

அதையெல்லாம் பொருட்படுத்தாமல் நான் அதை வாங்கிப் படிக்கலானேன்.

அற்புதமான நாவல்! பிரமாதமான நாவல்! இது வரை இம்மாதிரியான நாவலை நான் படித்ததே யில்லை. எனவே, புத்தகத்தில் நான் என்னை மறந்து மூழ்கினேன்.

**இரண்டு மணி நேரம் ஓடி விட்டது, ஓடுவது தெரியாமல்.**

புத்தகத்தின் சொந்தக்காரர் அடிக்கடி ரயில்வே கால அட்டவணையைப் புரட்டிப் புரட்டிப் பார்த்துக் கொண்டிருந்தவர் ''உங்கள் வண்டி வரும் நேரமாகிவிட்டது!'' என்றார்.

அவர் பேச்சை நான் காதில் வாங்கிக் கொள்ள வில்லை. இரண்டு மூன்று முறை அவர் கனைத்து மீண்டும் நினைவுறுத்தினார்.

நான் ஆறுக்குற்றுக் கடிகாரத்தைப் பார்த்தேன். வண்டி கூட ஊதி விட்டது.

புத்தகம் முடிய வில்லை. என்ன செய்வது? யோசித்தேன். ''சரி, அடுத்த வண்டிக்கே போகிறேன். புத்தகத்தை முடிக்காமல் போக மனம் வரவில்லை!'' என்றேன்.

புத்தகத்தின் சொந்தக்காரர் என் பேச்சைக் கேட்டு வாயடைத்துச் சிலையானார்.

வண்டி போய் விட்டது. நான் படித்துக் கொண்டேயிருந்தேன்.

ஆனால் நான் புத்தகத்தை முழுசாக முடிக்க முடியவில்லை. ஏனெனில், கடைசிப் பக்கங்கள் பல காணாமல் போயிருந்தன.

நான் புத்தகச் சொந்தக்காரரைப் பார்த்து, ''சுவாமி! கடைசியில் பலபக்கங்கள் இல்லையே! முன்னாடியே சொல்லியிருக்கக் கூடாதா?'' என்று எரிந்து விழுந்தேன்.

* * *

பத்தாண்டுகளுக்குப் பின் அந்தப் புத்தகம் எனக்கு மீண்டும் கிடைத்தது, என் சகோதரியின் புக்ககத்தில். நான் அவளை அவள் புக்ககத்துக்குக் கொண்டு விடப் போயிருந்தேன். அன்றைக்கே நான் ஊருக்குத் திரும்ப வேண்டியிருந்தது. ஆயினும் அந்தப் புத்தகத்தைப் படிக்கும் ஆவலில் தங்கி விட்டேன்.

நான் படிக்காத கடைசிப் பகுதியை மட்டும் படிக்க அவசரம் காட்டவில்லை. முழுப் புத்தகத்தையும் மீண்டும் ஒரு முறை படித்து விடுவது என்று முழு மூச்சுடன் உட்கார்ந்து விட்டேன்.

சில பக்கங்கள் படித்தவன் நிறுத்தினேன்.

புத்தகத்தை ஒரு முறை ஆதியோடு அந்தமாகப் புரட்டினேன். அதே புத்தகந்தான்!

இன்னும் சில பக்கங்கள் படித்தேன். ஆனால் இதென்ன? தலைகால் இல்லையே கதைக்கு!

மீண்டும் படிக்க முயன்றேன். முடியாது, இனி படிக்க முடியாது, பொறுமையோடு.

அஸன்ஸோல் ஸ்டேஷனில் கொளுத்தும் வெய்யில் நேரத்தில் படித்தேனே முழுமூச்சுடன், அதே புத்தகந்தானா இது?

இத்தனை குப்பையாகவும் ஒரு புத்தகம் எழுத முடியுமா? இதை முழுசாகப் படிப்பது முடியாத காரியம்.

பத்தாண்டுகளுக்கு முன் ஆர்வம் மிகுந்திருந்த அந்த வாசகன் எப்பொழுது என் உள்ளத்தில் மரித்தானோ, தெரியவில்லை!

இம்முறை — முழுசாகப் புத்தகம் கிடைத்தும்கூட **என்னால் அந்தப் புத்தகத்தை முழுசாகப் படித்து முடிக்க முடியவில்லை.**

**தொகுத்தவர்: ரா. வீ.**

## அஞ்சலி



டிசம்பர் 13-ந் தேதியுடன் ஸ்ரீமதி சுந்தரம்மாள் மறைந்து ஆண்டுகள் மூன்ருகின்றன. எத்தனை ஆண்டுகளானுல் என்ன? உளம் நிறைந்த அன்பின் நினைவுகள் மூன்ருண்டில் மாண்டுவிடுமா? இன்று ஸ்ரீமதி சுந்தரம்மாளின் பிரியக் கணவர் திரு வி. தியாகராஜன் (முன்னுள் 'அபீஷியல் அஸ்ஸைனி') அவர்களும் அவரது குடும்பத்தினரும் சுந்தரம்மாளின் நல்லியல்புகளை நினைந்து நினைந்து தங்களின் நீங்காத நேயத்தை அவரது ஆன்மாவுக்கு அளிக்கிருர்கள்.

# திருடனே வருக!



சுகி சுப்பிரமணியன்

சந்தர்ப்பத்தை நழுவ விடக் கூடாது என்பவர்கள் புத்திசாலிகள்; சந்தர்ப்பத்தை ஏற்படுத்துபவர்கள் மேதைகள். மாரிமுத்து மேதையின் இனத்தைச் சேர்ந்தவராகையால் மச்சான் வரவைப் பயன்படுத்த எண்ணினார்; அவர் யோசனைக்கு எதிர்வினை செய்யக் கூடிய பெருமை கட்டின மனைவி பவளத்தம்மாவுக்கே இருந்தது! தனது தம்பிக்குக் காலை ஆகாரம் படைத்து வெளியே அனுப்பிக் கொண்டிருந்தாள்.

காலை ஆகாரமாக அரைப்படி காப்பியுடன் ஐந்து இட்டிலி, நாலு இடியாப்பம், மூன்று மசாலா தோசை, இரண்டு வடை, ஒரு கப் உப்புமா என்று ஒரு மனதாக இறங்கு வரிசையிலேயே இவ்வளவையும் முடித்துக் கொண்டு வீரய்யன் புறப்பட்டு விட்டான்.

''தம்பியா புள்ளே வெளியே புறப்பட்டுப் போறுக போல!'' என்று வெற்றிலைக் காவிப் பல் வெளியே தெரியச் சிரித்தார்.

''நீங்களும் வாங்க, உண்டான கடலைப் பத்திக்கொள்ள!''

''உன் தம்பி அஞ்சாறு வருஷம் சாப்பிடாத சாப்பாட்டு அளவை அஞ்சாறு நாளிலே சாப்பிட்டு வர்றும் போல!''

''அவன் இங்கறதைக் கண்டா உங்க கண்ணும் வயிறும் ஏன் பத்தமா எரியுதோ?''

''அய்யோ.... அய்யோ எம் மச்சான் இங்கறதைப் பார்த்து எம் மனசு பனிக் கட்டியா குளிருது பவளம்....''

''நெசம்மாவா?''

''உந் தலை மேல ஆணையா....?'' என்று அவள் உச்சியைத் தொட்டார். அவள் உள்ளம் குளிர்ந்து போனது. எதிரியின் இருதய ஸ்தானத்தைத் தொட்டு விட்ட பின்பு வளைத்துக் கொள்ளும் வழியிலே, ''தம்பியாபுள்ளே போட்டுப் போகிற செருப்பு என்னோடதுதானே?'' என்று கேட்டார்.

''போகட்டுமே.... உங்க பாததூளி பட்டாவது முன்னுக்கு வரட்டுமே....''

''நாமல்லே அவனுலே முன்னுக்கு வர வேண்டிய நல்ல காலம் வந்திருக்குது. நான் சொல்றதைக் கேட்டு ஒரு அஞ்சு நிமிசம் மௌனமா இருந்து யோசிச்சுப் பதிலைச் சொல்லு.... வழக்கம் போல எகிறிப் பாயாதே....''

''சொல்லுங்க.''

''அவனுக்கு ஆட்டுக்கடா இருதா இருக்குது.''

''இருதா இருக்குது.''

''சாண்டோ பனியன் கட்டம் கட்டமா போட்டிருக்கான்.''

''...கான்!''

''லுங்கி வேட்டியை 'எஸ்' கட்டாகக் கட்டியிருக்குது.''

''து....!''

''துப்பாதே, எட்டி நில்லு..... இவ்வளவும் ஒத்து வந்திட்டே. நமக்கு இருக்கிற கடனை அடைக்க உன் தம்பியைப் பயன் செய்யணும்......''

''அவன் எங்கே போவான் ரூபாய்க்கு?''

''எங்கேயும் போக வேண்டாம். வந்தால் போதும். நம்ம வீட்டுக்கு நடு ராவிலே வரணும் — நீ சொன்னால் அவன் கேட்பான். நடு ராவிலே வரணும்.''

''எதுக்கு?''

''சொல்றேன்.... அவன் வந்து கடா முடான்னு பாத்திரம் பண்டங்களை உருட்டுவான். 'திருடன் திருட்டுப் பயல்' இப்படி நீ கத்துவே...... 'எடு கம்பை.... ஐயோ.... ஓடியாங்க ஓடியாங்கன்'னு ஒன்னோட சேர்ந்து நான் கத்துவேன். .. அட..... என்ன உன் கண்ணிலே குளிர்ச்சி போய்க் கோபம் பிறக்குது......?''

''ஏன் அவன் நம்ம வீட்டிலேயே திருடணும்?''

''பின்னே அடுத்த வீட்டிலே போய்த் திருடிணு சும்மா விடுவாங்களா....? காரிய மாத்தான் சொல்றேன். அவன் திருடிவிட்டு ஓடின மாதிரி ஒரு போக்குக் காட்டி விட்டால் போதும்.... அக்கம் பக்கம் என்ன நினைப் பாங்க?'' பாவம், பவளத்தம்மா வூட்டிலே திருட்டு நடந்து போச்சு, போச்சு பணம் என்று கதறுவாங்க.... 'பாத்திரம் பண்டம் பறி போனதாலே கொடுத்த கடனைக் கேட்கப் படாது'ன்னு இரக்கம் காட்டிச் சும்மா இருந் திடுவாங்க....''

''அப்படியே சும்மா இருந்திடுவாங்களா... இல்லே அதுக்கும் மேலே நாம பறிகொடுத்த பணம் — துணிமணி பாத்திரம் பண்டத்துக்கு அஞ்சுபத்து தரும உதவியும் செய்வாங்களா?'' என்று வலிக்காமல் பல்லைக் கடித்துக் கொண்டு கேட்டாள்.

''செய்தால் போதுமே! கடன்போய் லாபப் பணமும் வருது.... இவ்வளவுக்கும் உன் தம்பி தலை தெரியணும்.... நாம கூச்சல் போடணும்....''

''இருங்க.... நாம போடற கூச்சல். அக்கம் பக்கத்தார் வருவாங்க..... வந்து, ஓடற எந் தம்பியைப் புடிப்பாங்களா?..... ஐயோ, புடிச்சிட்டா என்ன ஆகும்?''

''உந்தம்பியை யாராலே ஓடிப் புடிக்க முடியும்? நீ தூரத்தி ஓடப் போறதில்லே... ஓட்டத்திலே உந் தம்பி எமன். எவன் கையிலேயும் அகப்பட மாட்டான். அகப்பட்டான்னு, அவன் திருடலே, திருடின ஆள் கபால்னு ஓடிப் போய் விட் டான்னு நாம் ரெண்டு பேரும் காப்பாத்தி விடுவோம்.......... ரொம்ப சுலபம். நீ யோசிச்சுப் பதிலைச் சொல்லு..... நானும் ஒரு கோழித் தூக்கம் போட றேன்.''

''உங்க யோசனை அபாரமான யோசனை....''



''எது, கோழித் தூக்கம் போடறதா....?''

''அட, நீங்க ஒண்ணு.... நாஞ்சொன்னால் என் தம்பி சம்மதிக்க வேணுமே....''

''அவன் சம்மதிச்சிட்டான்......! உன் னோட சம்மதத்தைச் சொல்லு.... இன் னிக்கே நடத்திப் போடலாம்.''

''தம்பியை ஒரு வார்த்தை கேட்டு விடு வோம்....''

''கேட்டுக்கோ... வீட்டிலே கொஞ்சம் களேபரம் செய்யறது எப்படின்னு நான் சொல்லித் தர வேண்டியதில்லே உனக்கு... ... இருந்தாலும் சொல்றேன்..... துணிமணி களைப் பரத்திப் போடணும். பண்ட பாத் திரங்கள் இறைஞ்சு கிடக்க வேணும்....''

''ஊம்.''

''பெட்டிகள் அலமாரிக் கதவுகள் அல் லோல கல்லோலமாகத் திறந்து கிடக்கணும். சுருக்கமாகச் சொன்னால் குப்பை மேட்டில் கோழியும் குஞ்சுமா புகுந்த மாதிரி செய்ய ணும்....''

மாரிமுத்து வாய் மூடவில்லை. வீரய் யனின் காலடியோசை கேட்டது. அப்புறம் திட்டம் உருவாகக் கேட் பானேன்?

**ப**கல் போய் இரவு வந்தது. திருடர்களுக் குத்தேனாகத் தித்திக்கும் இரவின் உச்சிப் போது.

வீட்டுக்குள் நுழைந்த வீரய்யனுக்கு ஆரத்தி சுற்றிக் கொட்டாத தோஷம்.

''கத்தட்டுமா?'' என்று ரகசியமாகக் கேட்டார் மாரிமுத்து.

''இப்படிக் கத்தினு எவன் காதிலே விழும்? 'ஓ'வெனக் கத்தணும்.'' — திருட வந்தவனே சொல்லிக் கொடுத்தான்.

''பின் வாசல் கதவை ரெடியா திறந்து வைச்சிருக்கேன் தம்பீ......'' என்று உடன் பிறந்தவள் பாசத்தால் சொல்லி முடித்தாள். வீரய்யன் இடுப்பிலிருந்து கத்தியை உருவினான்.

''ரொம்பத் தத்ரூபமாக வந்திருக்கானே!'' எனக் கூறி மகிழ்ந்த மாரிமுத்து கத்துவதற்கு வாயைத் திறந்த போது, ''டேய் மச்சான்! கத்தாதே.... உம்.... பணம் எதிலே இருக்கு....? இருக்கிற எடத்தைச் சொல்லு'' என்று பயமுறுத்தினான் வீரய்யன்.

கத்தி பளபளத்தது. வீரய்யன் கண் களிலே கோபம் பிறந்தது. மீசை தணிந்து நிமிர்ந்தது.

''சொல்லு.... இல்லே ஒரே குத்து.... குடல் சரிஞ்சு விழும்.''

இது விளையாட்டும் ஒத்திகையும் இல்லே... உண்மையாகவே திருட வந்து விட்டதை உணர்ந்த மாரிமுத்துவுக்கு வியர்த்தது. வீரய் யன் கத்தியும் கையுமாக அலமாரியின் மேல்

னத்தைத் தடவினான். அங்குதானே பணம் முழுவதும் இருக்கிறது?

''ஆ...திருடன் திருடன்...'' எனக் கத்தத் தொடங்கினார். மறு கணம் உமியால் பொதிந்த துணிப் பந்து ஒன்று அவர் வாய்க் குள் புதைந்தது. அலமாரியைத் தடவினான் வீரய்யன். வாயில் உதிர்ந்த உமியை மென்றார் மாரிமுத்து.

''ஐயோ.... ஐயோ.... திருடன்'' என்று கத்தினாள் பவளத்தம்மா. தம்பி சொன்னது ஒன்று. இப்போது செய்வது மற்றொன்று என்பதைக் கண்டு அவள் கத்தினாள், கதறினாள்.... கூச்சல் கூக்குரல் போட்டாள்.

அக்கம் பக்கத்து வீட்டுக்காரர்கள் எழுந்து உதவிக்கு ஓடி வந்தனர்.

ரோந்து சுற்றி வந்த போலீஸ்காரர்கள் உள்ளே ஒரு வழியே ஓடி வந்தார்கள். பின் கதவு வழியாக, பின் வீட்டுக்காரர்கள் நால்வர் புகுந்து விட்டார்கள். புற்றீசல் போல் மனிதர்கள் வந்து குவிந்தார்கள்.

வீரய்யனே வெகு சாமர்த்தியமாக, ''இப்போதான் ஓடுறான். திருடன்.... அதோ அந்தப் பக்கமாக ஓடுறான்'' என்று சமாளித்துக் கொண்டான். அக்கம்பக்கத்தார் அந்த வீட்டுக்குள் சாமான்கள் துணி மணிகள் பரந்திக் கிடந்த அலங்கோலத்தைப் பார்த்துப் பச்சாத்தாபம் கொண்டனர். பவளத்தம்மாவும் மாரிமுத்துவும் 'என்ன செய்யறது நாம்?' என்று தனியாக யோசனை நடத்திக் கொண்டிருந்தார்கள்:

''அவன் திருடனில்லே.... யாரோ ஒருத்தன் திருடன் வந்தான்னு சொல்லுவோம்..''

''அப்படியே சொல்லுங்க......''

''அந்தப் பய துணிப் பந்தைத் திணிச்சானே...திருட வந்தவனையா. விட்டுடறது?''

'' உங்களுக்கும் எனக்கும் பேச்சு வார்த்தை அறுந்தே போகணுமா? அவன் நடிக்க இருந்த நாடகத்தை நம்பும்படி செய்திட்டான்.... அவனைக் காட்டிக் கொடுக்கக் கூடாது....''

''நீதானே முதல்லே கத்தினே....''

''நீங்கதானே காட்டுக் கூப்பாடு கரடி மாதிரி போட்டீங்க....?''

''என்னைக் குத்த வந்தானே. சும்மாவா இருக்கறது....?''

''புடிச்சுக் குடுக்கப் போறீங்களா?''

''ஏனய்யா... மாரிமுத்து... இவன் யாரு?'' என்று கேட்டார் அங்கு வந்த போலீஸ்காரர்.

''என் சம்சாரத்துக்குத் தம்பி.....'' என்றார் மாரிமுத்து.

''இந்த ஆள் எத்தனை வருசமா இங்கே இந்த வீட்டிலே இருக்கிறார்....?''

''ஒரு வாரம் ஆச்சு இவர் வந்து....''

''அஞ்சு வருசத்துக்கு அப்பாலே இப்போ தான் வந்திருக்கிறான் என் தம்பி. அவன் திருடன் இல்லே......'' என்று கண்ணீர் மல்கச் சொன்னாள் பவளம்மா.

''இவன் பட்டணத்திலே பக்கா ரௌடி..... பிக்பாக்கெட் 'பிரின்ஸ்' இவன்தான்! இவனைத் தேடணும்னு போலீஸ் இலாகாவிலிருந்து எங்களுக்கு ரகசியச் செய்தி வந்திருக்குது...... இவன் பேரு.....''

''வீரய்யன்'' என்றான், பிடிபட்டும் பீறு பேசிய வீரய்யன்.

''ஏய், இல்லாடி..... உன்னைக் கண்டு பிடிக்கிறவங்களுக்கு ரெண்டாயிரம் ரூபாய் சன்மானம் கொடுக்கப்படும் என்று சர்க்கார் விளம்பரம் செய்திருக்குது. இங்கே திருடினியோ இல்லியோ....அது வேறு கேஸ்.....''

''ஏய் பாவி.... அக்கா.... உம் புருசன் நம்பிக்கைத் துரோகம் செய்திட்ட பாவி... டேய்..... மாரிமுத்து....'' என எம்பினான்.

''கத்தாதே.... சார்.... உங்க பேரு, விலாசம் என்ன?''

''ஏன் சார், கேக்குறீங்க?''

''புகழ்பெற்ற கேடியை நீங்க புடிச்சதாலே, உங்களுக்கு வர வேண்டிய சம்மானத் தொகையை சர்க்கார் அனுப்புவதற்கு உங்கள் முகவரி வேண்டாமா? சொல்லுங்கள்'' என்றனர் போலீஸ்காரர்கள்.

**ப**வளத்தம்மா நாடகம் பாடத் தொடங்கினாள்.

''அட, நீ ஏன் அழுறே....! உத்தம்பி இந்த யோக்கியதை உள்ளவன்னு நீ கண்டியா, நான் கண்டேனா?''

''எனக்கு ஒரு சத்தியம் செய்து தரணும் நீங்க.''

''எதுக்கு?''

''உங்களுக்கு ரெண்டாயிரம் ரூபாய் வருமில்லே....''

''சொன்னாங்க, வருமின்னு....''

''அதை எங்கிட்டே நீங்க தந்திடணும்.''

''எதுக்கு?''

''அவன் நம்ம வீட்டிலே திருடலேன்னு நான் வழக்காடப் போறேன்....''

''வழக்காடவா?''

''ஆமா.... அதுக்கு வக்கீல் பீஸ் வேண்டாமா? அதை நீங்க வாங்கப் போகிற சம்மானத் தொகையிலே இருந்து கொடுத்திடுங்க....

''அடி பாவி....''

''அடியாவது, பாவியாவது.... விடிஞ்சதும் விடியாததுமா நாம் வக்கீல் வீட்டுக்குப் போகணும்.''

''ஐயோ!''

அலமாரியில் பத்திரமாகப் பதுக்கி வைத்த பணம் நிறைந்த தகரப் பெட்டி எங்கு கிடக்கிறதென்று பவளத்தம்மா பார்த்தாள்.

''ஏன் எடுக்கிறே....?''

''வக்கீலுக்கு அட்வான்சு பணம் கொடுக்க வேண்டாமா? காலையிலே மருவாதையாக என் பின்னாலே வாங்க......''

''வரணுமா?''

''....ஊம்..... வந்து, எம் மச்சான் திருடனோ திருடன் இல்லியோ..... எங்க வூட்டிலே திருட வரலேன்னு வாதாடி விடுவிச்சா அவருக்கு ரெண்டாயிரம் பீஸ் தர்றதாகச் சொல்லி ஆயிரம் ரூபாய் அட்வான்சு கொடுக்கணும்....''

''கொடுத்துத் தொலைக்கிறேன்.''

பிரபல கேடியைப் பிடித்த மாரிமுத்துவுக்குச் சர்க்கார் இனாம் கிடைத்தது. மாரிமுத்துவின் வீட்டில் அவன் திருடினானா இல்லையா என்று 'அப்பீல்' வழக்கு நடந்து கொண்டிருந்தது.

# அறிவுக் கனலே, அருட்புனலே! 45

"இன்று மங்கள வாரம். இரவு அம்பிகையிடம் சென்று நீயே வரம் கேள்; அவள் அநுக்கிரகிப்பாள்" என்ற சொற்களை குரு மஹராஜ் எவ்வளவு உணர்ச்சிச் செறிவுடன் கூறியிருப்பாரோ? அவர் கூறிய ஒவ்வொரு வார்த்தையையும் நரேன் நம்பினார். இரவுக்காக ஆவலுடன் காத்திருந்தார்.

ஒன்பது மணி சுமாருக்குக் குருநாதர் அவரை ஆலயத்துக்குப் போகுமாறு பணித்தார். நரேந்திர நாதர் புறப்பட்டார். செல்லும்போதே ஏதோ ஒரு தெய்விக போதை அவருள் நிறைந்தது. கால்கள் தடுமாறின. 'உயிருள்ள தெய்வத் தாயைப் பார்க்கப்போகிறோம்; அவள் பேசிக் கேட்கப் போகிறோம்' என்ற ஆனந்தத்தில் முன்கூட்டியே அவரது இதயம் துள்ளிற்று. அந்த எண்ணத்திலேயே நிரம்பிப் போனார். இங்கு எழுத்திலே எளிதாகக் கூறிவிடலாம். ஆனால் வாஸ்தவத்தில் தெய்வத் தாயின் பிரத்தியட்ச தரிசனத்தை எதிர்நோக்கி அவளிடம் வரம் பெற ஓர் உணர்ச்சி மிக்க வாலிபர் சென்றாரெனில் அவரது மனநிலை எப்படி இருந்திருக்கும்?

ஆலயத்தை அடைந்தார் நரேந்திரர்; பிரதிமையின் மீது பார்வையைச் செலுத்தினார். இந்தக் கலியுகத்தில் பத்தொன்பதாம் நூற்றாண்டிலும் அதிசயம் நிகழ்ந்தது. புராண, இதிஹாஸங்கள் கூறும் நிகழ்ச்சி இன்றைக்கு எண்பதாண்டுகளுக்கு முன் நடந்தது! புராண, இதிஹாஸங்களை நம்பாத ஓர் இளைஞரின் பொருட்டே நிகழ்ந்தது. சர்வேச்வரி எது எதற்கு எப்போதெப்போது லீலை வைத்திருக்கிறாள் என்பதை நாம் அறிய முடியுமா?

பவதாரிணியின் பிரதிமை மீது நரேந்திரர் பார்வையைச் செலுத்தவில்லை. சாட்சாத் தேவியே உயிரோடும், உணர்வுகளோடும் விளங்குவதைக் கண்டார்.

**இனி விவேகாநந்தரின் வாக்குகளையே கேட்போம்: "தெய்விக அன்பின் வற்**றாத ஊற்றாக அவளைக் கண்டேன். பக்தியும் அன்பும் பூரித்தெழ அந்த அலையில் சிக்குண்டேன். ஆனந்த பரவசத்தில் நான் மீண்டும் மீண்டும் அவள் முன் தண்டனிட்டு எழுந்தேன். 'தாயே, எனக்கு விவேகத்தைக் கொடு; தாயே எனக்குத் துறவற புத்தியைக் கொடு. தாயே, எனக்கு ஞானத்தையும் பக்தியையும் கொடு. உன்னை ஒரு போதும் இடையறாமல் தரிசிக்கும் பாக்கியத்தை எனக்கு அருள்வாய்!' என்று பிரார்த்தித்துக் கொண்டேன்.

"தூய்மையானதொரு சாந்தி என் ஆத்மாவை ஆட்கொண்டது. உலகம் அடியோடு மறந்து போயிற்று. ஜகன்மாதா மட்டுமே என் இதயத்தில் பிரகாசித்தாள்.

"குருநாதரிடம் திரும்பினேன். லௌகிகத் தேவைகள் பூர்த்தியாவதற்கு அம்பிகையிடம் வேண்டிக்கொண்டேனா என்று அவர் என்னைக் கேட்டார். எனக்குத் தூக்கி வாரிப் போட்டது. 'மஹாசய, அதெல்லாம் மறந்தே போய்விட்டேன். இப்போது என்ன பரிகாரம் செய்ய இருக்கிறது?' என்று வினவினேன். 'ஏன்? மறுபடியும் போய் அவளிடம் குறைகளை முறையிடேன்' என்றார் ஸ்ரீ ராமகிருஷ்ணர்.

"மீண்டும் நான் மந்திரத்துக்குச் சென்றேன். ஆனால் அன்னையைக் கண்டவுடன் நான் எதற்காகச் சென்றேனோ அந்தக் காரியத்தை மறந்து விட்டேன். பலமுறை அவளை வணங்கிவிட்டு பக்தியையும் ஞானத்தையுமே நல்குமாறு வேண்டிக் கொண்டேன். 'என்ன, இரண்டாம் தடவையாவது செய்ய வேண்டியதைச் செய்தாயா?' என்று விசாரித்தார் குருநாதர். நான் நடந்ததைச் சொன்னேன். 'என்ன அசட்டுத்தனம்! ஒரு சில வார்த்தைகளில் உன் கஷ்டத்தைச் சொல்லிக் கொள்ளும் அற்பப் போதுக்குக்கூடவா உன்னை நீ கட்டுப்படுத்திக் கொள்ள முடியாது? இன்னும் ஒரு முறை முயன்று பார். வேண்டியதை அவளிடம் கேள்." என்றார் அவர்.

ரா. கணபதி



''நீங்கள் எல்லாம் வரப்போறிங்கன்னு அவருக்கு என் கையாலேயே பின்னிய ஸ்வெட்டரைப் போட்டுவிட்டேன். அவரும் உங்களை எல்லாம் பார்க்கணும்னு ஆசைப்பட்டாரு!''

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

''மூன்றுவது முறை புறப்பட்டேன். சந்நிதியில் பிரவேசிக்கும்போது அதீதமான ஓர் அவமான உணர்ச்சி என்னைப் பற்றிக் கொண்டது. 'அம்பிகையிடம் எத்தகையதோர் அற்ப விஷயமாகப் பிரார்த்திக்க வந்திருக்கிறேன்! கருணை வாய்ந்த ஒரு மாமன்னரிடம் வாழைக்காயும், வெண்டைக்காயும் கேட்பது போல் அல்லவா இருக்கிறது! நான் எப்பேர்ப்பட்ட மூட்டாள்!' என்று எண்ணினேன். வெட்கத்துடனும், வேதனையுடனும் மிகவும் பணிவாக அவளைக் கும்பிட்டேன். 'அம்மா, ஞானத்தையும், பக்தியையும் தவிர எனக்கு வேறெதுவும் வேண்டாம்' என்று பிரார்த்தித்தேன்.

''கோவிலுக்கு வெளியே வந்தவுடன் எல்லாம் புரிந்து விட்டது— இத்தனைக்கும் காரணம் குருநாதரின் சித்தம்தான்! இல்லாவிடில் ஒரு முறையல்ல, இரு முறையல்ல, மூன்று முறையும் என் லட்சியத்தில் நான் தோற்றிருப்பேனா? அவரிடம் சென்று 'மஹாசய, நீங்கள்தான் என் மனசின் மீது மாயா ஜாலம் செய்து என் தேவையை நான் மறக்கச் செய்திருக்கிறீர்கள். அதனால் இப்போது நீங்களே வரம் தாருங்கள். என் வீட்டிலுள்ளோர் வறுமையின் பிடுங்கலிலிருந்து விடுபட வேண்டுமென வரம் தாருங்கள்' என்றேன்.

''அவர் சொன்னார்: 'என்னுடைய வாயிலிருந்து அப்படிப்பட்ட வார்த்தைகள் வரவே முடியாது. உனக்காக உன்னைப் பிரார்த்தித்துக் கொள்ளச் சொன்னேன். உன்னால் முடியவில்லை. உலக இன்பங்களுக்கு நீ பிறக்கவில்லை என்றே தோன்றுகிறது. நல்லது, இதற்கு நான் என்ன அப்பனே, செய்வது?'' என்றார். ஆனால் நான் அவரை லேசில் விட்டுவிடவில்லை. அவர் என் வேண்டுகோளை நிறைவேற்றித் தந்தேயாக வேண்டும் எனப் பிடிவாதம் பிடித்தேன். கடைசியில் 'ரொம்ப சரி, வயிற்றுக் கஞ்சிக்கும் சாதாரணக் கந்தைக்கும் கஷ்டமில்லாமல் உன் குடும்பத்தினர் இருப்பார்கள், போ!' என்றார் அவர்.''

இந்த நிகழ்ச்சிகளை நரேந்திரரின் வாய்மொழியிலேயே படிக்கும்போது உடல் புல்லரிக்கிறது; உள்ளம் சிலிர்க்கிறது. பரமஹம்ஸரின் மாயத்தையும், மாயத்தை மறைக்கும் மாயத்தையும், அப்படி மாயம் செய்யும்போதே அவர் கள்ளம், கபடம் இல்லாமல் இருந்ததையும் எண்ண எண்ண உள்ளம் உவகை கொள்கிறது. இச் சம்பவத்தைப் படிக்கும்போது குரு மஹராஜ், ஸ்வாமிஜி இருவருமே எத்தகைய குழந்தையுள்ளம் படைத்திருந்தார்கள் என்பதும் தெரிகிறது. குழந்தையினால்தானே அன்னையின் அன்பைப் பெற முடியும்?

பட்டினியில் வாடி, மழையில் நனைந்து மயக்கமுற்ற நரேந்திர நாதர் இன்ப துன்பங்களின் உண்மை இயல்பினைக் கண்டுகொண்டார். 'இன்ப துன்பம் சமானமாக உறுவதெப்படி' என்பதையும் கண்டுகொண்டு விட்டார். பிற்பாடு ஸ்ரீ ராமகிருஷ்ணர் ''நீ உலக இன்பங்களுக்காகப் பிறக்கவில்லை போலிருக்கிறது'' என்று கூறியதையும் அப்போதே அறிந்துவிட்டார் நரேந்திரர். உறவுகளை விலக்கித் துறவு பூணவும் தீர்மானித்துவிட்டார். எங்கோ சஞ்சரிக்கும் மின்சார அலைகளைக் கிரகிக்கும் வானொலிப் பெட்டிபோல நரேந்திரரின் இந்த எண்ணங்கள் யாவற்றையும் எப்படியோ கிரகித்துவிட்டார் தட்சிணேசுவர முனிவர். 'பரிவிராஜகனாக உலகை விட்டு வனம் சென்று துறவறம் அநுஷ்டிக்க நரேந்திரர் பிறக்கவில்லை. உலகிலிருந்துகொண்டே அவர் துறவறம் அநுஷ்டிக்க வேண்டும்' என்று கூறிவிட்டார். 'கத்தியின் முனையில் நீ நடக்கவேண்டும்' என்று சிஷ்யருக்கு அன்புக் கட்டளை இட்டுவிட்டார். 'நான் உன்ன

அளவும் நீ இங்கிரு' என்று அப்போதைக்குக் கூறினார். ஆனால் தாம் மறைந்த பின்பே நரேந்திரருக்கு உலக உத்தாரணம் என்ற மாபெரும் பணியை விட்டுச் சென்றுவிட்டார். மக்கள் குலம் உய்ய வேண்டும் என்ற பெருங் கருணை காரணமாகத் தமது ஆருயிர்ச் சீடரின் அமைதியான ஆண்டி வாழ்வுக்குத் தாமே குறுக்கே நின்றார்.

'துறவியாகப் போக நினைத்த நரேந்திரர் உடனே ஏன் குடும்பக் கஷ்டத்தைப் பற்றி எண்ணினார்? அந்தக் குறை தீரப் பரமஹம்ஸரிடம் பிரார்த்தித்துக் கொண்டார்?' என்ற சங்கை எழலாம். துறவியாகச் செல்ல எண்ணினாரேயன்றி, அவர் அவ்வாறு செல்லவில்லை. அவர் அவ்வாறு செல்ல குரு அநுமதிக்கவில்லை. எனவே வீட்டுக்குத் திரும்பி விட்டார் நரேந்திரர். வீட்டிலிருக்குமளவுக்கு, அதனைச் செவ்வையாக நடத்த வேண்டும் என்பதுதானே நியாயமாகும்?

நரேந்திரர் தமக்கெனப் பரமஹம்ஸரைப் பிரார்த்திக்கச் சொன்னபோது மாயம் புரியலானார் மாமுனிவர். தெய்வத்தின் திரு முன்பு இந்த உலகம் எவ்வளவு துச்சம் என்பதைத் தமது வாய் வார்த்தையாகக் கூறாமல், நரேந்திரரே அநுபவித்துப் பார்க்குமாறு செய்யத்தான் இந்த மாயம். அந்த மாயத்தின் பயனாக மாயையும், மாயையை மாய்க்கும் ஞானமுமாகிய பரதேவதையின் திவ்விய தரிசனம் நரேந்திரருக்குக் கிடைத்தது. கடவுளைக் கண்டவருண்டா என்று கேட்டு வந்தவர் தாமே கடவுளைக் கண்டுவிட்டார். மானுடர்களைக் காண்பதை விட அடர்ந்த முறையில் தெய்வத்தைக் காண முடியும் என்று பரமஹம்ஸர் கூறியது எவ்வளவு உண்மை என்பதைக் கண்ணுக்கு மெய்யாகக் கண்டுகொண்டார். ''நான் கடவுளைக் கண்டிருக்கிறேன். உனக்கும் காட்டுகிறேன் குழந்தாய்'' என்று கூறி அதை மெய்ப்பித்துக் காட்டிவிட்டார் ராமகிருஷ்ணர்.

சர்வேசுவரியின் தரிசனம் கிட்டியவுடன் உலகம் எப்படி மறைந்துவிடுகிறது என்பதைத் தெரிந்து கொண்டார் நரேந்திரர். கயிற்றைப் பாம்பென்று தவறாக எண்ணலாம். அல்லது கயிறு என்றே உள்ளபடி தெரிந்து கொள்ளலாம். ஆனால் ஒரே சமயத்தில் அதுவே கயிறு, பாம்பு இரண்டும் என்ற எண்ணத்தைப் பெற முடியாதல்லவா? அதேபோல உலகத்தை மெய்யென நம்பி ஏமாறலாம். அல்லது அது அம்பிகையின் மாயை என்று தெரிந்து கொள்ளலாம். ஆனால் ஒரே சமயத்தில் அது மெய்யென்றும் மாயை என்றும் எப்படி எண்ண முடியும்? அம்பிகையின் முன்பு உலகம் மாயை என்பது தன்னால் தெளிவாகும்போது, அது உண்மை என்றும் எண்ணி லோகாயதமான நன்மைகளை எப்படிப் பிரார்த்திக்க முடியும்? இதனால்தான் குடும்பக் கஷ்டம் தீரவேண்டும் என்று நரேந்திரரால் வேண்டிக் கொள்ள முடியவில்லை.





''ஜன்னல் கம்பியை வளைக்கத் திருடரத்துலே, நீ கெட்டிக்காரன்கிறியே, எங்கே இந்தக் கதவுலே இருக்கிற கம்பியை வளையேன், பார்க்கலாம்....!''

'விவேகம் வேண்டும், பக்தி வேண்டும், ஞானம் வேண்டும், அம்பிகையின் திவ்விய தரிசனம் அனவரதமும் வேண்டும்' என்று பிரார்த்தித்தார் நரேந்திரர்.

பிரம்மம் நிர்குணமாகத்தான் இருக்க முடியும் என்று எண்ணி மூர்த்தி பூஜையை எள்ளி நகையாடியவர் இன்று சந்தேகத்துக்கிடமின்றி பிரம்மத்தின் ஸகுணத் தோற்றத்தைக் கண்டுவிட்டார். பிரபஞ்சத்தில் உள்ள எல்லாப் பொருள்களாகவும் தோன்றும் பரம்பொருள் உயிர்க் குலத்தின் பிரார்த்தனைக்கிரங்கி, அவர்கள் கிரஹிக்கும் வகையில் தானும் தெய்வங்களாக உருவுகள் எடுத்துக்கொள்கிறது என்று அவர் நிதரிசனமாகத் தெரிந்து கொண்டுவிட்டார்.

'தெய்வ மூர்த்தங்கள் எல்லாம் உருவகம்' என்று வாய் ஓயாமல் கூறும் இன்றைய விநோத விஞ்ஞான பக்தர்களுக்கு விவேகாநந்தர் சரிதத்தைவிடத் தெளிவு தரும் மருந்து வேறெதுவும் கிடையாது.

கடவுளை நம்புவது; ஆனால் கடவுள் உருவம் கொள்ளமுடியாது என்று அதே சமயத்தில் வாதிப்பது இவை ஒன்றுக்கொன்று அறவே முரணானவை. கடவுளுக்கு உருவம் கிடையாது என்று சொல்பவர்கள் பக்தர்களின் பிரார்த்தனைக்கு இணங்கி கடவுளால் உருவம் எடுத்துக் கொள்ள முடியாது என்று சொல்வதாகவே ஏற்படுகிறது. அதாவது கடவுளாலும் முடியாத காரியம் என்பதாக ஏதோ ஒன்று இருப்பதாகக் கூறுகிறார்கள். இந்த 'ஆஸ்திகத்துக்கும் நாஸ்திகத்துக்கும் அதிக மாறுபாடில்லை.

மறு நாள் பகலில் குருமஹராஜ் மட்டுமே தமது அறையில் இருந்தார். நரேந்திரர் வெளியே விச்ராந்தியாக உறங்கிக் கொண்டிருந்தார். வைகுந்தநாத சன்யால் என்ற பக்தர் அப்போது அங்கு வந்தார். அவருக்குப் பரமஹம்ஸர் உறங்கும் நரேந்திரனைச் சுட்டிக் காட்டினார். ''இதோ இவனைப் பார். இந்தப் பயல் ரொம்ப ரொம்ப நல்லவன். இவன் பேர் நரேந்தர். சர்வேசுவரி கிடையாது என்று இத்தனை நாளாக மறுத்து வந்தான். நேற்றைக்கு உண்டு என்று ஒப்புக் கொண்டு விட்டான். பாவம், கொஞ்ச நாளாக இவனை வறுமை பிடுங்கித் தின்கிறது. அம்பிகையிடம் அது தீருவதற்காக என்னைப் பிரார்த்தித்துக்கொள்ளச் சொன்னான். நீயே பிரார்த்தித்துக்கொள் என்று சந்நிதிக்கு அனுப்பி வைத்தேன். அந்த மாதிரி அவளைக் கேட்கவே அவனுக்கு வெட்கமாகி விட்டதாம். கோயிலிலிருந்து திரும்பி வந்தவன் 'அம்பிகை மீது ஒரு கீதம் சொல்லிக் கொடுங்கள்' என்று என்னைக் கேட்டான். சொல்லிக் கொடுத்தேன். ராத்திரி பூராவும் அந்தப் பாட்டையே பாடிக் கொண்டிருந்தான். அதுதான் இப்படி அசந்து தூங்கிக் கொண்டிருக்கிறான்'' என்றார்.

பிறகு அந்தரங்க சுத்தமான களிப்போடு, ''நரேந்திரன் என் அம்மாவை ஒப்புக் கொண்டது ரொம்பவும் அற்புதமில்லை?'' என்று கேட்டார். ''ஆமாம்'' என்றார் ஸன்யால்.

சிறிது போது மௌனமாகச் சென்றது. ''நரேன் ஜகன்மாதாவை ஒப்புக் கொண்டது ரொம்ப அற்புதமில்லை?'' என்று மீண்டும் கேட்டார் குருநாதர்.

இப்படியே சிறிது நேரம் கேட்டுக் கேட்டு மகிழ்ந்தார்.

ஸகுணப் பிரம்மம், மூர்த்தி வழிபாடு இவற்றை நரேந்திரர் ஏற்றுக்கொண்டு விட்டார் என்பதை அறிந்த ராமகிருஷ்ணர் நம்முடைய குழந்தை பரீக்ஷையில் நல்ல அம்சங்கள் வாங்கித் தேர்ச்சி பெற்றால் நாம் எப்படிச் சந்தோஷப்படுவோமோ அதே போல் மகிழ்ச்சி கொண்டார்.

மாலை நாலு மணி இருக்கும். கல்கத்தாவுக்குப் புறப்படு முன் நரேந்திரர் ஸ்ரீ ராமகிருஷ்ணரிடம் வந்தார். அவரைக்

சிறு வயதிலேயே புகட்டுங்கள்...
சிறந்த முறையில் புகட்டுங்கள்...
காலையில் முதல் வேலையாக ஒரு முறை
இறுதியாக இரவில் ஒரு முறை
வாய்கொப்பளிக்க

# லிஸ்டரின்!

—வாழ்நாள் முழுதும்
அவர்களுக்குப் பாதுகாப்பு!



பழக்கம் படிவதற்கு வாகானது இளமைப் பருவம்! லிஸ்டரின் உபயோகிக்கும் ஆரோக்கிய நற் பழக்கத்தைப் புகட்டுவதற்கு இதைவிட வாய்ப்பான சமயமும் உண்டோ! அன்றாடம் அதிகாலை ஒரு தடவை, இரவு ஒரு தடவை லிஸ்டரின் கொண்டு வாய் கொப்பளித்தால் கிருமிகளினின்று நாள் முழுதும் காத்துக்கொள்ளலாம். பட்ட மாத்திரத்திலே கிருமிகளைக் கொன்று மூச்சிலே இனிமை தவழச் செய்வது லிஸ்டரின் ஆன்டிஸெப்டிக (நச்சமுறி மருந்து).

திடமுடன் முன்யோசனையைக் கைக்கொள்ளுங்கள்! தினம் இருமுறை லிஸ்டரின் உபயோகிக்கும் ஆரோக்கிய நற் பழக்கத்தை இப்போதே துவக்குங்கள்!

வாய் நிறைந்த சுகாதாரத் தூய்மைக்கு வழி, லிஸ்டரின்; இன்றும் என்றும் உங்கள் துணை!




வார்னர்-லாம்பர்ட் பார்மஸூட்டிகல் கம்பெனி
(வரையறுக்கப்பட்ட பொறுப்புடன் யூ.எஸ்.ஏ.வில் இணைக்கப்பெற்றது).

WL-1701B.TM



''வீட்டுச் செலவைக் குறைக்கணும்! இந்த மாசத்திலேருந்து சமையல்காரனை நிறுத்திவிட்டு நானே சமையல் செய்யப் போறேன்...!''

'' அது சரி! அப்புறம் டாக்டர் 'பில்' அதிகமாயிடுமே...!''

கண்டதுதான் தாமதம். குருமஹராஜ் கொஞ்சம் கொஞ்சமாக அவரை நெருங்கினர். அவரை அணுகி மிகவும் நெருக்கமாக அமர்ந்து கொண்டு தம்மையும் நரேந்திரரையும் மாற்றி மாற்றிச் சுட்டிக் காட்டியவாறே, ''நல்லது; என்னை இதாகவும் காண்கிறேன்; அதாகவும் காண்கிறேன். வாஸ்தவமாக எனக்கு பேதகமே தெரியவில்லை. கங்கையில் மிதந்து கொண்டிருக்கும் ஒரு கழி அதனை இரண்டாகப் பிரிப்பது போலத் தோன்றினலும் கங்கை உண்மையில் ஒன்றுதானே? அதே போலத்தான்.... என்ன, நான் சொல்வது புரிகிறதா? ஆமாம், அம்பிகையைத் தவிர வேறு என்ன இருக்கிறது? ம், என்ன சொல்கிருய்?'' என்று கேட்டார்.

உயிர்களை உண்டாக்குபவளாகவும், சம்ஹரிப்பவளாகவும், நன் மனத்தவருக்கு அன்பு உருவாகவும், தீய மனத்தவருக்குப் பயங்கரியாகவும் இருக்கும் காளியன்னை பரம்பொருளின் உருவமே என்று தெளிந்து விட்டார் நரேந்திரர்.

தம் அன்னையின் மடியில் இந்து மத உணர்ச்சியை இயல்பாகப் பெற்றவர், பிற்பாடு புத்தி வாதங்களினல் அதை இழந்து இன்று மீண்டும் அதனைப் பெற்று உலக அன்னையின் அடிகளுக்குத் தம்மை அர்ப்பணித்துக் கொண்டார்.

பல ஆண்டுகளுக்குப் பின் விவேகாநந்த ஸ்வாமி அமெரிக்க மாதொருத்திக்கு எழுதினர்: ''காளி வழிபாடு என்னுடைய விசேஷமான பைத்தியம்'' என்று.

தத்துவ ரீதியில் பரம்பொருளைக் கிரகிக்க எண்ணிய நரேந்திரரை இதய பூர்வமாகப் பரம்பொருளைக் கிரகிக்கும் பக்தராக்கிவிட்டார் பரமஹம்ஸர். இது குறித்து ஸ்வாமி விவேகாநந்தர் சொல்வார்: ''ஸ்ரீ ராமகிருஷ்ணர் வெளிப் பார்வைக்குப் பக்தி மயமாக இருந்தார். ஆனல் உள்ளுக்குள் அவர் ஞான மயமாக இருந்தவர். நான் வெளிப் பார்வைக்கு ஞானியாக இருந்தாலும் என் இதயம் முழுவதும் நிரம்பிக் கிடப்பது பக்திதான்.''

தங்கக்கட்டி அழகான ஆபரணமாகி ஜொலிக்க வேண்டுமென்றல் எவ்வளவு இன்னலுக்கு ஆளாக வேண்டியிருக்கிறது? சம்மட்டியால் எத்தனை அடி வாங்குகிறது? தீயில் எவ்வளவு காய்கிறது? ஆத்மா நிறைவு பெறுவதற்கும் இவ்வளவு சோதனைகளுக்கு ஆளாக வேண்டியிருக்கிறது. நரேந்திரர் ஐயங்களால் பட்ட அடிகளும், வறுமையில் காய்ந்த காய்ச்சலும் கடைசியில் பயனளித்து விட்டன. செம்பொன்னகப் பரிணமித்து விட்டாரவர்.

நரேந்திரர் பூரணமாக மாறிவிட்டார். சந்தேகமும் குழப்பமுமாக இருந்தவர் பக்தரானர்; ஆத்ம ஞானியானர்; ஹிந்துவானர். இப்படித் தாம் மறு பிறப்பெடுக்கக் காரணமாக இருந்த பரமஹம்ஸரைத் தமது குரு என்று பரிபூரணமாகப் போற்றி மதிக்கலானர்.

நரேந்திரர் ஏதேதோ தத்துவத் திட்டுக்களில் அலைந்து தமது இல்லமாகிய வேதாந்த மதத்தை வந்தடைந்த அந்தக் காலம் ஆனந்த மயமானது: தமது உள்ளத்தின் இல்லத்தை மெல்ல மெல்ல அடைந்து வந்த அவர் அதே போதில் கல்கத்தாவிலிருந்த தமது இல்லத்தைச் சிறுகச் சிறுகத் துறந்து, தட்சிணேசுவரத்திலேயே பெரும்பாலும் வாழலானர்.

'ஸ்ரீ ராமகிருஷ்ணருடன் இருப்பதே தவம்; அவருடன் இருப்பதே சாதனை' என்று இந்தக் கட்டத்தை வருணிக்கும் விவேகாநந்த சீடர்கள் கூறுகிறர்கள். அந்தத் தவத்தையும், சாதனையையும் புரிந்த பல சிஷ்யர்களில்—குடும்பஸ்தர்களும், பிரம்மச்சாரிகளும் அடங்கிய சிஷ்யர்களில் — நரேந்திரரும் ஒருவரானர். (தொடரும்)

# பேசும் சித்திரங்களுக்கு ஒரு மாலி

## துமிலன்

மூப்பது வருடங்களுக்கு முன்பு. அப்போது பம்பாயிலிருந்த மாலியின் கேலிச் சித்திரப் படங்கள் திரு சதானந்தின் 'பிரீ பிரஸ் ஜர்னல்' பத்திரிகையில் வெளி வந்து கொண்டிருந்தன. திரு வாசன் கண்ணில் அந்தப் படங்கள் பட்டுவிட்டன. புதிதான, உயர்தரமான எதையும் முதன் முதலில் தாம் செய்து காட்டவேண்டும் என்ற ஆர்வமுள்ள அவர், மாலியை விகடனுக்குப் படங்கள் எழுதி அனுப்பச் சொன்னார்.

படங்கள் பத்திரிகையில் வெளியானபோது வாசகர்கள் மூக்கின் மீது விரலை வைத்துத் திகைத்தார்கள். ஒரு மனிதனது படத்தைப் பார்த்தால் அதில் ஏழெட்டுக் கோடுகளையும் நாலைந்து புள்ளிகளையும் தவிர வேறு எதுவும் இல்லை. மூக்கும் முழியுமாய், கட்டை குட்டையாய், மொத்து மொத்தென்று இருக்கும் சித்திரங்களைப் பார்த்துப் பார்த்துப் பழகிய கண்களுக்கு வெறும் கோடுகளினாலான படங்கள் கணிசமாகத் தோன்றவில்லை. ஒரு சிறிய 'இண்டியன் இங்க்' பாட்டில், எழுதியதை அழிக்க ஒரு கழக்கொடி. வெள்ளைப் பசை, ஒரு சித்திரமெழுதும் பேனா, ஒரு குச்சு, வேலை செய்ய ஒரு பெரிய பலகை இத்தனை சாமான்களையும் வைத்துக் கொண்டு சாமுத்திரிகா லட்சணங்களின் படியும், 'சித்திரம் எப்படி வரைவது?' என்று சித்திரப் பள்ளிக் கூடங்களில் கற்றுக் கொண்டபடியும் படங்கள் எழுதி வந்த சம்பிரதாயச் சித்திரக்காரர்கள் மாலியின் கேலிச்சித்திரப் படங்களைக் கேலி செய்தனர். அவற்றை அவர்கள் தங்கள் இரண்டு கண்களையும் பாதிப் பாதி திறந்து கொண்டுதான் பார்த்தார்கள்.

போதாததற்கு மாலியின் முதல் ஒன்றிரண்டு படங்களில் கால் விரல்கள் தவறாக வரையப்பட்டிருந்தன, இயற்கை யமைப்புக்கு விரோதமாக !

சில வாரங்களுக்குப் பிறகு ஒரு நபரின் உருவப் படம் முதன் முதலாகப் பத்திரிகையின் அட்டையை அலங்கரித்தது. அந்தக் கௌரவத்தை அளித்தவர், அன்று போலவே இன்றும் எதிலும் பிரகாசித்துக் கொண்டிருக்கும் அரியக்குடி ராமாநுஜ அய்யங்கார் அவர்கள்.

அவர் கால்களைச் சப்பணங் கூட்டி உட்கார்ந்து கொண்டு வலது கையை மார்புக்கு நேரே நீட்டிக் கொண்டிருந்தார். விரல்களில் கட்டை விரலைத் தவிர மற்ற நான்கையும் மடித்துக் கொண்டிருந்தார்.

அவர் படத்தை இந்தத் தோரணையில் எதற்காகப் போட்டிருக்கிறார்கள்? வாசகர்களின் ஆவல் வேலை செய்ய ஆரம்பித்து விட்டது. பத்திரிகையைப் புரட்டி உட்பக்கம் பார்த்தார்கள். 'கர்நாடகம்' சங்கீதக் கச்சேரி விமரிசனம் செய்திருந்தார். அந்தப் பக்கங்களில் அட்டையிலிருந்த அதே அரியக்குடி படம் இருந்தது. அது மட்டுமா? அவருக்கு அன்று மிருதங்கம் வாசித்த பாலக்காட்டு மணியின் படம், அப்புறம் பிடில் வாசித்த திரு ராஜமாணிக்கம் பிள்ளையின் படம், கடைசியாக வீணை தனம்மாளின் படம். வாசகர்கள் அன்று முதன் முதலாக வழக்கம்போல் படிப்பதை விட்டுப் படங்களைப் பார்த்தார்கள். தாங்கள் வெறும் கோடுகள் என்று மதிப்பிட்டிருந்த அந்தக் கோடுகளாலான உருவச் சித்திரங்களையே திரும்பத் திரும்பப் பார்த்தார்கள். ஜீவனும் குணாதிசய பாவமும் பொங்கித் ததும்பிக் கொண்டிருந்த அந்தப் படங்களைப் பார்க்கப் பார்க்க அவை குறிப்பிடும் அந்த நபர்கள் நேரே வந்து பேசுவது போலிருந்தது. அந்த மூன்று படங்களையும் சேர்த்துப் பார்க்கும்போது அவை ஒரு சங்கீதக் கச்சேரிச் சூழ்நிலையை நம் மனத்தில் தோற்றுவித்தன.

எல்லாம் மாலி எழுதிய படங்கள். கேலிச் சித்திரம் எனப்படும் உருவப் படங்கள். கலை



யும், மாலியின் பெயரும் வாசகர்களின் மனத்தில் அன்றே ஓர் இடத்தைப் பிடித்துக் கொண்டு விட்டன.

அடுத்த வாரப் பத்திரிகையில் ஹரிகேசவநல்லூர் ஸ்ரீ முத்தையா பாகவதரின் காலட்சேப 'ஸெட்டின்' படம். பாகவதர் கையில் சப்ளாக் கட்டையுடன் நின்று கொண்டு அவருக்குரிய பாணியில் அவரது உயரமான உடலின் மேற்பகுதியைச் சற்று வளைத்துக்கொண்டு, சபையோரைப் பார்த்து விஷயங்களை எடுத்துச் சொல்லிக் கொண்டிருக்கிறார். பின்னல் மேடையில் பின்பாட்டுக்காரர் பாடுவதற்குத் தயாராய்க் காத்துக் கொண்டிருக்கிறார்.


ராஜாஜி

எதிர்ப் பக்கத்தில் சபையோர்கள். ஆம், திரு டி.கே.சி., சங்கீத ரஸிகரான டாக்டர் சீநிவாச ராகவன், சங்கீத வித்வத் சபைக் காரியதரிசி திரு வைத்தியநாதய்யர் முதலியவர்கள். ஒன்றிரண்டு பையன்கள்கூட. நபர்கள் எல்லோரும் என்னமோ 'தத்ரூபமாக' என்று சொல்வார்களே அது போன்று காட்சியளித்தார்கள். மாலியும், அவருடைய சித்திரப் பாணியும் வாசகர்களின் மனத்தில் நன்றாக உட்கார்ந்து கொண்டு விட்டனர்.

ஆனால் அவருடைய சித்திரங்களுக்கு ஆட்சேபம் எழுந்தது. சங்கீத உலகத்தைச் சேர்ந்தவர்கள் அதை ரஸிக்கவில்லை. மாலி எழுதும் உத்திக்குக் கேலிச் சித்திர உத்தி என்று பெயரல்லவா? தங்களைக் கேலி செய்வதற்காக இத்தகைய படங்கள் எழுதப்படுகின்றன, வெளியிடப்படுகின்றன என்று நினைத்தார்கள்.

அவர்களுடைய இந்தச் சந்தேகங்களைப் பலப்படுத்த வேறு சில அம்சங்களும் சேர்ந்து கொண்டன. முதலில் அரியக்குடியின் படத்தைப் போட்டிருந்தபோது 'கர்நாடகம்' அவரது கச்சேரியையும் விமரிசனம் செய்திருந்தார். அன்று வித்துவான் ராக, தானம் பல்லவிக்குக் காம்போதி ராகத்தை எடுத்துக் கொண்டு,

'இல்லே சகனேக் காண, என்ன...
புண்ணியஞ் செய்தேனோ?'

என்ற சாகித்தியத்தைப் பல்லவியாகப் பாடினார். அதில் அவர் 'என்ன', 'என்ன' என்று வார்த்தைகளைத் திரும்பத் திரும்பச் சொல்லியதைக் குறிப்பிடும்போது ''என்ன என்ன?'' கேள்வி கேட்கிறார் என்று ரஸிகர்கள் நினைத்தார்கள் என்று கர்நாடகம் வேடிக்கையாகக் குறிப்பிட்டிருந்தார். மாலியின் படத்தில் அவர் கையை நீட்டிக் கொண்டிருந்த விதம் 'என்ன?' என்று கேட்பது போலவே இருந்தது. உண்மையில் அது வித்துவான் மத்யஸ்தாயியில் ஆலாபனம் செய்யும் போது கையை நீட்டிச் சுற்றும் பாணி. இது வித்துவான் மூக்குப் பொடி அரைப்பது போல் காட்டியிருக்கிறது என்று சிலர் புரளி செய்தார்கள். பாலக்காட்டு மணி இடுப்புக்கு மேலுள்ள தமது உடல் முழுவதையும் வளைத்து முன்னுக்கு நீட்டி வித்துவானைப் பார்த்துக் கொண்டு அவரது தாளத்துக்கேற்ப மிருதங்கத்தைத் தட்டும் ஓர் இடத்தை மாலி சித்திரித்திருந்தார். இது மணி அவர்களை வேண்டுமென்றே விகாரமாக எழுதியிருக்கிறார் என்று ஒரு சிலர் தமாஷ் செய்தார்கள்.

மொத்தத்தில் சங்கீத வித்துவான்கள் தாங்கள் இப்படிச் சித்திரிக்கப்படுவதை விரும்பவில்லை. இது சம்பந்தமாக வழக்குத் தொடுக்க வேண்டுமென்ற பேச்சுக்கூட எழுந்தது. இதைக் கேட்டபோது எங்களுக்கு அழுவதா சிரிப்பதா என்று முதலில் தெரியவில்லை. வழக்கம் போல் பிரார்த்தனைத்தான் செய்து வைத்தோம். ஆயினும் சங்கீத வித்துவான்களின் தவறான அபிப்பிராயத்தை நீக்க விரும்பி, கல்கி அத்தகைய படங்கள் போடுவதைப் பற்றிச் சமாதானம் எழுதினார்:

''இதனால் சகலமான சங்கீத வித்துவான்களுக்கும் தெரிவித்துக் கொள்வதென்னவென்றால், எல்லா சங்கீத வித்துவான்களுக்கும் ஏதோ சில தோரணைகளும், கோரணிகளும் இருக்கத்தான் செய்யும். பெரும்பாலும் அவையே அவர்களது தனிப்பட்ட திறமை வெளியாகும் போது கூடவே தோன்றும் சேஷ்டைகளாயிருக்கும். சங்கீத ரஸிகர்கள் அந்தத் தோரணைகளையும், கோரணிகளையும் பெரிதும் விரும்பி அனுபவிக்கிறார்களாதலால் வித்துவான்களைக் கௌரவிப்பதற்காகவே இத்தகைய படங்களைப் போடுகிறோமே யன்றி அவர்களைக் கேலி செய்வதற்காக அல்ல என்று தயவுசெய்து அறிந்து கொள்வார்களாக!''

கல்கி உண்மையில் இந்த வாக்கியங்களை அப்படியே

பாலசரஸ்வதி



செம்மை



உபயோகப் படுத்தவில்லை. அவர் எழுதியதன் சாராம்சத்தை நான் ஓரளவு ஞாபகத்திலிருந்து எடுத்துத் தந்திருக்கிறேன். நாளடைவில் வித்துவான்களுக்கு இந்தப் படங்கள் பழக்கமாகி விட்டன. சங்கீத விமரிசனங்களில் தங்கள் படம் வர வேண்டுமென்று விரும்பினார்கள். அவை மாலியின் படத்துடன் இல்லா விட்டால் தாங்கள் சரியாகக் கௌரவிக்கப்படவில்லை என்று கூடக் கோபமுற்றார்கள்.

பத்திரிகை உலகிலும், தமிழ்ச் சித்திர உலகிலும் மாலியின் ஸ்தானம் ஊர்ஜிதமாகி விட்டது. பம்பாயில் சில காலமும், சென்னையில் சில காலமுமாக மாறி மாறி, வசித்துக் கொண்டிருந்த அவர் சென்னைக்கே வந்து விட்டார்; காரியாலயத்தில் சேர்ந்து கொண்டார்.



டி. கே. சி.

"ஒன்றுமே செய்யவில்லை. வேறு படம் எழுதி எடுத்துக் கொண்டு வரலாம் என்று வந்தேன். நீங்கள் தப்பாக நினைத்துக் கொண்டு விட்டீர்கள் போலிருக்கிறது" என்று சிரித்துக் கொண்டே சமாதானம் கூறினார். பிறகு என்னுடன் கல்கி அறைக்கு வந்தார்.

"அந்தப் படத்தைப் பார்த்ததும் உங்கள் இரண்டு பேருக்கும் சிரிப்பு வரவில்லை. ஹாஸ்யமும், படமும் நன்றாயில்லையாக்கும் என்று கிழித்து விட்டேன்" என்று மிக மிகப் பவ்யமாகக் கூறினார் மாலி.

"அப்படிச் சொல்லுங்கோ!" என்று கல்கி ஒரு விரலை மேஜை மீது தட்டிக் கொண்டே கூறினார்.

மாலி எழுந்திருந்து விர்ரென்று வெளியே போய் விட்டார். கல்கி அவரை 'நக்கல்' செய்து பேசுகிறார் என்று நினைத்துக் கொண்டு விட்டார் போலும்!

அவர் காரியாலயச் சித்திரக்காரரான சில தினங்களுக்குப் பின்னர் ஒரு நாள் கல்கியின் அறைக்கு வந்து அவரிடம் ஒரு படத்தைக் கொடுத்தார். அட்டையில் போடுவதற்கென வரையப்பட்டிருந்த அந்தப் படத்தைக் கல்கி கையில் வாங்கி இப்படியும், அப்படியுமாகப் பார்த்தார். விரலால் மேலுதட்டைத் தடவி விட்டுக் கொண்டு உற்றுக் கவனித்தார். பிறகு அதை என்னிடம் கொடுத்தார். அதை நான் வாங்கிப் பார்த்து விட்டு மேஜை மீது வைக்கப் போன சமயம் மாலி அதை எடுத்துக் கொண்டு நாற்காலியிலிருந்து எழுந்தார். அந்தப் படத்தைப் பாதியாக மடித்தார். எங்களுக்கு ஒன்றும் புரியவில்லை. பிறகு அந்த இரண்டு துண்டுகளையும் மடித்து நான்காகக் கிழித்தார். கல்கி திகைத்துப் போய் உட்கார்ந்திருந்தார். அது ஏதாவது கேலிச் சித்திர வித்தையோ, ஒன்றில் நான்கு விதமான படங்கள் வருமோ என்று நான் நினைத்தேன். மாலி, "நான் பத்து நிமிஷங்களில் வேறு படம் எழுதிக் கொண்டு வருகிறேன்" என்று கூறி அந்த நான்கு துண்டங்களையும் கையில் எடுத்துக் கொண்டு போய் விட்டார்.

"நான் ஒன்றுமே சொல்ல வில்லையே? ஏன் இப்படிக் கோபித்துக் கொண்டு போகிறார்!" என்று கல்கி தவித்தார். சாதாரணமாக அவர் இதை யெல்லாம் லட்சியம் செய்வதில்லை. அன்றென்னமோ மனக் கஷ்டப்பட்டார். நான் உடனே மாலியின் அறைக்குச் சென்றேன். "என்ன சார்! எதற்காக இப்படிச் செய்தீர்கள்?" என்று கேட்டேன்.

மனிதர்களைக் கவனிக்க, சம்பவங்களைக் கவனிக்க நான் மனம் போனபடி ஓர் அரைப் பைத்தியம் போல் ஊர் சுற்றி வருவதுண்டு. மாலிக்கும் அந்தப் பழக்கம் உண்டு. அவர் தொழிலுக்காக அவர் அப்படிச் செய்ய வேண்டியது அத்தியாவசியமாயிற்று.

இருவரும் தினம் ஒரு காப்பி ஹோட்டலாக நுழைந்து வருவோம். ஒரு மூலையாகப் பார்த்து உட்காருவோம். அந்த இடம், உள்ளே வருபவர்கள், சாப்பிடுபவர்கள், பிறகு வெளியே போகிறவர்கள் எல்லாரையும் கவனிக்கக் கூடிய வசதி அளிப்பதாக இருக்கும். மாலி இடது முழங் கையை மேஜை மீது ஊன்றிக்கொண்டு உள்ளங் கையைத் தாடையில் வைத்துக் கொண்டு நபர்களை யெல்லாம் கவனிப்பார்.

அவர் ஜிப்பா அணிந்திருப்பார். இதன் இரண்டு பக்கங்களும், இரண்டு பெரிய பைகள் இருக்கும். மேல் மார்பிலும் இரண்டு பைகள் உண்டு. அவை இராணுவக்காரர்களின் சட்டைப் பைகள் போலிருக்கும்; அதாவது மூடிப் பொத்தான்கள் மாட்டக் கூடிய மடிப் புள்ளவையாம். எந்த ஒரு நபரின் உருவமாவது மனத்தில் நன்றாகப் பதிந்துவிட்டால்

டி. கே. பட்டம்மாள்

செம்மங்குடி



உடனே அவரது இடதுகை இடப் பக்கப் பையில் உள்ள சிறிய நோட்டை எடுக்கும். வலது கை பென்சிலை எடுத்துக் கொள்ளும். தலை, தவடை, தோள்பட்டை இவற்றைக் குறிக்கும் சில கோடுகளை இழுப்பார். அவ்வளவு தான். அப்போது அங்கே வேலை தீர்ந்துவிட்டது. பிறகு வீட்டுக்குப் போய் மற்றவற்றைப் பூர்த்தி செய்து கொள்வார்.


அரியக்குடி

ஹைகோர்ட் எங்களுக்கு முதல்தரமான வேட்டைக்களமாக அமைந்தது. இன்னும் சினிமாவில் ஆறு அணா, ஒன்பதணா வகுப்புகளில் போய் உட்கார்ந்துவிட்டு வருவதுண்டு.

சங்கீதக் கச்சேரிகள், நாடகக் கச்சேரிகள், நாடகங்கள் முதலியன கட்டாயம் பார்த்தாக வேண்டிய அம்சங்களாகப் போய் விட்டன.

இரண்டு மூன்று வருஷ காலத்தில் மாலியின் சித்திர நோட்டுக்களில் ஆயிரக் கணக்கானவர்கள் மாட்டிக் கொண்டு விட்டிருந்தார்கள்.

ஸ்ரீமதி டி. கே. பட்டம்மாள், அவரது தந்தை இருவரின் படத்தையும் எழுதிப் பெரியவருக்கு 'அப்பா' என்று பட்டம் சூட்டியிருந்தது மாலியின் புகழைப் பன்மடங்கு அதிகரிக்கச் செய்துவிட்டது.

திரை உலக நட்சத்திரங்கள், அரசியல் உலக நட்சத்திரங்கள் இவர்கள் பால்யத்தில் எப்படி இருந்தார்கள் என்பதைக் காண்பிப்பதற்கு இப்போது பழைய போட்டோப் படங்களைத் தேடிப் பொறுக்கி எடுத்துப் போடுகிறார்கள். மாலி, கற்பனை செய்தே பால்யச் செம்மங்குடியைச் சித்திரித்திருந்தார். இடுப்பில் மூலைக் கச்சக் கட்டு, தலையில் பின்னல், காலில் காப்பு முதலியவற்றுடன்.

மாலி சங்கீத ரசிகர். அத்துடன் அந்தக் கலையின் நுணுக்கங்களை உணர்ந்தவர். காவிரி தீரப் பிராந்தியத்தில் சங்கீதம் கேட்டுக் கேட்டு அவர் காது உயர்தர சங்கீத உணர்ச்சியுள்ளதாயிருந்தது. வித்வான்களின் சாகித்திய உச்சரிப்புத் தவறுகளை எடுத்துக் காட்டுவார். ''ரமணிஸமான மெவரோ', 'ஜிவ ஜிவ என ராதா' என்றெல்லாம் பாடப்பட்டு வந்ததை எடுத்துக் கூறி அதைப் பற்றி எழுதச் செய்தார்.

யாரையும் பார்த்துப் படமெழுதுவதில் இந்தியாவிலேயே இணையற்ற சித்திர நிபுணராகிவிட்டார். படத்தைச் சில நிமிஷங்களில் எழுதி விடுவார். ரப்பர் என்பதை அநேகமாக உபயோகிப்பதே யில்லை. அபூர்வமாகச் சிலரின் உருவங்கள் அவருக்கு எழுதவராது. ''வரவில்லை'' என்று சொல்லி விடுவார். தொடர்ந்து எழுதிப் பார்க்க மாட்டார்.

குடுகுடுப்பாண்டி, குறவன், குறத்தி, குரங்காட்டி, பாம்பாட்டி, பெருமாள் மாட்டுக்காரன் போன்றவர்களிடம் அவருக்குப் 'பிரேமை' அதிகம். அவர்களை வீட்டுக்குத் தருவித்து அவர்களோடு கதை பேசி அவர்களைப் படம் எழுதுவார். ஏன், அவரே ஒரு குரங்குக் குட்டியை வளர்த்து வந்தார். ஒருமுறை காரியாலயத்தில் உள்ளவர்கள் எல்லோரும் மைசூருக்கு உல்லாச யாத்திரை சென்றபோது அவர் அதைத் தம்தோள்மீது வைத்துக் கொண்டு வந்தார்.

நாளடைவில் அவருக்குப் புகைப் படப் பைத்தியம் பிடித்தது; காமிராவைத் தோளில் மாட்டிக் கொண்டு வெளிச் செல்வதில் பெருமை யடைந்தார். பிறகு சினிமாப்பட விளம்பரங்களில் சிரத்தை கொண்டு நவீனமான உத்திகளைப் புகுத்தினார்.

மாலி ஒரு பெரிய காப்பி குடிகாரர். பையன் காப்பி வாங்கிக் கொண்டு வந்து வைப்பான். உடனேயே, 'ஏண்டா நிற்கிறாய்? போய் இன்னொரு கப் வாங்கிக் கொண்டு வா!' என்று விரட்டுவார். சிலர் விடாமல் சிகரெட் பிடிப்பதை 'செயின் ஸ்மோக்கிங்' என்கிறோம். மாலி செய்தது 'செயின் காப்பி டிரிங்கிங்'. அதன் பயனாய் அவர் ஈரல் அரித்துப் போய் விட்டது. அதைத் தொடர்ந்து வேறு பல நோய்களும் அவரைச் சூழ்ந்தன. இதை எழுதவே கை நடுங்குகிறது.

கேலிச் சித்திரம்: அப்படி என்றால் ஒருவரது உருவம் அல்லது தனிப் பாணி, அல்லது அவரது முக்கியமான குணாதிசயம் இதில் ஒன்றையோ அல்லது எல்லாவற்றையுமோ மிகைப்படுத்திக் காட்டி எழுதப்படும் அவரது உருவப்படமாகும். இப்படி இருப்பதுதான் சம்பிரதாயமான கேலிச் சித்திரம். ஆனால் மாலியினுடையது இவ் வகையல்ல.

போட்டோ காமிரா ஒரு நபரைப் படம் பிடித்துக் காட்டி விடுகிறது. அதே போல் அவரது பென்சிலும் நபரைக் கோடுகளால் படம் பிடித்து எழுதிற்று. நபரின் உருவம், 'தத்ரூபம்', 'சாட்சாத்' 'நூற்றுக்கு நூறு அப்படியே' என்றெல்லாம் வர்ணிக்கும்படியாக இருக்கும். எல்லாவற்றுக்கும் மேலாக அது ஜீவன் நிறைந்து அந்த நபரின் முக்கியமான குணாதிசயத்தின் சாயலை இலேசாகக் காட்டிக் கொண்டிருக்கும். எந்த ஓர் அம்சத்தையும் மிகைப்படுத்திக்காட்டும் உத்தியை மாலி கையாளவில்லை. எனக்குத் தெரிந்த ஒரே விதிவிலக்கு, ஒரு சமயம் பாலக்காட்டு மணியை முதல் முதல் எழுதும்போது அவர் உடலும் கழுத்தும் ரப்பர் உருவம் போல் நீண்டிருப்பதைக் காண்பித்ததாகும்.


தட்சிணாமூர்த்திப் பிள்ளை

கல்கி தமது எழுத்தால் தமிழரைத் தமிழ் படிக்கும்படியும் நகைச்சுவையை அனுபவிக்கும் உணர்ச்சி உள்ளவராகவும் செய்தார். அதே சமயத்தில் மாலி தமது 'பேசும் படங்க'ளால் தமிழரை ஓவியக் கலை ரசனை உள்ளவராகச் செய்தார்.

[இந்தக் கட்டுரையில் வெளியாகியுள்ள மாலியின் புகைப்படமும் கேலிச் சித்திரங்களும் ஆனந்த விகடன் உதவியவை.]


நான் எப்பொழுதும் சிறந்ததையே
உபயோகிக்கிறேன்
நான் தேர்ந்தெடுப்பது எவரெஸ்ட்
• எளிதாக, நம்பகமாக உழைக்கிறது.
• நியாயமான விலை
• பூராவும் உத்திரவாதமுள்ளது
• எடுப்பான தோற்றமுள்ளது
• விற்பனைக்குப் பிறகு உடனுக்குடன் பராமரிப்பு கிடைக்கிறது.
EVEREST
EVEREST
EVEREST
எவரெஸ்ட் தையல் மெஷின்
தயாரிப்பாளர்கள்: சாரதா மெஷினரி கார்ப்பொரேஷன்
தலைமை ஆபீஸ்: 11, பூஸா ரோடு, புதுடில்லி-5.
பாக்டரி: ஸதர்ன் டிரங்கு ரோடு, குரோம்பேட், மதராஸ்.



ஆர். கே. லக்ஷ்மண்



சங்கர்





தாணு [P.K.]

## அரசியல் கேலிச் சித்திரக்காரர்கள்



உம்மன்





கோபுலு





ஸ்ரீதர்





உமாபதி



தோ




''மிஸ்டர் பால் எங்கே?''

''அதோ! இவருக்குப் பொருத்தமா 'பால்'னு பெயர் வெச்சாளே, அதைச் சொல்லும். மனுஷன் குழாயைக் கண்டால் தண்ணீர் குடிக்க நின்னுடுவார்.''

★





''டெய்லர் ராமசாமிக்கும் உனக்கும் இடையே ஏதோ தகராறாமே?''

''சட்டைக்கெல்லாம் பாக்கெட்டை உள் பக்கம் வைச்சுடறான் நம்ம பிழைப்பு நடக்குமா?''

★

மனைவி: தெருவில் போறானே அவன் மாதிரிக் கொண்டை போட்டால் எனக்கு எப்படி இருக்கும் என்று இந்த 'லாம்ப் ஷேட்'டை...!





சந்தனு



# சிரிக்கவைக்கும்

# சைத்திரிகர்கள்



சுதர்ஸன்



செல்லம்




"கூப்பிட்டீர்களா சார்?"

"ஆமாம்! பெல்ட் கட்டி இருக்கிறேனு பார்!"

★

இதென்ன! சாம்பாரில் மரத்துண்டு கிடக்கிறதே?

(சதா பிறந்த வீட்டுப் பெருமையடித்துக் கொள்ளும் மனைவி ஏதோ ஞாபகமாக) எங்கள் வீட்டில் இதைவிடப் பெரிது பெரிதாக இருக்கும்!






"ஏன்டா, ராமு! உனக்குக் கல்யாண மாமே, பெண் யார்...?"

"இதோ...இவள்தான்...!"

★

காதலி: இப்படித் திருட்டுத்தனமா ஊரைவிட்டு ஓடிப் போறோமே உங்கள் வீட்டிலே என்ன நினைப்பாங்க?

காதலன்: ஒன்றும் நினைக்க மாட்டாங்க! இது 'ஆறுவது தடவை!'





மாயா



மான்











> கார் சொந்தக்காரர்: பாய்! மெக்காவுக்கு எப்படிப் போகணும்?

★

ஒருவர்: இந்தச் செஸ் ஆட்டத்தை ஆயிரம் ஆண்டுகளாக ஆடி வருகிறார்களாம். <

மற்றவர்: அட! இன்னுமா அது முடியவில்லே.



---

நடனம், ராகி, வாணி, விநு, ஸாரதி.













> ''நேற்று நீங்கள் சொல்லிக் கொடுத்த கீர்த்தனையைப் பாடட்டுமா சார்...?''

''வேண்டாம்!.. வேண்டாம்..!''

★

''மாயவரத்திலே என்னை எழுப்பணும். தூங்கிப் போயிடப் போறீங்க!'' <

''கட்டாயமா எழுப்பறேன் ஸார்! நீங்க உயரே படுத்திருக்கிற வரையிலே எனக்கு எங்கே தூக்கம் வரப்போறது...''



# கேட்பரீஸ்

# டிரிங்கிங் சாக்கலேட்

சூடாகவோ, அல்லது குளிர்ந்ததாகவோ—
மிக ருசியானது
ஒரே நொடியில் தயார்.




Aiyars CF. 400 TAMA






எடுப்பான ஆடைகள் - எங்கும் அணிந்து செல்லத்தக்கவை! எடுப்பான ஆடைகள் - எங்கும் அணிந்து செல்லத்தக்கவை!



**சக்தி ஸில்க்குகள் மற்றும் ஸூட்டிங்குகள் • ஒரு போதார் தயாரிப்பு**

அணிவதற்கு ஆனந்தம், துவைப்பதற்கு சுலபம்—சக்தி ஸில்க்குகள்! நொடியில் உலரக்கூடிய இவை எத்தனை முறை துவைத்தாலும் சுருக்கம் விழாமல் புதுமைப் பொலிவுடன் விளங்குபவை!- நீடித்து உழைக்கும், மடிப்புக் கலையாத சக்தி ஸூட்டிங்குகளை அணிந்து, நாள் முழுவதும் மலர்ந்த முகத்துடனும், தன்னம்பிக்கையுடனும், திகழுங்கள்!

SHILPI-SM-347A_TAM

# இரு மன்னர்களும் ஒரு சக்கரவர்த்தியும்

— தாணு



தலைப்பைக் கண்டு பயந்து விடாதீர்கள். மன்னர்களும் சக்கரவர்த்திகளும் குடியரசு நடக்கும் இந்தக் காலத்தில் ஏதென்று? நான் சொல்லப் போவது அந்த முடி சூடிய மன்னர்களைப் பற்றி அல்ல. நான் என் வாழ்வில் சந்தித்த இரு முடி சூடா மன்னர்களையும், ஒரு முடிதுறந்த சக்கரவர்த்தியையும் பற்றித்தான் இங்கு குறிப்பிட விரும்புகிறேன்.

உருளும் கல் ஒன்றுக்கும் உதவாது என்று சொல்வார்கள். நான் கேலிச் சித்திரம் வரைய ஆரம்பித்த காலத்திலிருந்து இன்று வரை பல பத்திரிகைகளில் உருண்டுகொண்டே வந்திருக்கிறேன். அப்படி நான் உருண்டு வந்ததால்தான் மூன்று பெரியோர்களைச் சந்தித்துப் பழகும் வாய்ப்பு எனக்குக் கிடைத்தது.

ஒருவர் 'ஆனந்த விகடன்' ஆசிரியர் ஸ்ரீ எஸ். எஸ். வாசன், மற்றவர் இந்தியன் எக்ஸ்பிரஸ் ஆசிரியர் பிராங் மொரேஸ். மூன்றுமவர் சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார் அவர்கள்.

ஸ்ரீ எஸ். எஸ். வாசனை அவரது காரியாலயங்களில் எதிலாவது சந்திக்க நேர்ந்தால் இவரா 'ஆனந்த விகடன்' போன்ற ஒரு ஹாஸ்யப் பத்திரிகைக்கு ஆசிரியர் என்றே தோன்றும். எந்த விதமான உணர்ச்சியையும் வெளிக் காட்டாத முகம். எதற்கும் அசைந்து கொடுக்காத அழுத்தம். கிச்சுக் கிச்சு மூட்டினால்கூட மனுஷன் சிரிப்பாரோ மாட்டாரோ என்ற சந்தேகம் பார்ப்பவர்களுக்கு எழும். இப்படியெல்லாம் தோற்றமளிக்கும் இவர் ஒரு பரம ரசிகர். கலை நிகழ்ச்சிகளானாலும் சரி, ஹாஸ்யத் துணுக்குகளானாலும் சரி, அவற்றைச் சுவைத்து ரசித்த எடை போடுவதில் இவர் ஒரு மன்னர். தாம் தயாரிக்கும் திரைப்படங்களின் சில காட்சிகளை ஸ்டுடியோவில் அவ்வப்போது போட்டுப் பார்க்கும் போது, அவற்றில் வயிறு குலுங்கச் சிரிக்கச் செய்யும் எத்தகைய ஹாஸ்யக் காட்சிகள் வந்தாலும் ஸ்ரீ வாசன் மட்டும் பொம்மை போல் உட்கார்ந்திருப்பார். அவருடைய மனம் அந்தக் காட்சிக்கு ஆன செலவையும் அதனால் வரப்போகும் வரவையும் எண்ணிப் பார்த்துக் கூட்டிக் கழித்துக் கணக்குப் போட்டுக் கொண்டிருக்குமோ அல்லது அதே ஹாஸ்யத்தை ஒத்திகைகளில் பல முறை கேட்டுப் பழகி விட்டதால் சிரிப்பு வராதோ, நமக்குத் தெரியாது.

ஆனால் காரியாலயத்துக்கு வெளியே ஸ்ரீ வாசன் முற்றிலும் மாறுபட்ட மனிதராகக் காட்சியளிப்பார். ஒரு சிறு நகைச்சுவைத் துணுக்கையோ அல்லது பேச்சையோ கேட்டால் போதும். 'ஓஹோ, ஹோ' என்று வாய் விட்டுச் சிரிப்பார். ஆங்கில ஹாஸ்யப் பத்திரிகை ''பஞ்ச்'' பாணியில் தமிழில் ''ஆனந்த விகடன்'' என்ற ஹாஸ்யப் பத்திரிகையைத் தொடங்கி வெற்றி கண்ட முதல்வர் வாசன். அதன் மூலம் ''கல்கி'' ''மாலி'' என்ற இரு நகைச்சுவைக் களஞ்சியங்களைத் தமிழர்களுக்கு அறிமுகப்படுத்திய பெருமை ஸ்ரீ வாசனுக்கு உண்டு.

விசாலமான அறிவும், ஆற்றலும் படைத்தவர் 'இந்தியன் எக்ஸ்பிரஸ்' ஆசிரியர் பிராங்க் மொரேஸ். அவரது ஹாஸ்யம் ஒரு தனி ரகம். ''ஆளைப் பார்த்து மயங்காதே, ஊதுகாமாலை'' என்று அரசியல் டம்பாச்சாரிகளின் வேஷத்தைக் கலைத்துவிடுவதில் இவருக்கு நிகர் இவரேதான். நஞ்சு கலந்த இவரது நகைச்சுவைக் கட்டுரைகள் பல போலிப் பிரமுகர்களைப் பெரும் பதவியினின்று விரட்டி அடித்திருக்கிறது. மேனன், மாளவியா போன்ற பல தலைவர்களை இவரது பேனாச் சித்திரங்கள் சித்திரவதை செய்திருக்கின்றன. உலகத்தின் ஒவ்வொரு மூலை முடுக்குகளிலும் நடக்கும் நிகழ்ச்சிகளையும், வான வெளி விசித்திரங்களையும் துருவி அலசி ஆராய்ந்து பார்த்து இவர் கண்ட முடிவு என்ன வெனில், இதுதான்: 'உலகத்தின் அவல நிலைகளைக் கண்டு ஏங்குவதை விடச் சிரிப்பதே மேல்.' வாரா வாரம் வெளிவரும் அவரது கட்டுரைகளில் இந்தக் கொள்கை தொனிக்கிறது. உலக நாடுகளில் உள்ள விஞ்ஞானிகள், இலக்கிய மேதைகள், கலைஞர்கள் முதலியோரின் வாழ்க்கை வரலாறுகளைக் கூர்ந்து கவனித்து வந்திருக்கிறார் மொரேஸ். இவர் உலகப் பிரமுகர்களைப் பேட்டி கண்ட அளவு வேறு எந்தப் பத்திரிகையாளரும் கண்டிருக்க முடியாது. ஒவ்வொரு நாட்டிலும் சுற்றுப் பயணம் செய்து அங்கங்கே உள்ள பெரிய புள்ளிகளுடன் அளவளாவியிருக்கிறார். சில



மாசனம் இல்லாத ராஜாக்களிலிருந்து சினிமாவில் ஜொலிக்கும் ராணிகள்வரை மொரேலுக்கு அறிமுகம் ஆகாதவர்கள் எவருமே இல்லை எனலாம். உலகத்தின் எந்த பாகத்தில் வெளியான எந்தப் புத்தகமானாலும் அதன் முதல் பிரதியை அவர் பார்க்கத் தவறுவதில்லை. முதிர்ந்த அறிவும், உலகத்தைப் பல கோணங்களில் இருந்து பார்க்கும் திறமையும் இருக்குமிடத்தில்தான் ஹாஸ்யம் மிளிர்கிறது என்ற உண்மையை மொரேலின் எழுத்து வன்மை எடுத்துக் காட்டுகிறது.

**கூ**ரிய அறிவு, குன்றாத ஊக்கம், கறுப்புக் கண்ணாடி, கருடன் மூக்கு இத்தனையும் சேர்ந்தால் அது ராஜாஜியாகும்.

கேலிச் சித்திரம் போடுபவர்களுக்கு இவரை வரைவது என்றால் பாதாம் அல்வா சாப்பிடுவது மாதிரி. அதைப் போலவே ராஜாஜிக்குக் கேலிச் சித்திரங்களைப் பார்ப்பது என்றால் சூடான காப்பி சாப்பிடுவது மாதிரி.

ராஜாஜி ஓர் அரசியல்வாதியாகப் பரிணமிக்காமல் இருந்தால் ஒரு கேலிச் சித்திரக்காரராகத் திகழ்ந்திருப்பாரோ என்னவோ? அவ்வளவு மோகம் அவருக்குக் கேலிச் சித்திரங்கள் மீது. உலகத்தில் எந்த விதமான அபிமானங்களை அவர் துறந்தாலும் நல்ல கார்ட்டூன்களைப் பார்த்து ரசிப்பதற்காகவே தம் ஆயுளை நீடிக்கும்படி வேண்டிக் கொள்வார். நாட்டில் உள்ள சில கேலிச் சித்திரக்காரர்களுக்கு அவரவர்களுடைய குறிப்பிட்ட சில சித்திரங்கள் பற்றி ராஜாஜியிடமிருந்து பாராட்டுக் கடிதங்கள் போவதுண்டு. ராஜாஜியின் கருத்துக் குவியல்களும், உபமான உபமேயங்களும் நமக்குத் தோன்றவில்லையே என்று ஏங்கிப் பெருமூச்சு விடும் கேலிச் சித்திரக்காரர்கள் பலர்.

ராஜாஜி சைத்திரிகராக இல்லாவிட்டாலும் அவசியம் நேரும்போது படம் வரைந்து காட்டவும் பின் வாங்க மாட்டார். சிற்சில சமயம் அவருக்கே கார்ட்டூன் கருத்துக்கள் தோன்றும். அந்தச் சமயங்களில் அவைகளை எனக்குப் படம் வரைந்து காட்டுவார். முழுக்க முழுக்க ஒரு கேலிச் சித்திரக்காரரின் மனோபாவமே அமையப்பெற்ற ராஜாஜி ஒரு சைத்திரிகராகவே பிறக்காமல் போனது விந்தைதான்.



சிவபெருமான் திரிபுரத்தைச் சிரிப்பினாலேயே அழித்ததாகச் சொல்லக் கேட்டிருக்கிறோம்; கண்டதில்லை. ஆனால் அராஜகம், அநியாயம், அக்கிரமம், அடக்குமுறை, ஆட்சிக் கொடுமை முதலானவற்றை ராஜாஜி சிரித்தே அழிக்க முயல்வதைக் கண்கூடாகக் காண்கிறோம். 'பஞ்ச்' பத்திரிகையைத் தொடர்ந்து படித்து ரசித்தவர் ராஜாஜி. கார்ட்டூன் மேதைகள் பலருடைய சிறந்த சித்திரங்களை அவர் மறக்கவில்லை. சிறந்த கார்ட்டூனிஸ்டுகளின் சிருஷ்டிகள் எதையும் ராஜாஜி கவனிக்கத் தவறுவதில்லை. நியூயார்க் டைம்ஸ் வாரா வாரம் அளிக்கும் கார்ட்டூன் விருந்தைக் கண்டு களிப்படைகிறார். அறிவும் ஹாஸ்யமும் ஒரே நாணயத்தின் இரு பக்கங்கள் என்பதற்கு எடுத்துக்காட்டு ராஜாஜி.

## அடுத்த இதழில்

### விசேஷக் கட்டுரைகள்

★ விருந்தினரை வரவேற்கிறோம்

★ இதோ ஒரு புலமை வீரர்

★ கலை வளர்க்கும் கோயில்கள் - கர்நாடக சங்கீத மத்திய கல்லூரி

★ விமல குமாரி - சரித்திரக் கதை

ஜனவரி மாதத்திய நெடுங்கதை

ஸோமாஸ் எழுதும்

**நர்மதாதேவி**


சங்கீதக் கச்சேரியில்
கார்ட்டூன் காட்சிகள்.1

## நேஷனல் எக்கோ

# ரேடியோ உள்ள இல்லத்தில் ஒவ்வொரு நாளும் திருநாள் தான்!

**மாடல் A-789:** 6 வால்வுகள், 8 பாண்டுகள், 2 ஹை-ஃபை ஸ்பீக்கர்கள், அழகிய பெட்டி ரூ. 667.00



**மாடல் A-744:** 4 பாண்டுகள் 8 வால்வுகளின் வேலையைச்செய்யும் 6 நோவல் வால்வுகள், மனோகரமான பெட்டி ரூ. 415.00



**மாடல் B-764:** ட்ரை பாட்டரி செட் 4 வால்வுகள், 3 பாண்டுகள், பிளாஸ்டிக் பெட்டி ரூ. 270.00



**மாடல் U-756:** 3 நோவல் வால்வுகள், 2 பாண்டுகள், பிளாஸ்டிக் பெட்டி ரூ. 125.00



விலைகளில் மாறுதல் ஏற்படலாம். விலைகள் எக்ஸைஸ் டியூடி உள்பட; ஆனால் வரிகள் தனி

JWT-GRA. 1445 (s)

வருஷம் முழுவதும் குடும்பத்தில் பண்டிகையின் குதூகலம் நிலவச் செய்யும் பரிசு ... நேஷனல்-எக்கோ ரேடியோ என்பதில் ஐயமுண்டோ! நம் நாட்டிலிருந்தும் வெளிநாடுகளிலிருந்தும் ஒலிபரப்பாகும் இன்னிசை, நாடகம், மற்றும் இதர பொழுது போக்கு நிகழ்ச்சிகளை குடும்பத்தினர் அனைவரும் நாள் முழுவதும் கேட்டு மகிழ அது உதவும். கண்ணையும் கருத்தையும் கவரும் ஒப்பற்ற ரேடியோ நேஷனல்-எக்கோ!

இதர விவரங்களுக்கும், ரேடியோக்களை இலவசமாக இயக்கிக் கேட்பதற்கும் உங்களருகில் உள்ள நேஷனல்-எக்கோ டீலரை இன்றே அணுகுங்கள்.




மாடல் BT-757: ட்ரைபாட்டரி செட், 7 டிரான்ஸிஸ்டர்கள் மற்றும் 2 டயோடுகள், 4 பாண்டுகள் ரூ.415.00



மாடல் U-764: 5 வால்வுகள், மற்றும் 3 பாண்டுகள், பிளாஸ்டிக் பெட்டி ரூ. 270.00



மாடல் A-779: 6 வால்வுகள், மற்றும் 3 பாண்டுகள், வனப்புள்ள பெட்டி ரூ.395.00



மாடல் U-755: 6 சேவல் வால்வுகள், 3 பாண்டுகள், கண்ணைக்கவரும் பெட்டி ரூ. 375.00



**ஜெனரல் ரேடியோ & அப்ளையன்ஸஸ் லிமிடெட்**

பம்பாய் . கல்கத்தா . மதராஸ் . டில்லி . பெங்களூர் . ஸெகந்திராபாத் . பாட்னா

**GRA**

# நகைச்சுவை எழுத்தாளர்கள்

நம் தமிழ் மண்ணுக்கு நகைச்சுவை ஒரு கைவந்த கலை. எழுத்தாளர்கள் மட்டுமின்றித் தமிழ் மக்கள் அனைவருமே அதில் தேர்ந்தவர்கள்; அதைப் போற்றி வளர்த்தவர்கள். எல்லா நகைச்சுவை எழுத்தாளர்களின் படங்களையும் பிரசுரித்து வாசகர்களின் மகிழ்ச்சியோடு பங்கு கொள்ள வேண்டும் என்பதுதான் எங்கள் ஆசை. ஆனால் எல்லாரையுமே இந்த படங்கள் மூலம் அறிமுகப்படுத்தப் பத்திரிகையின் பக்கங்கள் இடமளிக்கவில்லை. எனவே இதோ சில நகைச்சுவை எழுத்தாளர்களை மட்டும் காண்போம்:

**1. கதிர் 2. கொத்தமங்கலம் சுப்பு 3. கோமதி சுவாமிநாதன் 4. சாவி 5. சுகிசுப்ரமண்யம் 6. சுந்தா 7. சுபஸ்ரீ 8. சுரபி 9. தாமரை மணாளன்**





























10. துமிலன் 11. தோட்டக்கார விசுவநாதன் 12. நாடோடி 13. நாராயணன் ஆர்.கே.
14. பத்மநாபன் ஆர். ஏ. 15. பரதன் 16. பூர்ணம் விசுவநாதன்
17. மாறன் 18. மகரம்




வாழ்க்கை ஒரே விமர்சனமாய் வறண்டு போச்சுது; - நாலும்
வந்தபடி பேசநாக்கும் புரண்டு போச்சுது !
கேட்கக் கேட்க அத்தனையும் கேலியாச்சுது ; - அந்தக்
கேலிக்கே நாம் ஆளாவதும் ஜோலி யாச்சுது !

அடக்கமாக இருந்த போதும் 'ஆமை' என்கிறார்; - கொஞ்சம்
அதிகம் பேச மறந்த போதும் 'ஊமை' என்கிறார் !
நடப்பை மெல்லச் சொன்னாலும் 'வாயாடி' என்கிறார்;-'போதும்
நல்லபடி வாயைவை மூடி' என்கிறார் !

கோபமில்லா இருந்தவரும் 'கோழை' என்கிறார்; - நல்ல
குணம் பொறுமை காத்தவரும் 'மோழை' என்கிறார்!
பாபம்கண்டு குமுறினாலும் 'பாபி' என்கிறார்; - 'ஒரே
படபடப்பு; பயல்கொஞ்சம் முன் கோபி' என்கிறார் !

கணக்குப் போட்டு வாழ்ந்தால்கூடக் 'கஞ்சன்' என்கிறார்;-காசைக்
கையிறுக்கிச் சேர்த்தால்கூடப் 'பஞ்சை' என்கிறார் !
தனக்கில்லாமல் வாழ்வோரையும் 'டம்பம்' என்கிறார்; - இந்தத்
தறுதலைகள் வாழ்க்கை யாவும் 'ஜம்பம்' என்கிறார் !

ஆளைக்கண்டு நடப்போரையும் 'காக்காய்' என்கிறார்; - 'கூலாய்'
'ஐஸு'வைச்சுத் திரிவோரையும் 'ஜோக்கர்' என்கிறார் !
வாழஇது ஏனின்னாலும் வாரித் தூற்றுகிறார் ; - நல்லா
வாழும் வழி தெரியலேன்னு பேரைத் தூற்றுறார் !

ஒதுங்கியேபோ னாலும்விட மாட்டேன் என்கிறார் ; - 'ரொம்ப
உனக்கிருக்கும் திறமை வெளிக் காட்டேன்!' என்கிறார்!
பதுங்கியே நின்னாலும்கூடப் பகட்டச் சொல்கிறார்; - மலைப்
பாறையையும் அப்படியே புரட்டச் சொல்கிறார்!

வாழ்க்கை ஒரே விமர்சனமாய் வறண்டு போச்சுது ; - ஆக
வந்தபடி பேசநாக்கும் புரண்டு போச்சுது !
கேட்கக் கேட்க அத்தனையும் கேலி யாச்சுது; - அதையும்
கேட்டுக் கொஞ்சம் ரசிப்பதேநம் ஜோலி யாச்சுது !



# மாமனார் வாழ்க!

நாடோடி

இத் தலைப்பைப் பார்த்தாலே என் மாமனார் ஆச்சரியப்படுவார். எனக்கு ஏதாவது மனக் கோளாறு ஏற்பட்டு விட்டதோ என்று கூடச் சந்தேகப்படுவார். ஏனெனில், அவரைப் பற்றி நான் என்ன அபிப்பிராயம் வைத்துக் கொண்டிருக்கிறேன் என்பது அவருக்குத் தெரிந்த விஷயம்தான்.

இருபது வருடங்களுக்கு முன்னர், நான் அவர் பெண் சரசுவைக் கலியாணம் செய்து கொள்வதாக ஒப்புக்கொண்ட போது, இந்த இடம் வேண்டாம் என்று என் தாயார் எவ்வளவோ சொல்லிப் பார்த்தாள். ''ஆறு பெண்களைப் பெற்றவரை மாமனாராக ஏற்றுக் கொள்கிறேன் என்கிறாயே, அவர் கலியாணத்துக்குப் பிறகு உன்னை எங்கே கவனிக்கப் போகிறார்?'' என்றாள்.

என் தாயார் சொன்ன வார்த்தை துளிக் கூடப் பொய்யாகக் கூடாதே என்று என் மாமனாருக்கு இருந்த கவலை வேறு யாருக்கும் இருந்ததாகத் தெரியவில்லை. சரசுவை என் தலையில் கட்டினதுதான் தாமதம், தனக்கும் எனக்கும் ஒரு சம்பந்தமும் இடையாது போல் நடக்கத் தொடங்கி விட்டார். நான் அவரைத் தேடிக் கொண்டு அவர் வீட்டுக்குப் போனால் நான் வருவதை எப்படியோ முன் கூட்டியே தெரிந்து கொண்டு வெளியே போய் விடுவார்! எங்கள் இருவர் வீட்டிலும் 'போன்' இருப்பதால் ஒரு வேளை சரசுதான் தகப்பனாருக்கு எச்சரிக்கை செய்வது என்று வைத்துக் கொண்டிருக்கிறேனோ! எத்தனை நாழி காத்திருந்தாலும் ஆள் அகப்பட மாட்டார்.

என் மாமியாரோ, தன் புருஷனுக்குத் துளிக்கூடக் கெட்ட பெயர் வரக் கூடாதே என்பதில் அத்தனை கவலையுள்ளவள். ஆகவே, என் மாமனார் என்னை இத்தனை அலட்சியப் படுத்தும் போது, தான் ஏதாவது செய்து விட்டால் தன் புருஷனுக்குக் கெட்ட பெயர் வந்து விடுமோ என்று பயந்து ஒன்றும் செய்யவே மாட்டாள்.

ஆக, இந்த இருபது வருஷங்களாக 'ஏன்டா ஆறு பெண் பெற்றவரை மாமனாராக அடைந்தோம்?' என்று தான் நான் கவலைப்பட்டுக் கொண்டிருந்தேன்.

ஆனால் சமீபத்தில்தான் நான் என் மாமனார் எனக்குச் செய்திருந்த பெருத்த அனுகூலத்தை உணர்ந்தேன். ஏன் இத்தனை நாளும் அவரைக் கோபித்துக்கொண்டோம் என்று கூடக் கவலைப்பட்டேன். ஆறு பெண்களைப் பெற்றவர் பத்துப் பெண்களைப் பெற்றிருந்தால் இன்னும் கூட அனுகூலமாக இருந்திருக்குமே என்று நினைத்தேன்.

திடீரென்று இந்த மன மாற்றம் ஏற்பட்டதற்கு என் பெண் அனுராதாவின் கலியாணம் தான் காரணம். அவள் கலியாண விஷயமாகப் பேச்சு வார்த்தைகள் நடந்து கொண்டிருந்த போதுதான், என் மாமனார் ஆறு பெண்களைப் பெற்றது எத்தனை நல்லதாகப் போய் விட்டது என்பதை உணர்ந்தேன்.

என் கைக்கு வந்து சேர்ந்த ஒரு பையன் ஜாதகம், அனுவின் ஜாதகத்துடன் பொருந்தியிருக்கவே, பையன் எங்கிருக்கிறான், பெற்றோர்கள் எங்கிருக்கிறார்கள் என்று விசாரித்தேன். பெற்றவர்கள் பம்பாயிலும், பையன் பூனாவிலும் இருக்கிறார்கள் என்று தெரியவே என் பம்பாய் ஷட்டகருக்கும், பூனா ஷட்டகருக்கும் உடனே கடிதங்கள் பறந்தன.

இரண்டே நாட்களில், பெற்றோர்களைப் பற்றியும், பையனைப் பற்றியும் அவர்கள் சமர்ப்பித்த ''அறிக்கைகள்'' என் கைக்கு வந்து சேர்ந்தன. அந்த அறிக்கையைப் படித்துப் பார்த்து அது நல்ல இடம்தான் என்ற தீர்மானத்துக்கு வந்தேன். ஆனால் பம்பாய்க்கு எத்தனையோ கடிதங்கள் எழுதியும், பையனின் தகப்பனாரிடமிருந்து சரியான பிடி கொடுத்துக் கடிதம் வரவில்லை.

உடனே பம்பாய் ஷட்டகருக்கு மீண்டும் என்னிடமிருந்து ஒரு கடிதம் பறந்தது. அவர் மீண்டும் ஓர் அறிக்கை தயாரித்து அனுப்பினார். அந்த அறிக்கையைப் பார்த்த பிறகுதான் சூட்சமம் தெரிந்தது. பையனின் தகப்பனாருக்குக் கல்கத்தாவில் ஒரு மாப்பிள்ளை இருக்கிறார் என்றும், அவர் வைத்ததுதான் அவர்கள் வீட்டில் சட்டம் என்றும், அவர் இந்த இடத்துக்குச் சம்மதப்பட்டால்தான், பையனின் தகப்பனார் சம்மதப்படுவார் என்றும் தெரிந்து கொண்டேன்.

வேறு ஓர் ஆளாக இருந்தால் இதைப் பற்றிக் கவலைப்பட்டிருப்பார். ஆனால் என் மாமனார் எனக்குக் கல்கத்தாவிலும் ஒரு ஷட்டகர் ஏற்பாடு செய்து கொடுத்திருக்கும் போது நான் ஏன் கவலைப்படுகிறேன்? உடனேயே என்னிடமிருந்து கல்கத்தா ஷட்டகருக்கு ஒரு கடிதம் பறந்தது. அடுத்த நாளே ஷட்டகரிடமிருந்து குறிப்பு கிடைத்தது.



ஆச்சரியம் என்னவென்றால், கல்கத்தா ஷட்டகரும், அந்த மாப்பிள்ளையும் ஒரே பள்ளியில் ஒரே வகுப்பில், பல வருஷ காலம் சேர்ந்தாற்போல் படித்தவர்களாம். (இரண்டு பேருக்கும் பள்ளி அனுபவம் ஒரே மாதிரி இருக்கக் கொண்டுதான் இன்று இரண்டு பேரும் தொழிலதிபர்களாக மாறி லட்சக் கணக்கில் சம்பாதித்துக் கொண்டிருக்கிறார்கள்!) அதோடு அந்த மாப்பிள்ளை பன்னிரண்டு வருஷங்களுக்கு முன்னர் எங்கள் தெருவிலேயே வசித்து, அப்பொழுது ஐந்து வயதாக இருந்த என் பெண் அனுவைப் பார்த்தாராம். அதோடு, அனுவும், அவருடைய ஐந்து வயதுப் பெண் ஒருத்தியும் சேர்ந்து விளையாடியவர்களாம். ஆகவே, இந்த ஞாபகங்களை வைத்துக் கொண்டு, கல்கத்தா மாப்பிள்ளை, பம்பாயிலிருந்த தம் மாமனாருக்கு, ''நான் நல்ல இடம்'' என்று தகவல் அனுப்பிவிட்டார்.



மாப்பிள்ளை சொன்னதுதான் வேதவாக்கு என்று எனக்கு வரப் போகிற சம்பந்தி கொண்டிருந்ததால் (இதே மாதிரி என் மாமனாரும் இருக்கக் கூடாதோ!) என் பெண்ணைத் தம் பிள்ளைக்குப் பேசலாம் என்று ஒப்புக் கொண்டார்.

ஆனால் பெண்ணும், பிள்ளையும் சந்தித்துச் சம்மதம் தெரிவிக்க வேண்டுமே! ஆனால் அதற்குப் பையனுக்கு இன்னும் லீவு கிடைக்கவில்லை என்றுதான் திரும்பத் திரும்பப் பதில் வந்து கொண்டிருந்தது. லீவு எடுத்துக் கொண்டு சென்னை வருவதற்குப் பையன் அத்தனை தீவிரமாக இருந்ததாகவும் தெரியவில்லை. ஒரு வேளை எத்தனைக்கெத்தனை தாமதம் ஆகிறதோ, அத்தனைக் கத்தனை வரதட்சிணைத் தொகை உயரும் என்று எதிர்பார்த்தார்களோ, என்னவோ!



ஆனால் ஐந்து ஷட்டகர்களைப் படைத்த நான் இதற்கெல்லாமா கவலைப் படுவேன்! பையனின் தலைமைக் காரியாலயம் டில்லியில் இருக்கிறது என்று தெரிந்ததும் என் டில்லி ஷட்டகருக்கு ஒரு தந்தி அடித்தேன். அடுத்த நாளே அவர் தலைமைக் காரியாலயத்துக்குச் சென்று, பையனை, சென்னைக்கு ஆபீஸ் காரியமாகவே அனுப்பி வைப்பதற்கு ஏற்பாடு செய்துவிட்டார்.

ஆகவே பையன் சென்னைக்கு வந்துதான் தீர வேண்டும் என்கிற நிலைமை ஏற்படவே, பெற்றோர்களும் வந்தார்கள், எல்லோரும் சேர்ந்து பெண்ணைப் பார்த்தார்கள்; சரியென்று சொன்னார்கள்.



ஆனால் கலியாணத்துக்கு இன்னொரு தடை இருந்தது. தாம் கேட்டதையெல்லாம் நான் கொடுப்பேனோ என்கிற சந்தேகம் என் சம்பந்திக்கு வந்து விட்டது.

அத்தனைக்கும் அவர் கேட்டதற்கெல்லாம் இல்லை யென்று சொல்லாமல் நான் சரி, சரி யென்று தான் சொன்னேன். அப்படி நான் சொன்னதற்குக் காரணம், ''மாவாகத் தின்றால் பணியாரம் இல்லை'' என்னும் பழமொழி எனக்குத் தெரிந்திருந்ததுதான். எனக்கு ஒரே பெண்ணாக இருப்பதால் வேறு ஒருவரும் அவளுக்குப் போட்டியில்லாமல் இருப்பதால், இப்பொழுது என்ன கேட்டாலும் கொடுத்துவிடுவது, பின்னால் இல்லை யென்று கைவிரித்து விட்டால் போகிறது என்று இருந்தேன்.





அதோடு சில அம்சங்களில் அவர் கேட்டதற்கு மேலேயே கொடுப்பதாகச் சொன்னேன். உதாரணம், கட்டில், மேஜை நாற்காலி முதலிய சாமான்கள் வாங்குவதற்கு ரூ. 1345 வேண்டும் என்று சொன்னார். அவர் மிகவும் கணக்குக்காரராதலால், எல்லாவற்றையும் கூட்டிப் பார்த்து ரூ. 1345 என்று சொன்னார். அதற்கு நான், ''ஆயிரத்து முந்நூற்று நாற்பத்தைந்து என்ன கணக்கு. ஆயிரத்தைந் நூறாக வாங்கிக் கொள்ளுங்களேன்!'' என்றேன்.



ஆனால் இந்த என்னுடைய ''தாராள மனப்பான்மை'' எனக்கு ஆபத்தாகப் போய்விட்டது. எனக்குச்

## ஓ! அப்படியா!



சம்பந்தியாக வர இருந்தவர், கணக்காகக் கேட்டு, கணக்காக வாங்கி, கணக்காகக் கொடுத்துப் பழகியவராதலால், நான் எல்லாவற்றுக்கும் சரி என்று சொன்னதும், சில அயிட்டங்களில் அதிகமாகவே கொடுக்கிறேன் என்றதையும் நான் ஏதோ ''தமாஷ்'' பண்ணுகிறேன் என்றும் நினைத்துக் கொண்டு விட்டார்.

அந்தச் சமயம் என்றுதான் என் உதவிக்கு வந்து சேர்ந்தார் என் பங்களூர் ஷட்டகர். அவர் இவருக்கு மேல் கணக்குப் பேர்வழி. ஆகவே அவர் எனக்குச் சம்பந்தியாக வர இருந்தவரைச் சந்தித்து, ஒவ்வொரு அம்சமாக விவாதித்து, ''அவர் எப்படி இதற்கு ஒப்புக் கொண்டார்! அவருக்கு இன்னும் குழந்தையே பிறக்காது என்று எழுதிக் கொடுத்திருக்கிறதா!'' என்று என்னைத் திட்டி ஒவ்வொரு அம்சத்திற்கும், ''இதற்கு எதற்காக இத்தனை கேட்டீர்கள், அதற்கு எதற்காக அத்தனை கேட்டீர்கள்'' என்று சண்டை போட்டு, ''இதன் விலை இதுதானே, அதன் விலை அதுதானே'' என்று சொல்லவே பிள்ளையின் தகப்பனாருக்கு என் பங்களூர் ஷட்டகரை மிகவும் பிடித்து விட்டது. நல்ல வேளையாகப் பங்களூர் ஷட்டகரின் பெண்ணுக்கு ஐந்து வயதுதான் ஆகிறதோ, நான் பிழைத்தேனோ! இல்லா விடில் அவருக்கு ஏற்பட்ட சந்தோஷத்தில், தம் பிள்ளைக்கு என் பெண் வேண்டாம் என்று தீர்மானித்துப் பங்களூர் ஷட்டகரின் பெண்ணைப் பண்ணிக் கொண்டிருப்பார்.

ஆக, என் பெண் அனுவுக்கு, சங்கடமில்லாமல் கலியாணம் முடிந்ததற்கே என் ஐந்து ஷட்டகர்கள்தான் காரணம். அதனால்தான் சொன்னேன், ''மாமனார் வாழ்க'' என்று.

ஆனால் இந்த ரகசியத்தை ஏன்டா வெளியிட்டோம் என்றிருக்கிறது. ஏனெனில், என் மாப்பிள்ளைக்கு நான் ஒரு ஷட்டகருக்குக் கூட ஏற்பாடு செய்யவில்லை. ஆகவே, நாளைக்கு அவர் தம் பெண்ணுக்குக் கலியாணம் செய்ய வேண்டிய நிர்ப்பந்தம் வரும் போது இதே மாதிரி என்னை வாழ்த்துவாரா என்பது சந்தேகந்தான்!

## இன்ப நிலை





# சிரிச்சுப் பேசலாச்சு!

காலம் மாறிப் போச்சு . நம்ம
கருத்தும் மாறிப் போச்சு
சிலந்தானந் தருமம் என்றால்
சிரிச்சுப் பேசலாச்சு (காலம்)

ஊருகூடித் தேரு இழுத்த
காலம் மாறிப் போச்சு
ஆறுபேர்கள் இருக்கும் வீட்டில்
ஏழு கட்சி ஆச்சு (காலம்)

சீட்டுக்கட்டை கலைச்சுப் போட்டுச்
செயிச்ச காலம் போச்சு
தேசக் கூட்டைக் கலைச்சுப்போட்டுச்
செயிக்கும் காலமாச்சு (காலம்)

காட்டுக்குப் போய் வேட்டையாடித்
தின்ற காலம் போச்சு
நாட்டி லோட்டு வேட்டையாடி
நடத்தும் காலம் ஆச்சு (காலம்)

அயித்தை மகனை கட்டிக்கிட்ட
அந்தக் காலம் போச்சு
அதிகப் பணத்தை பாக்குறாங்க
அதிலும் ப்ளாக் ஆச்சு (காலம்)

சித்திரத்தில் வரைஞ்ச மாடு
திமினில் லாமல் போச்சு
சீமைப்பசுவைப் பாத்து அதுவும்
காப்பி யடிக்கலாச்சு (காலம்)

நீதிக்கதைகள் காதல் கதைக்கு
நிகரில் லாமப் போச்சு
நித்தம் நித்தம் கேட்கும் சேதிப்
புத்தகம் வரலாச்சு (காலம்)

படத்தைப் புடிச்சி புத்திசொன்ன
பண்டைக் காலம் போச்சு
நடத்தைபோலே படத்தைப் பார்க்கும்
நல்ல காலம் ஆச்சு (காலம்)

குளம்புவைக்கத் தெரிஞ்ச பொண்ணைக்
கொண்ட காலம் போச்சு - இகக்
கூட்டரிலே கூடச் சுத்த
கூட்டுத் தேடலாச்சு (காலம்)

பட்டுச்சேலை விலைக்கு மனிசன்
சட்டை போடலாச்சு - அதைத்
தொட்டுப்பார்த்து அழுக நைலான்
துணியைக் கட்டலாச்சு (காலம்)





# கொத்தமங்கலம் சுப்பு

தந்தி வாத்யம் நந்திமுழவு
தட்டுக் கெட்டுப் போச்சு
சந்தைப் பேட்டைச் சத்தமெல்லாம்
சங்கீதம் என்றுச்சு (காலம்)

ஒன்குமொரு கேட்டுப் பாட்டு
கேட்ட காலம் போச்சு - இப்ப
ஒஞ்சாப்போறும் என்று சொல்லி
உட்கார்ந்திருக்க லாச்சு (காலம்)

ஈரோயினைப் பார்த்து மனிசன்
இளிச்ச காலம் போச்சு
எங்கஆளு என்று பல்லை
இளிக்கும் காலம் ஆச்சு (காலம்)



பெண்டுபிள்ளைக்காக உழைச்ச
பண்டைக்காலம் போச்சு - இப்ப
கண்டபோது காதல் என்ற
கருத்து பரவலாச்சு (காலம்)

அண்ணன் தம்பிகூடி வாழ்ந்த
அந்தக் காலம் போச்சு - இப்ப
தன்னந் தனி அக்கௌண்ட்டு
தனிக்கணக்கு ஆச்சு (காலம்)

ஒட்டல்சோறு ரோட்டில் தூக்கம்
உத்தமம் என்றுச்சு
விட்டை நடத்த புளிமிளகா
விலைகள் ஏறிப் போச்சு (காலம்)



காசுக்கு ஒருபச்சி வாங்கித்
தின்ன காலம் போச்சு
கட்லிட்டாகி கூடப் பத்துக்
காசைக் கேக்க லாச்சு (காலம்)

ஆலமரத்தை நட்டு வளர்த்த
அந்தக் காலம் போச்சு
ஆறுமாசப் பயிரை வளர்க்க
ஆசைப்படுவ தாச்சு (காலம்)

பட்டிதொட்டி யெல்லாம் விளக்கு
பட்டப் பகலே ஆச்சு
பாழாப்போன மனசு மட்டும்
பாழடைஞ்சு போச்சு (காலம்)

வருத்துப் பாட்டைப் பேசுறதே
மனிசன் பேச்சு ஆச்சு
கருத்தைஉசத்தும் பேசும் பேச்சு
காந்தியோடே போச்சு. (காலம்)



# கொட்டாதே வான் மழையே!



பட்டினத்து வாழ்க்கையிலே
பலதேவைக் கிடமுண்டு.
பசு எருமை கணக்கிட்டால்
பாலுக்கும் பஞ்சமுண்டு.
பாட்டில் பால் வந்தாலும்
பற்றாக் குறையுண்டு.

வீதி நிறைந்திருந்தும்
வீட்டுப் பஞ்சமுண்டு.
விலைக்கிடாய் வாடகையை
வேண்டிடுவோர் பலருண்டு.
வீதியே என்றலறி
வீழ்ந்திருப்போர் சிலருண்டு.

திரைப்படத்து நாயகிகள்
'ட்ரிக்'காகச் சொட்டுவிடும்
'திக்'கான கிளிசிரைன்போல்
தேனுகச் சொட்டும்குழாய்
தேவைக்குப் போதாது.
தெரிந்த விஷயம்தான்.

குழந்தைக்கும் காப்பிக்கும்
கொட்டட்டும் பால்மழையே!
குடியிருக்க வீடுகளும்
குவியட்டும் நகர்ப்புறத்தே!
கூப்பிக்கரம் நீட்டுகிறேன்
கொட்டாதே வான்மழையே!

மழைவேண்டா மறியலென்று
மாருட்டம் கொள்ளாதீர்!
மாநகரின் எல்லையிலே
மழை கொட்டட்டும்! கொட்டட்டும்!
மவுண்டுரோடும் எக்மோரும்
மதிப்பாகப் பிழைக்கட்டும்!








★



**வாத்தியார்:** *வீட்டுப் பாடம் கொடுத்தால், சரியாகப் படிப்பியா?...இல்லே, படிச்சுட்டேன்னு பொய் சொல்லுவியா?*

**பையனின் அப்பா:** *அதெல்லாம் அவனுக்கு ஒண்ணும் தெரியவே தெரியாதுங்க! நீங்கதான் பார்த்துச் சொல்லிக் கொடுக்கணும்!*

★



அள்ளிக் கொடுத்தான் கர்ணன்.
அரும்கொடிக்குத் தேரைக்
　　　　கொடுத்தான் பாரி - இன்று
அள்ளித் தெளிக்கிறார் சேற்றை - அவர்
ஆஸ்தான டிரான்ஸ்போர்ட்டு ஒட்டி.
துள்ளிக்குதித்துத் தூரவே போனாலும்
வெள்ளைத் துணியின் விதிமுடிந்து
　　　　　　　　போயிடுதே!

பூந்தமல்லிச் சாலையிலே
பூப்போல நடந்தாலும்
பூப்போட்ட புடவையாகப்
போகுதய்யா அரைவேட்டி!
புள்ளியிட்ட நைலானும்ப்
புதுவண்ணம் பெற்றிடுது.

பரந்திருக்கும் சாலையிலே
பதுங்கி நடந்தாலும்
பாய்ந்தடிக்கும் மழைநீரைப்
'பாண்டி'லே பாய்க்கிறார்.
பார்த்திருக்கும் லாண்டரியார்
பரவசமே அடைகின்றார்!

கருநீல மேகங்காள்!
காட்டுங்கள் உம்கை வரிசை.
குட்டைகுளப் பரப்பிலே
கொட்டுங்கள் உம்சரக்கை.
குழுமிநிற்கும் வயல்வெளியில்
குஷியாய் இறங்குங்கள்.

பட்டினத்து எல்லைக்குள்
பாய்ந்துவந்து கொட்டாதீர்
பலவகையில் எங்களையே
பரிதாபப் படுத்தாதீர்!
பாண்டோ வேட்டியோ பளபளக்கும்
　　　　　　　　சட்டைகளோ
பாழாகிப்போகாமல் பண்புடனே
　　　　　　　　காத்திடுவீர்!

★




"என்னப்பா, காலை நேரத்திலே எங்கே இப்படிப் புறப்பட்டுட்டே!"
"ஒன்றுமில்லே. அவசரமாக ஆயிரம் பவுன் தேவைப்படுது.."
".....ஆயிரம் பவுனு? அதற்கு ஈடு உங்கிட்டே இருக்கா?"
"ஆகா! இந்த யானையை வச்சிக்கிட்டுக் கடன் கொடுங்களேன்!"

★



# மாறிப்போன மாப்பிள்ளை

பூர்ணம் விசுவநாதன்




(சின்ன விஷயமாகத்தான் ஆரம்பமாகிறது. ஆனால் அது வளர்ந்து பரவும் விதமோ, நினைக்கவே நடுக்கமாக இருக்கிறது......

தாசில்தார் பரமசிவம் பிள்ளை வீட்டின் விஸ்தாரமான கூடம். காலை பத்துமணி. கலியாண மண்டபம் போல் பெரிய பெரிய தூண்களோடு காட்சி யளிக்கும் அந்தக் கூடத்தில், தவசிப்பிள்ளை சங்கரன் ஒரு தூணில் சாய்ந்தவாறு, வேலையாள் அகிலாண்டத்துடன் பேசிக்கொண்டிருக்கிறான். கீழ் குரலில்தான் பேசுகிறார்கள். என்றாலும், கூடம் முழுவதிலும் எதிரொலி கேட்கிறது. சங்கரன், தான் முதலாளியுடன் 'காம்ப்' போய்விட்டு வந்த விமரிசையை வர்ணித்துக் கொண்டே போனவன், திடீரென்று சுரத்தில்லாமல் பேசுகிறான்.)

சங்கரன்: ஆமா அகிலாண்டம், ஏதோ இந்த மொதலாளியோட நல்ல கொணத்துக்காகத்தான் இந்த வீட்டிலே வேலை பார்க்கணும்..... இல்லாட்டி...

அகிலாண்டம்: அதென்னங்க, அப்படி வெறுத்தாப்பிலே பேசறீங்க?

சங்: பின்னே என்ன அகிலாண்டம், நான் இத்தினி நாளு மொதலாளியோடு வெளியூர்லசுத்திப்போட்டுத் திரும்பி வந்திருக்கிறேன். இந்த மாப்பிள்ளை மனிசன் கொஞ்சம்கூட 'இது'; இல்லாம...

அகிலாண்டம்: ஐயையோ, என்ன செஞ்சாருங்க?

சங்கரன்: நான் வீட்டுக்குள்ளார நொழைஞ்ச ஒடனே அந்த ஆளைத்தான்

மொதல்லே பாத்தேன்: அவுரு, நான் சிரிச் சதையும் பார்த்துக்கிட்டே, மொறைப்போடு போறாரு. உம்? சமையலறையிலே என் காலைக் காலைச் சுத்திவர்ற ஆளு......

அபி: ஐயோ, அவரைப் போயி ஒரு ஆளா நீங்க கணக்குலே சேர்த்துக்கிட்டு.....

சங்: அதுக்கில்லே அபிலாண்டம், அந்த அசட்டு ஆளையும் ஒரு ஆளா மதிச்சு நான் சிரிக்கப் போயி அவமானப்பட்டுட்டேனிங் கிறதை நெனைச்சா ஆத்திரம் வராது? ஒவ் வொரு வேளைச் சாப்பாட்டுக்கும் எங்கிட்டே வந்து கெஞ்சிக் கூத்தாடின ஆளுக்கு இப்ப என்ன வந்திரிச்சின்னேன், புது கௌரவம்!

அபி: எடுத்ததுக்கெல்லாம், 'அபிலாண்டம், அபிலாண்டம்'னு நச்சரிக்கிற ஆளு. இப்ப என்னைக் கண்டாக் கூட வேற பக்கம் மொகத் தைத் திருப்பிக்கிட்டுப் போறாரு....

சங்: அட, எஞ்சிவனே! இந்த மனிசனுக்கு என்ன வந்திரிச்சு இப்ப?

அபி: கல்யாணம் கட்டி மாசக் கணக்குல வெட்டிச் சோறு தின்ன பிற்பாடு எசமான் தயவுல இப்ப ஒரு ரெண்டு மாசமா உத்தி யோகம் பாக்கிறாருல்லே?

சங்: ஆமாம்...ஆமாம்...அதான் காரணம்.

[இதேசமயம் உள் அறை ஒன்றில் பரம சிவம் பிள்ளையும், அவர் மனைவி ரங்க மும் அந்தரங்கமாகப் பேசிக்கொண் டிருக்கிறார்கள் — மாப்பிள்ளையைப் பற்றித்தான்]

பரம: ஏன் ரங்கம், நான் 'காம்ப்' போயிருந்தபோது இங்கே என்னமாவது நடந்திச்சா?

ரங்கம்: ஒண்ணும் நடக்கலியே! ஏன்?

பரம: ஏதோ நடந்திருக்கு. இல்லாத போனா இப்பிடி மாறிப்போறதுக்குக் கார ணம் இல்லியே!

ரங்கம்: என்ன சொல்றீங்க நீங்க?... எது மாறிப் போச்சுங்கறீங்க?

பரம: மாப்பிள்ளை இப்படி திடீர்னுமாறிப் போயிட்டாரே, அதுக்கு என்ன காரணம்னு தெரியலியே!

ரங்கம் (வியப்புடன்): ஏன், ஒங்ககிட்ட அவுங்க.....

பரம: இத்தனைநாள் கழிச்சு நான் 'காம்ப்' லேருந்து திரும்பி வந்து வீட்டுக்குள்ளே நொழையறேன், அப்போ மாப்பிள்ளை மாடிப் படியிலிருந்து எறங்கி அவருபாட்டுக்குப் பத்தடி தூரத்துலே போறாரு, என்னைப் பாத்து 'வாங்க'ன்னு ஒரு வார்த்தைகூடச் சொல்லலே.

ரங்கம்: நெசமாகவே ஒங்களைப் பாத்தாங் களா, ஒருவேளை கவனிக்கலியோ என்னமோ!

பரம: யாரு சொன்னது? நேரடியாப் பாத்தவருதான் ஒரு வார்த்தைகூடப் பேசாம போறாரு. அதனாலே நான் 'காம்ப்' போயிருந்தபோது இங்கே ஏதோ நடந்திருக் குது. நிச்சயம் ஏதோ...

ரங்கம்: இத பாருங்க, இப்போ நீங்களே பேச்சு எடுத்துட்டதுனாலே சொல்றேன். மாப் பிள்ளை மாறிப்போனது ஒண்ணுதான் நீங்க வெளியூர் போயிருந்தபோது நடந்த விசயம்.

பரம (திடுக்கிட்டு): ஆ! அப்பிடின்னு.



"பஸ் டிக்கெட்டுகளெல்லாம் ஏறப் போகிறதாமே!"
"பஸ் ஏறாமல் இருந்தா சரிங்க!"

அவரு இப்பிடி மாறிப்போனது ஒனக்கு ஏற் கனவே தெரியுமா?

ரங்கம்: தெரியாம என்ன? அதைப் பத்தி நெனைச்சு நெனைச்சு நான் கொளம்பியிருக்கிற கொளப்பம் கொஞ்சமா, நஞ்சமா? யாரு கிட்டயும் சொல்லாம நான் மனசுக்குள் ளவே வச்சு மறுகிப்போட்டு, கடைசியிலே அபிலாண்டம் கிட்ட மட்டும் கேட்டேன், அவன் ஏதாவது செய்து அவுங்க கோவத்தை கௌப்பிட்டானோன்னு...

பரம: .....?

ரங்கம்: அதுக்கு அவன், ''மாப்பிள்ளைகூட நான் பேச்சை நிறுத்திப் பல நாளாயிரிச்சு, அவரும் என்னைச் சட்டை செய்யறதில்லே, நானும் செய்யறதில்லே'' ன்னு பதில் குடுத்தான்.

பரம: அப்பிடியா?

ரங்கம்: இப்ப நீங்க வர்ரதுக்கு நாலஞ்சு நாள் முன்னே பாப்பாத்தியே வந்து சொல் லவும்தான் என் மனசு ரொம்ப விண்டு போச்சு.

பரம: பாப்பாத்தியா? (திகிலுடன்) என்ன சொன்னா?... அவளையும்....

ரங்கம்: அவளை அவுங்க லச்சியமே பண்ற தில்லையாம். சரியாப் பேசறதுகூட இல்லி யாம். அவுங்க இருக்கிற பக்கம் இவ போனாக் கூட அவுங்க கவனிக்கிறதில்லையாம். முந்தி யெல்லாம் வேறெந்த அசட்டுத்தனம் இருந் தாலும் பாப்பாத்தியைப் பாக்கிறப்போ மாப்பிள்ளைக்கு வாயெல்லாம் பல்லாயிரும். இப்ப சிரிக்கிறதே யில்லையாம்.

பரம: ரங்கம், பாப்பாத்திமாதிரி ஒரு பொண்ணு கிடைக்குமா இவருக்கு? இவ்வளவு அருமையான பொண்ணை இவருக்குக் கட்டிக் குடுத்து வேலையும் வாங்கிக் கொடுத்ததுக்கு...

ரங்கம்: நான் சொன்னாக் கோபிப்பீங்க... எனக்கென்னமோ நீங்க அவுங்களுக்கு வேலை வாங்கிக் குடுத்த பெறகுதான் இந்த மொறைப்பு வந்திருக்குன்னு தோணுது. அதுவும் மொத மாசச் சம்பளம் வாங்கின



"சீக்கிரமா வீட்டுக்குப் போகணுமென்றால் ஒரு பஸ்கூட வரலீங்க!"
"வீட்டுக்குக் கூட இப்ப பஸ் விடறாங்களா, என்ன?"

பிற்பாடு அவுங்க செய்யற அட்டகாசத்தைத் தாங்க முடியுதில்லே.

பரம: நான் ஏதோ நன்மைக்காகச் செய்யப் போயி.... ஹூம், மனசு ரொம்ப அல்லல் படுது...

[இதே சமயம், மாடியில் மாப்பிள்ளை சிங்காரத்தின் அறையில் ஓர் அற்புதக் காட்சி உருவாகிக் கொண்டிருக்கிறது.

சிங்காரம் ஒரு நாற்காலியில் உட்கார்ந்து, வாயில் வெற்றிலையை 'நொச்சு நொச்' சென்று சவைத்தவாறு பேப்பர் வாசித்துக் கொண்டிருக்கிறான். பார்த்தால் இந்தப் பூனையும் இந்தப் பால் குடிக்குமா என்றுதான் தோன்றுகிறது. ஆனால் அவன் மனத்தில் என்னென்ன பயங்கர எண்ணங்கள் உருவாகிக் கொண்டிருக்கின்றன என்பது அவனுக்கே தெரியுமோ, என்னமோ! அவன் ஒரு எரிமலை! பயங்கர எரிமலை!

சிங்காரத்தின் வெற்றிலை சவைக்கும் சத்தத்தையும் அவ்வப்போது பேப்பரின் சலசலப்புச் சத்தத்தையும் தவிர ஓர் இஸ்திரிப் பெட்டியின் சத்தமும் அடிக்கடி கேட்கிறது. பாப்பாத்தி தன்னுடைய அருமையான சில்க் புடவைகளுக்கு இஸ்திரி போட்டு ஜன்னலோரத்துப் பெட்டியின்மேல் அடுக்கிக் கொண்டிருக்கிறாள். அவள் முகத்தில் ஒருவிதக் கிளி பரவி யிருக்கிறது. இருந்தாலும், போலி அமைதியுடன் வேலையை முடித்துவிட்டு இஸ்திரிப் பெட்டிக்கான ஸ்விட்சை அணைப்பதற்காக வெளி வராந்தாவுக்கு வருகிறாள்.

ஸ்விச்சை அணைத்து, இஸ்திரிப் பெட்டியை வராந்தாவிலேயே ஓர் ஓரமாக வைத்துவிட்டு அவள் அறைக்குத் திரும்புவதற்குள் சிங்காரம் கூஜா ஒன்றிலிருந்த தண்ணீரை எடுத்துக் கொப்பளித்துத் துப்ப ஆரம்பித்து விடுகிறான். கொப் பளித்த தண்ணீரை வேண்டுமென்றே அவன் ஜன்னலோரப் பெட்டிமேலிருக்கும் சேலைகளின் மேல் துப்புகிறான். முன்னாலிருந்து பாப்பாத்தி இதைக் கவனித்துக் கொண்டிருக்கும் போதே சிங்காரம் மேலும் மேலும் தண்ணீரை விட்டுக் கொப்பளித்துத் துப்பிக் கூஜா பூராவையும் தீர்க்கிறான். இஸ்திரி போட்ட புடவைகளனைத்திலும் வெற்றிலைக் காவி படருகிறது. காவித் தண்ணீர் கால் விட்டோடுகிறது.

விழி பிதுங்க இந்தக் கோரக் காட்சியைப் பார்த்துக் கொண்டிருந்த பாப்பாத்திக்கு நெஞ்சு வெந்துவிடும் போலாகி விடவே, ஒரு வார்த்தைகூடப் பேசாமல் முகத்தைப் புடவைத் தலைப்பால் மூடிக்கொண்டு அறையை விட்டு வெளியேறுகிறாள். சிங்காரம் கூஜாவை வைத்துவிட்டு, வெளியே செல்லும் எண்ணத்துடன் ஒரு சட்டையை எடுத்து மாட்டிக் கொள்கிறான். அவன் பார்வையிலோ, செய்கையிலோ பதற்றம் ஏதும் இல்லை...

இதே சமயம் கீழே பரமசிவமும் ரங்கமும் கவலையுடன் பேசிக் கொண்டே தற்செயலாகக் கூடத்துப் பக்கம் வருகிறார்கள். அங்கே தவசிப் பிள்ளை சங்கரனும், வேலையாள் அகிலாண்டமும் பேசிக் கொண்டிருப்பதை பார்த்து அந்தப் பேச்சில் தாங்களும் கலந்துகொள்கிறார்கள். சங்கரனுக்கு நடந்த அவமானமும் துயரமும் அவர்களுக்குத் தெரிகிறது.

அலி (தயக்கத்துடன்): சொன்னு நீங்க கோவிக்கக் கூடாது... மாப்பிள்ளை அய்யா வேலைக்குப் போக ஆரம்பிச்சு ஒரு மாசம் கழிச்சுத்தான் இந்த மாதிரி நடத்தை வந்திருக்குதுங்க. அதுனலெ...

பரம: அதுனலெ, வேலைக்கும் அவுங்க நடத்தைக்கும் ஏதோ சம்பந்தம் இருக்குங்கறது எங்களோட அபிப்ராயம்.

ரங்கம்: எனக்குப் பாப்பாத்தியை நெனைச்சாத்தான் கவலையா யிருக்குது.

[சொல்லி வாய் மூடவில்லை. பாப்பாத்தி முகத்தைப் புடவைத் தலைப்பால் மூடிக்கொண்டு விம்மிய வண்ணம் மாடியிலிருந்து இறங்கி வருகிறாள். எல்லோரும் திடுக்கிடுகிறார்கள். ரங்கம் பயந்துபோய்ப் பாப்பாத்தியை அணைத்துக் கொள்கிறாள்.]

ரங்கம்: என்ன பாப்பு, ஏன் அழுவறே?

பரம (பாப்பாத்தியின் விம்மல் அதிகமாவதைப் பார்த்து, அருகில் வந்து திகிலுடன்): பாப்பு, என்ன நடந்திச்சு?

[பாப்பாத்தி விம்முகிறாள்.]

ரங்கம் (மூச்சுத் திணற): பாப்பு, என்ன நடந்திச்சு, சொல்ல மாட்டியா?

பரம: அழுகையை நிறுத்திவிட்டுச் சொல்லம்மா, என்ன நடந்ததுன்னு. நீ சொல்லாட்டி, நான்நேரே மாப்பிள்ளை கிட்டவே போயிக் கேட்டுரட்டுமா?

பாப் (பதறி): வேண்டாம்பா, நானே சொல்லிடறேன்....

ரங்கம் (அவள் தலை மயிரைக் கோதிவிட்டு) அழாமச் சொல்லு கண்ணு.

பாப் (விம்மிக்கொண்டே): இல்லேம்மா, நான் என் ஸில்க் ஸாரி பூராத்தையும் இஸ்திரி போட்டு, ஜன்னலடிப் பெட்டி மேல வச்சுக்கிட்டே வந்தேன். அவுங்களும் பாத்துக்கிட்டே வெத்தலையைச் சவைச்சுக்கிட்டிருந்

# விரும்பினால் மட்டும் போதாது —

## — நீங்கள் உழைத்துச் சம்பாதிக்க வேண்டும்

ஒவ்வொரு மனிதனும் கண்யமாக நல்வாழ்வு வாழத்தான் ஆசைப்படுவான்; ஆடம்பரப் பொருள்கள் வேண்டுமென்பதில்லை. விளம்பரம் செய்யப்படும் அநேக உபயோகப் பொருள்களை இளம் தம்பதிகள் ஆசையோடு நோக்குவதை யார் குறைகூற முடியும்? **ஆனால், தற்காலம் அவசியமான அநேக சாமான்களின் விலை மிக அதிகம். சேமித்தால்தான் அவைகளை வாங்க முடியும்.**

திட்டமிட்டு சேமிக்க வேண்டும். உங்கள் வருமானத்தைச் செலவழிக்கும் முன்னரே, ஒரு பகுதியைச் சேமிப்புக்கென்றே தவறாமல் ஒதுக்க வேண்டும். இல்லாவிடில் சேமிப்பதற்கு எதுவும் மிஞ்சாமல் போக நேரிடும்.

## தி பாங்க் ஆப் இந்தியா லிமிடெட்

T. D. கன்ஸாரா, ஜெனரல் மானேஜர்



B/C/154

தாங்க. நான் இஸ்திரி போட்டு முடிஞ்ச உடனே அவுங்கபாட்டுக்கு நாக்காலியிலே ஒக்காந்தவாக்கிலேயே தண்ணியைக் கொப்புளிக்கக் கொப்புளிக்க அவ்வளவு துணி மேலேயும் துப்பித் தீர்த்திட்டாங்க.. எல்லாம் வீணாப்போச்சு.

பரம: ஐயையோ, நீ நடுக்கறதுக்கென்ன?

பாப் (மறுபடியும் விசிட்டழுது கொண்டே) நான் ஏன் நடுக்கணும்? நான் நாலு அடி தள்ளி நின்னு பார்த்துக்கிட்டிருக்கும் போதே, வேணும்னுதான் செய்தாருங்க.... என் முகம் போற போக்கைப் பார்த்துக்கூட நிறுத்தலே. கூசாத் தண்ணி எல்லாத்தையும் இப்படிக் கொப்புளிச்சே துப்பியிருக்காங்க.



நண்பர்: திருப்பதிக்கு முடியிறக்கப் போறீங்களா?
வழுக்கைத் தலை ஆசாமி: ஆமாம்; சின்னப் பையனா இருந்தபோது வேண்டிக் கிட்டது. இப்பத்தான் போக வேளை வருது...!

பரம: பாப்பு, என்னாலே இனி தாங்க முடியாது..... நான் இப்பவே மேலே போயி.....

பாப்: ஐயையோ, வேண்டாம்பா...... கலகம் வேண்டாம்.

பரம: கலகம் வரட்டும், பரவாயில்லே.

[இதற்குள் மாடியில் தடாலென்று ஏதோ சரிந்து விழும் சத்தம் கேட்கிறது. கூடவே, பரமசிவத்தின் குமாரர்கள் கோபாலு, ரத்தினம் இருவருடைய கூச்சலும் வானைப் பிளக்கிறது. கூடத்திலிருக்கும் கூட்டம் பூராவும் பதறியடித்துக்கொண்டு மாடிக்கு ஓடுகிறது....

மாடியின் நடு ஹாலில், ஜாதிக்காய்ப் பலகையால் ஆன பெரிய புத்தக அலமாரி கீழே விழுந்து கிடக்கிறது. புத்தகங்கள் சிதறிக் கிடக்கின்றன. பெரிய மை பாட்டில் ஒன்று கீழே விழுந்து உடைந்து, புத்தகங்களின் மேலெல்லாம் மையைக் கக்கிப் பாழ் பண்ணிக் கொண்டிருக்கிறது. கூடத்துக் கூட்டத்தைக் கண்டதும் இருவரும் துக்கம் தாளாமல் அழ ஆரம்பிக்கிறார்கள்.]

ரத்தினம்: நாங்க அடுக்கி வச்ச புஸ்தகத்தை யெல்லாம் அலமாரியோடு கீழே தள்ளிட்டுப் போயிட்டாங்கம்மா...

பரம, ரங்கம், பாப்(புரியாமல்): யாரு தள்ளினது?

கோபாலு: அத்தான்தான்.....

[எல்லோரும் 'ஆ' வென்று அலறுகிறார்கள்.]

ரத்தினம்: அலமாரியை நடு ரூம்லே வச்சு எல்லாப் பொஸ்தகத்தையும் அடுக்கி வைச்சுட்டோம்மா.... அப்ப அத்தான் சட்டையை மாட்டிக்கிட்டு வெளியே கிளம்பி வந்தாங்க....

கோபாலு: வேணும் என்றே அலமாரியைப் பார்த்து வந்தாங்க.

பரம: இப்போ அவுரு எங்கே? நானே கேக்கத்தான் போறேன்.

கோபாலு: அவுங்க தான் வெளியே போயிட்டாங்களே!..... அதோ பாருங்க.

[மாப்பிள்ளை சிங்காரம் காம்பவுண்டுக்கு வெளியில் காட்சி அளிக்கிறான்.]

பரம: ஆறு, நான் அவுரு வந்த உடனே கேக்காம விடப் போறதில்லே இதை ரெண்டுலேஒண்ணு தீர்த்தாகணும் இன்னிக்கி.

ரங்கம்: கொளந்தைக் கிட்ட கூடவா இப்பிடி...

[இதற்குள் கீழே, "ஸார்" என்று யாரோ கூப்பிடும் குரல் கேட்கவே, ஐந்து பேரும் தடதடவென்று படியிறங்கிக் கீழே வருகிறார்கள்.

கீழே சிங்காரத்தின் ஆபீஸ் மானேஜர் சேஷகிரி நிற்கிறார். அவர் முகத்திலும், கலவரம் காணப்படுகிறது.]

பரம (கால் மணிப் பேச்சுக்குப் பின் ரங்கத்தைப் பார்த்து): கேட்டியாடா ரங்கு, இவங்க ஆபீஸிலேயும் தகராறும்.

கிட்டத்தட்ட ஒரு மாசமாக யாரையும் அடையாளம் தெரியாததுமாதிரி நடந்துக்கிடுறாராம்....வேணும்னே பல சாமான்களைத் தட்டி விட்டுடுறாராம். நேத்து நம்ம சேஷகிரியைப் பாத்து மரியாதைக்கு எழுந்திரிக்கக் கூட இல்லேயாம். "ஒங்க மொகத்துக்காக, அவரோட தகுதியைக் கூடப் பார்க்காம வேலே போட்டுக் குடுத்தேனே, இதுதானு எனக்கு மரியாதை"ன்னு சேஷகிரி கேக்கறாரு. நீயே பதில் சொல்லு. நீயும் சொல்லு பாப்பாத்தி.

ரங்கம் (அவமானம் தாங்காமல்): இங்கே நம்ம வீட்டுலே என்னென்ன நடந்துக்கிட்டிருக்குங்கிறதையும் சொல்லிருங்க அவுங்களுக்கு. அப்போ புரிஞ்சுக்குவாங்க.

பரம: சொல்லியாச்சு.... சொல்லாம இருப்பேனா?.... சொன்னதிலே சேஷகிரியோட கொழப்பம்தான் ஜாஸ்தியாயிருக்குது. (திடீரென்று சேஷகிரியிடம்) ஸார், நீங்க கூசாம அவரை வேலையிலிருந்து 'டிஸ்மிஸ்' பண்ணிருங்க. என்னால ஒங்களுக்கு ஏதுக்குத் தொல்லே?

சேஷகிரி: சரியாப் போச்சு போங்கோ. ஒங்க அளவுக்கு நானும் கவலைப்பட்டு, ஒங்க குடும்பத்துலே ஒரு 'மெம்பர்' மாதிரி சொல்ல வந்தேனே ஒழிய, அப்படி சட்டுனு டிஸ்மிஸ் பண்ணிடுவேனா? எதுக்கும் நான் நம்ம மன நோய் நிபுணர் அண்ணாஜியைச் சாயங்காலம் அனுப்பறேன். அவர் சொல்றதைப் பார்த்.

துண்டு மேல் கொண்டு செய்ய வேண்டியதை யோசிக்கலாம்.

[சேஷகிரி விடை பெறுகிறார். எல்லோரும் அவரை வாசல் வரை வந்து வழியனுப்புகிறார்கள்.

காம்பவுண்டுக் கதவை நோக்கி அவர் செல்லும் போது வெளியிலிருந்து எதிரே சிங்காரம் வருகிறான். அவரைப் பார்த்துக்கொண்டே வந்தவன் பத்துப் பதினைந்து அடி இடைவெளி இருக்கும் போது, வேண்டுமென்றே கிளைப் பாதை ஒன்றில் சென்று தோட்டத்துக்குள் புகுந்து விடுகிறான்.

வாசலில் நிற்கும் அத்தனை பேரும் 'ஆ' வென்று பதைக்கிறார்கள்.]



"எசமான், வீடு நெருப்புப் பத்திக்கிட்டு எரியுதுங்க..."

"அப்போ எல்லா எலெக்ட்ரிக் லைட்டுகளையும் அணைச்சுடு.... அனாவசியமா அது வேறே ஏன் எரியணும்....!"

## 2

[அன்று மாலை ஐந்து மணி.

மாடி அறையில் சிங்காரமும், அண்ணாஜி ராவும் தனித்து விடப்பட்டிருக்கிறார்கள். அண்ணாஜியின் மன நோய் ஆராய்ச்சி ஆரம்பமாகி அரை மணி ஆகிவிட்டது.

கீழே கூடத்தில் பரமசிவம் பொறுமை யில்லாமல் குறுக்கும் நெடுக்குமாக உலாத்திக் கொண்டிருக்கிறார். ஒரு தூணின் பக்கத்தில் ரங்கமும், அவள் அணைப்பில் பாப்பாத்தியும் நின்று கொண்டிருக்கிறார்கள். கூடத்தின் ஓரத்தில் ஒரு நாற்காலியில் கோபாலு உட்கார்ந்திருக்கிறான். அதையொட்டிய ஜன்னலின் படியில் ரத்தினம் ஜன்னல் கம்பியைப் பிடித்தவாறு உட்கார்ந்திருக்கிறான். கூடத்திலிருந்து உள்ளே போகும் கதவை ஒட்டினாற்போல் ஒரு தூணின் மறைவில் சங்கரனும் அகிலாண்டமும் நின்று கொண்டிருக்கிறார்கள். எங்கும் பதற்றம் பொதிந்த அமைதி....!

திடீரென்று அந்த அமைதியைக் கிழித்துக் கொண்டு அண்ணாஜிராவின் குரல் மாடிப் படி வழியே கேட்கிறது: ''தாசில்தார் ஸார்! ஜல்தி வாங்க'' என்று அவர் கத்துகிறார்.

கீழே யிருக்கும் ஏழு பேரும் மறு நிமிஷம் மாடியில் சிங்காரத்தின் அறையில் இருக்கிறார்கள். அங்கே அவர்கள் காணும் காட்சி: சிங்காரம் முகத்தில் துண்டைப் பொத்தியவாறு விம்மி விம்மி அழுது கொண்டிருக்கிறான்!]

பரம (திகிலுடன் அண்ணாஜியைப்பார்த்து) என்ன ஸார், என்ன ஆச்சு?..... நீங்க ஏதாவது.....

அண்: ஒண்ணுமில்லே. நான் கேள்வி மேலே கேள்வியாய் போட்டுண்டே வந்தேன். திடீரென்று அழ ஆரம்பிச்சிட்டார். ஒண்ணுமே பிடிபடலே. நீங்களே கேளுங்கோ.

பரம (சிங்காரத்தின் அருகில் சென்று): ஏன் மாப்ளே அளுறீங்க?

சிங் (திடீரென்று எழுந்து நின்று அழுதவாறே): இதெல்லாம் என்ன மாமா? நீங்கள்ளாம் என்னை ஏன் இந்த மாதிரி நடத்தணும்?

பரம: மாப்பிள்ளே, நாங்க என்ன செய்தோம்? நீங்க செய்யற காரியங்களுக்கு அர்த்தம் தெரியாமல் நாங்க தவிச்சிக்கிட்டிருக்கோம். நீங்க என்னமோ எங்களை....

சிங்: நான் என்ன செய்தேன்? (அழுகையை அடக்கியவாறு) அதைத்தான் கொஞ்சம் விவரமாகச் சொல்லுங்களேன்.

பரம: நான் ஊர்லேருந்து வீட்டுக்குள்ளே நொழையும் போது என்னைப் பார்த்தும் பார்க்காதது மாதிரி நீங்க ஏன் போகணும்?

சிங் (புரியாமல்) என்ன, பாத்தும் பாக்காதது மாதிரிப் போனேனா? நீங்க வீட்டுக்குள்ளே நொழையும் போது நான் பார்க்கவே யில்லையே! நீங்க என் ரூமுக்கு வந்தப்போ தான் நீங்க காம்ப்லேயிருந்து திரும்பி வந்ததே தெரியும்....

பரம: மாப்பிள்ளே, நீங்க பொய் சொல்றீங்க. என்னை நீங்க நாலேஞ்சவாட்டி, வேணும்னே அலச்சியம் செய்திருக்கீங்க..... என்னை மட்டுமா (ரங்கத்தைக் காட்டி) இவளையும் நீங்க அவமானப்படுத்தியிருக்கீங்க.

சிங் (புரியாமல்): 'இவ'ன்னு யாருங்க ? (உற்றுப் பார்க்கிறான்)

பரம: பேரைக் கூடச் சொல்லணுமா ? ஒங்க அத்தையைத்தான் சொல்றேன்.

சிங்: அத்தையையா? நான் அவமானப் படுத்தினேனா?

பரம: ஆமாம். (பாப்பாத்தியைக் காட்டி) இவ சிலேயிலெல்லாம்.........

சிங் (குறுக்கிட்டு) 'இவ'ன்னு யாரு?

பரம: (ஆத்திரத்துடன்): மாப்ளே, எங்களையெல்லாம் அவமானப்படுத்தாதீங்க.... இவளைத் தெரியாது, பாப்பாத்தியை?.... இவ இன்னிக்கி போட்டு வச்ச சிலேயிலெல்லாம் நீங்க வெத்தலையைக் கொப்புளிச்சுத் துப்பல்லே காலையிலே?

சிங் (உரக்க): கெடையவே கெடையாது.

பாப் (ஆவேசத்துடன்): கெடையாதா?... என்னைப் பார்த்துச் சொல்லுங்க.

சிங் (அவள் எதிரே வந்து நின்று): கெடையவே கெடையாது. நான் ஜன்னல் வழியா



"ஒரு கோடி ரூபா சேர்ந்திடுச்சின்னு எப்படி இருப்பீங்களோ.... யாரு கண்டா...?"

"கோடீஸ்வரனு இருப்பேன்....!"

---

வெளியேதான் கொப்புளிச்சுத் துப்பினேன். சிலையில் துப்பவேயில்லே.

பாப்: நான் இப்ப எடுத்து வந்து காமிக் கட்டா ?

கோபாலு (திடுக்கிட்டு): ஏன் அத்தான், வேணும்னுதானே எங்க அலமாரியைத் தள்ளி விட்டீங்க ?

சிங்: கெடையவே கெடையாது. அது இருந்ததையே நான் கவனிக்கலே....

பரம (அண்ணாஜிராவிடம்): கேட்டீங்களா சார், பேச்சு எப்படிப் போகுதுன்னு....

அண்ணாஜி (திடீரென்று கைவிரலைச் சொடுக்கி): தாசில்தார் ஸார், நீங்க இப்பவே மாப்பிள்ளை ஸாரையும் கூட்டிண்டு எங்கூட வரமுடியுமா? ஒரு முக்கியமான 'டெஸ்ட்.'

[மாப்பிள்ளையைத் தாஜா பண்ணி அழைத்துக் கொண்டு அண்ணாஜி ராவும், பரமசிவமும் கிளம்பி விடு கிறார்கள். அவர்களை வழியனுப்பி விட்டு எல்லோரும் மலைத்துப் போய் நிற்கிறார்கள்.]

## 3

[மாலை ஏழு மணியாகி விட்டது. கூடத் தில் வாசலுக்கு எதிர்த்தாற் போல் ரங்கம், பாப்பாத்தி, கோபாலு, ரத்தினம் நாலு பேரும் ஆளுக்கு ஒரு நாற்காலியில் உட்கார்ந் திருக்கி றார்கள். அடுத்தாற் போல் ஒரு தூணுக்கருகில் அகிலாண்டமும், சங் கரனும் நின்று கொண்டிருக்கிறார்கள். நேரமாக ஆக எல்லோருக்கும் கல வரம் தூண்டியாகிறது.

திடீரென்று கோபாலு வாசலைப் பார்த்து, "அதா வந்துட்டாங்க அப்பா" என்று கத்துகிறான். எல் லோரும் துள்ளி எழுந்து வாசல் பக்கம் விரைகிறார்கள்.

காம்பவுண்ட் கதவைத் திறந்து கொண்டு பரமசிவம் வருகிறார். அவ ருடன் கண்ணாடி போட்ட இளைஞன் ஒருவன்.... அடடே, அது வேறு யாருமில்லே. மாப்பிள்ளை சிங்காரம் தான். இதென்ன, கண்ணாடி போட் டுக் கொண்டால் 'வில்லன்' வேஷத் துக்குப் பொருத்தம் என்று யாரா வது சொன்னார்களா....? ஆனால் பரமசிவத்தின் முகத்தில் இத்தனை அமைதியும், சிங்காரத்தின் முகத் தில் இத்தனை மகிழ்ச்சியும் எப்படி வந்தன?]

ரங்கம் (உற்றுப் பார்த்து): அடி பாப்பு, மாப்பிள்ளைதான் இப்படிப் புது வேசத்துலே வராங்க.

பாப் (பெருமையுடன்): ஏ அப்பா, எவ் வளவு நல்லா இருக்குது!

[எல்லோருக்கும் வியப்புத் தீவிரமாவதற் குள் பரமசிவமும், சிங்காரமும் படி யேறி வந்து விடுகிறார்கள். சிங்காரம் அசட்டுச் சிரிப்புச்சிரித்துக்கொண்டே நேராகப் பாப்பாத்தியின் பக்கத்தில் வந்து நிற்கிறான்.]

பரம (நடுவில் வந்து நின்று கொண்டு உரக்க): ரங்கம், அர்த்தமேயில்லாமல் பெரிய கொளப்பம் நடந்து போச்சு, இந்த வீட்டுலே. மாப்ளேக்கு, இடு திப்புனு வேலே பார்க்க ஆரம் பிச்சதுலே, கண்ணு கோளாறு வந்திரிச்சு. அதனாலேதான் இவ்வளவு சுந்தர கோளாறும்! தூர இருக்கறது தெரியாத கோளாறு.

ரங்கம்: அப்பிடின்னா....

பரம: 'ஷார்ட் ஸைட்'னு சொல்லுவாங் களே, அது ரொம்ப மோசமா வந்திரிச்சு. என்ன கோளாறுங்கறது அவருக்கே தெரி யாமப் போயி, யாரையும் அடையாளம் கண்டுக்கிடாமலே சுத்தியிருக்கிறாரு. அந்த அண்ணாஜிராவ்தான் நம்ம பேச்சை வச்சுக் கிட்டே மாப்ளேயோட கோளாறு என்னங்கற தைச் சட்டுனு கண்டு பிடிச்சாரு. பெரிய மூளைக் காரரு.

சிங்: அவரு கண்டு பிடிச்சிருக்காட்டி இந்த வீட்டுலே இன்னும் என்னென்ன வெல்லாம் வேடிக்கை பண்ணியிருப்பேனோ நான்! இப்ப வரும் போது மாமா சொல்லவும்தான் நான் என்னென்ன செய்தேன்றது பூராவாத் தெரிஞ் சிச்சு எனக்கு.

பாப் (பரிவுடன்): இப்ப எல்லாம் சரியா அடையாளம் தெரியுதா?

சிங்: ஓ!.... (சற்று எட்டிப் போய் நின்று கண்ணாடியை எடுத்துப் பார்த்து) ஐயையோ, என்ன கொளப்பம்! ஒருத்தருமே அடை யாளம் தெரியலே. அடடே, அத்தையை பார்த்தா அசல் அகிலாண்டம் கணக்கவே இருக்குது. (கண்ணாடியைப் போட்டுக் கொண்டு) இனி இதைக் கழட்டவே மாட் டேன்.

[பலத்த சிரிப்பொலி எழுகிறது. இப் போது எல்லோர் முகத்திலும் எவ் வளவு பரிவு!]


வாயுள்ள புள்ளெ பொழைக்குது!
கொத்தரங்காய் வத்தல் போலக் குப்பனிருப்பான் - கும்பிக்
கொதிப்பை யடக்கிக்கிட்டு வண்டி யிழுப்பான் - ஒரு
பத்துநாளு காணுமே பயந்துபோனேன் - நேத்துவந்து
பயில்வானைப் போல நின்னு கும்பிடு போட்டான்
சித்துபித்து பண்ணேபோடா என்று முழிச்சேன் - எந்தச்
செட்டிக்கடை அரிசி என்று கண்ணை படிச்சேன்
புத்தம்புதுசாத் தெறந்த முத்துசாமி இஸ்டோரிலே
பொட்டலங்க கட்டித்தாரேன் என்று சிரிச்சான்
பத்து தொலக்கிவந்த பாட்டி கண்ணம்மா - தெந்த
படபடக்கு தென்றுசொல்லி நின்னு போனவ - ஒரு
கொத்துச் செயின்குலுங்க வார்லெட்டுக் கட்டி - ரிங்கு
கொண்டைபோட்டு வந்துஅம்மா தெரியுதா என்றாள்
மூக்குமேலே வெரல்வச்சி வாயைப் பொளந்தோம் - அப்பன்
முருகனோட புண்ணியத்தில் நல்லாருக்கேங்க
ஆக்க அரிக்கக்கூட நேரமில்லே வாருங்க
அண்டாவுலே காக்கறேங்க என்று சிரிச்சாள்
நாட்டுப் பொறெத்தெனிட்டு ஓடிவந்தவன் - ஒரு
நாதியில்லே சாமியென்று ஒண்டிநின்னவன்
கோட்டுசூட்டு மாட்டிக்கிட்டு கோல்டுப்ளேக்கு ஊதிக்கிட்டு
கும்மின்னு புளிமவுத்தில் வந்திறங்கினான்
சிமிட்டி கண்ட்ராக்டர்கிட்டே டெக்குநிக்கெ படிச்சிக்கிட்டேன் ?
சினிமாவுலே போட்டுக்கொஞ்சம் பொறட்டிக்கிட்டேங்க
குமிபெத்த அமரனென்ற கோடாகலர் படத்துக்கிப்போ
கோல்டனிலே பூசைபோடறேன் ஏறுங்க என்றான்




பிசுகட்டக் காசுகேட்டுக் கால்பிடிச்சவன் - என்னைப்
பெத்தவங்க இல்லையென்று கண்தொடைச்சவன்
மாசு மருவில்லாத காசிப்பட்டை விசிக்கிட்டு
மல்லாந்து நடக்கிறதைப் பார்த்து மலைச்சேன்
தேசத்துக்குச் சொத்தையெல்லாந் தியாகஞ்செய்தவர் - அனு
தினமும் ஏழைபாழைவாழத் தொண்டு செய்பவர்
ஆசையின்றித் தாசனுக்குத் தாசனாகப் பாடுபடும்
அரசியல் தலைவர்பெற்ற பிள்ளைநானென்றான்
நூறுவேலி சொத்துக்கொரு வாரிசானவன் - ஆனா
நாள்களிலே மூழ்கித்தலைநரைச்சிப் போனவன் - கரவி
ஏறிப்போன கதரினிலே எளச்சிப்போன ஒடம்பெபோர்த்தி
ஏங்கிப்போன கண்கலங்க எதிரிலே வந்தான்
உலகெலாந் தழைக்கஅண்ணல் உரைத்த மந்திரம் - மனித
உடம்பெடுத்தோர் கைப்பிடிக்க வேண்டும்தந்திரம் - மலிவு
விலையில் போட்டுத்தேசமெங்கும் தலையில்வைத்து விற்றுவா
விரும்பிவாங்க வேண்டுமென்று கையைக்கூப்பிறான் [றேன்
பாலுந்தேனும் பாயுதென்று பாடம்சொல்லுறார் - நாட்டில்
பள்ளம்மேடு ஆச்சுதென்று படமும் போடுறார்
வாலுந்தலையுஞ் சேர்ந்துபோச்சு வளத்தைஎங்கும் நெரவியாச்சு
வாழ்க்கைத்தரம் ஒசந்துபோச்சு என்று பாடுறார்
பள்ளமுள்ள எடத்திலேதான் வெள்ளம் பாயுது - பகலு
கொள்ளைக்காரன் கையிலேதான் பணமுங் குவியுது
கள்ளம்பாஞ்ச நெஞ்சிலேதான் கனவுபலிக்குது - அந்தக்
காந்திகெழவன் கண்டகனவு என்ன ஆச்சுது?



# ஜோக்கரின் கதை

### "சுந்தா"

அந்தப் பழைய ஆங்கிலப் புத்தகத்தின் பெயர் "தி ஜோக்கர்" என்பது. பழைய டெல்லியில் பழைய கடை ஒன்றில் அதை வாங்கிக்கொண்டு புதுடில்லியில் உள்ள என் வீட்டுக்கு வந்ததும் புதுப் புத்தகங்கள் நிறைந்த அலமாரி ஒன்றில் அதை வைத்து விட்டுக் கணப்புக்கு அருகே சாய்வு நாற்காலியில் சாய்ந்தபடி பழைய நினைவுகளிலும், புதிய கனவுகளிலும் நினைவைச் சுழலவிட்டுக்கொண்டிருந்தேன்.

திடீரென்று "ஹலோ!" என்று ஒரு குரல் கூப்பிட்டது. நான் திடுக்கிட்டோ வியப்புற்றோ சுற்றுமுற்றும் பார்க்கவில்லை. நேராக அந்தப் பழைய புத்தகத்தைத்தான் பார்த்தேன். — பேசியது அது தான் என்பது எனக்குத் தெரிந்துவிட்டது. அப்படி ஒரு புத்தகம் என்னுடன் பேசுவது அதுதான் முதல் தடவை என்று சொல்ல முடியாது.



"ஹலோ" என்று நான் பதில் கொடுத்து, "என்ன சந்தோஷமாக இருக்கிறாயா?" என்று விசாரித்தேன்.

"தப்புக்கு மேல் தப்பாக நீ செய்திருக்கிற போது, எப்படி நான் சந்தோஷமாய் இருக்க முடியும்?" என்று அது கேட்டது.

"அப்படி என்ன தப்புக்கு மேல் தப்பு செய்து விட்டேன்."

"முதலாவதாக, என்னை நீ வாங்கியது தப்பு. அந்தக் கடையிலேயே என் கடைசிக் காலத்தைக் கழித்து, மக்கி அழிந்து போகலாம் என்றிருந்தேன். தள்ளாத வயதில் என்னைத் தொந்தரவு செய்து இங்கே கொண்டு வந்து தள்ளி யிருக்கிறாய்."

"மன்னிக்க வேண்டும். மக்கி அழிந்து போகவிருந்த உன்னை, நான் மீட்டது பற்றி மகிழ்ச்சி அல்லவா அடைய வேண்டும் நீ?"

"அப்படியே கொண்டு வந்தாயே, என்னை ஏன் இந்தப் புதுப் பிலுக்குக்காரர்கள் மத்தியில் வைத்து அவமானப்படுத்துகிறாய்?"

"சும்மா கைவாக்கில் வைத்தேன்... தப்பு என்றால் மன்னிக்க வேண்டுகிறேன்."

"கடையிலே என்னை ஆவலுடன் புரட்டிப் பார்த்தாயே, ஏன் இங்கே வந்ததும், உடனேயே என்னைப் படிக்காமல் அலட்சியம் செய்தாய்?"

"எனக்குச் சொந்தமாகி விட்ட உன்னை மெள்ளப் படித்துக் கொள்ளலாமே என்றுதான்....."

"எந்தப் புத்தகமும் யாருக்கும் சொந்தமல்ல. எத்தனை பேர்களின் உடைமையாய் இருந்து விட்டு இப்போது உன் கையில் அகப்பட்டிருக்கிறேன் தெரியுமா? அது போகட்டும். என்னை ஏதோ ஒரு சின்னப் பையன் மாதிரி 'நீ நீ' என்று ஒருமையில் குறிப்பிடுவது உங்கள் நாட்டு வழக்கப்படி தப்பு அல்லவா?"

"தப்புதான்....தங்கள் வயது என்னவோ? தங்கள்

தேசத்து வழக்கப்படி அதைக் கேட்பது தப்பல்லவா?... நானே தெரிந்துகொள்ளுகிறேன்.''



அப்படிச் சொல்லிவிட்டு மரியாதையுடன் அந்தப் புத்தகனுரை எடுத்துத் தலைப்பக்கத்தைப் பார்த்தேன். வெளியிட்ட ஆண்டு 1860 என்பதாக அச்சிட்டிருந்தது.

''அடேயப்பா, நூறு வயதுக்கு மேல் ஆகிறதா, தங்களுக்கு! மரியாதைக் குறைவாய்ப் பேசியதற்குத் தங்கள் மன்னிப்பை மறுபடியும் வேண்டுகிறேன்.''

''மன்னிக்க முடியாது உன்னை; சரியான தண்டனை கொடுக்கப் போகிறேன் உனக்கு!''

''என்ன தண்டனையானாலும் ஏற்கத் தயார்.''

''என் வரலாற்றை நீ கேட்கும்படி செய்யப் போகிறேன்... அதுதான் தண்டனை!''

''தண்டனையா அது? வெகுமதி அல்லவா? சொல்லுங்கள் உடனேயே...''

''நான் பிறந்தது எங்கே தெரியுமோ?''

''லண்டன் என்று தலைப்புப் பக்கத்திலிருந்து தெரிந்து கொண்டேன்.''

''அந்தப் பக்கத்தில் என்னைப் படைத்தவரின் பெயர் இருக்கிறதோ, பார்த்தாயா?''

மறுபடியும் திருப்பிப் பார்த்தேன் — ஆசிரியரின் பெயர் அதில் அச்சிடப்படவில்லை.

''இல்லையல்லவா? நான் தெரிவிக்கிறேன் அவருடைய பெயரை... நகைச்சுவைக் களஞ்சியமான என்னைப் படைத்தவரின் பெயர் லாரோ! பெயருக்கு ஏற்றாற்போல் அந்த ஆசிரியர் துயரத்திலே பிறந்து, துயரத்திலே வளர்ந்து, துயரத்திலே இறந்தார்.''

'' ஐயோ பாவம்!'' என்று நான் அனுதாபம் தெரிவித்துப் புத்தகனுரின் பேச்சுக்கு ஊக்கம் ஊட்டினேன்.

''வறுமையிலே வாடிக் கொண்டிருந்த லாரோ, எழுத்தையே பிழைப்பாய்க் கொள்வதென்று உறுதி பூண்டிருந்தார். அந்த உறுதி காரணமாய் நான் பிறந்தேன்; அவர் இறந்தார். எப்படி என்று கேளு... முதலில் அவர் காதல் கதை ஒன்றை எழுதத் தொடங்கி, சாதல் கதையாக அதை முடித்தார். யாரும் அதை வெளியிட ஒப்புக்கொள்ளாததால், அதை வெட்டிப் புதைத்து விட்டு, கடற் சண்டைக் கதை ஒன்றை ஆரம்பித்து, ஏகப்பட்ட கப்பல்களை மூழ்கடித்தார். அதையும் யாரும் வெளியிடத் தயாராயில்லை. ஆகவே கப்பல்களுக்கு நேர்ந்த கதி அந்தக் கதைக்கும் நேர்ந்தது. மூன்றாவதாக, தமது அனுபவமான வறுமையின் கொடுமையை அடிப்படையாகக் கொண்டு மிக உருக்கமான சோகக் கதை ஒன்றை எழுதிக் கொஞ்சம் இரக்க சித்தம் உள்ளவராய் இருந்த ஒரு பிரசுர கர்த்தரிடம் அதைக் கொடுத்தார். ஒரே அழுகுணிக் கதையாய் இருக்கிறது என்று சொல்லி அந்தப் பிரசுரகர்த்தர் அதை நிராகரித்தார். 'நீங்கள் இதை வெளியிடவில்லையென்றால், தற்கொலை செய்து கொள்ளுவேன்' என்று லாரோ புலம்பினார். அதைக் கேட்டு மற்றவர் சொன்னார்: 'அழுதால், தனியே நான் அழுதுகொண்டிருப்பாய்; சிரித்தாலோ எல்லோரும் சேர்ந்து சிரிப்பார்கள்... ஆகவே, இந்தப் பிலாக்கணக் கதையைத் தூர எறிந்துவிட்டுச் சிரிக்கச் சிரிக்க ஏதேனும் எழுதிக் கொண்டு வா. அதை வெளியிட்டு உனக்குப் பணம் தருகிறேன்.' இதைக் கேட்டு ஆசிரியர் 'பசியாலும் துயரத்தாலும் தவித்துக் கொண்டிருக்கும் நான் எப்படிச் சிரிப்புக் கதை எழுத முடியும்?' என்று தேம்பினார். அவரைத் தேற்றிப் பிரசுரகர்த்தர் சொன்னார்: 'நீங்கள் சொந்தமாகச் சிரிப்புக் கதை ஏதும் எழுத வேண்டியதில்லை. இங்கே காக்னிகள் எத்தனையோ விகடக் கதைகளையும் ஜோக்குகளையும் சொல்லிச் சிரிக்க வைக்கிறார்கள் அல்லவா? பான விடுதிகள், சந்தைகள், ஆடல் பாடல் கூடங்கள் முதலியவற்றுக்குச் சென்று, அவர்கள் சொல்லும் சிரிப்பூட்டும் குட்டிக் கதைகளையும் துணுக்குகளையும் சேகரித்துக் கொண்டு வாருங்கள் போதும்.'' இப்படிச் சொல்லி லாரோவிடம் கொஞ்சம் முன் பணம் கொடுத்தார்.

''வேறு வழியின்றி அந்த வேலையை ஒப்புக் கொண்டார் லாரோ. நடுக்கும் டிசம்பர் குளிரில் போதிய கம்பளி உடை இன்றி வறட்டு ரொட்டியையும், கசப்புப் பியரையும் ஆகாரமாய்க் கொண்டு, தெருத் தெருவாய் லாரோ அலைந்து, சிரிப்பூட்டும் ஜோக்குகளைத் திரட்டினார். கால்கள் ஓய, உடல் சோர, மனம் நோக, சுமார் ஆயிரம் ஜோக்குகளைத் திரட்டினார். சிரித்தே பழக்கம் இல்லாத அவருக்கு எதைக் கேட்டும் சிரிப்பு வரவில்லை. ஆகவே, துயரத்தால் உறைந்து போயிருந்த தம் மனசை உரைகல்லாகக் கொள்ளாமல் மற்றவரின் சிரிப்பொலியைக் கொண்டே அவைகளைத் திரட்டினார். கால்கள் ஓய, உடல் சோர, மனம் நோக, சுமார் ஆயிரம் ஜோக்குகளைச் சேகரித்துக் கொடுத்



தார். அவற்றைப் படித்துப் பார்த்த பிரசுரக்காரர், தமக்குச் சிரிப்பு மூட்டுவதாயில்லை என்று பெரும்பாலானவற்றைத் தள்ளிவிட்டு நூறே நூறு ஜோக்குகளை மட்டும் தேர்ந்தெடுத்து ஒன்றுக்கு ஒரு ஷில்லிங் வீதம் சன்மானம் கொடுத்தார். 'இவ்வளவுதானா' என்று லாரோ கேட்டதற்கு, 'அதுவே அதிகம்' என்று சொல்லிவிட்டார். அப்படிக் கிடைத்த பணத்தை லாரோ ஒரு வாரத்தில் செலவழித்துத் தீர்த்தார். தாம் அதுவரை அநுபவித்திராதவைகளை யெல்லாம் அதைக்கொண்டு அநுபவித்து விட்டு, டவர் பாலத்திலிருந்து தேம்ஸ் நதிக்குள் குதித்தார். அவர் படைத்த என்னை, அவர் பெயரைப் போடாமலேயே, அந்தப் பிரசுரக்காரர் வெளியிட்டு, ஆயிரம் ஆயிரமாய் லாபம் சம்பாதித்தார். அந்த லாபத்தைக் கொண்டே தொழிலைப் பெரிதாக விரிவுபடுத்தினார்.''

கடைப் பக்கத்தில் கண்ட அந்தப் பிரசுரக் கம்பெனியின் பெயர் ஆங்கிலப் புத்தகம் படிப்போருக்கெல்லாம் மிகவும் பழக்கமானது.

ஒரு பெருமூச்சு விட்டு விட்டு, ''ஊம்! மேலும் சொல்லுங்கள்'' என்று கேட்டுக்கொண்டேன்.

''எடுத்த எடுப்பிலேயே, ஒருவருடைய அறிவுக்கும் இன்னொருவருடைய செல்வத்துக்கும் சிறப்புக்கும் காரணமாய் இருந்திருக்கிறேன். பல்லாயிரம் மக்களின் நாவிலே விளையாடி, நெஞ்சிலே களிப்பூட்டிக் கொண்டிருந்த நகைத் துளிகள் சேர்ந்து, நானாக மாறினேன். பிறகு நானே பல்லாயிரமாய்ப் பெருகினேன். இது ஒருபுறம் இருக்க, தனிப்பட்ட ஒரு பிரதிநிதியாகிய நான் தனிப்பட்ட முறையில் அடைந்த அநுபவங்களில் சிலவற்றை மட்டும் உன்னிடம் சொல்லுகிறேன்.. என்னை முதன் முதலில் வாங்கியவர் ஓர் அரசியல்வாதி. அப்போது அவர் தேர்தலுக்கு நின்றிருந்த சமயம். என்னுள் அடங்கிய விகடத் துணுக்குகளை யெல்லாம் அவர் மனப்பாடம் செய்து கொண்டு தேர்தல் பிரசாரக் கூட்டங்களில் அவற்றை இடையிடையே எடுத்துச் சொல்லி மக்களைச் சிரிக்க வைத்துத் தமக்குப் பெரும் ஆதரவு தேடிக் கொண்டார்.''



''அவர் தேர்தலில் வெற்றி பெறுவதற்குத் தாங்கள் உதவியாய் இருந்தீர்களாக்கும்?''

''இல்லை, தோல்வியுறுவதற்குத்தான் காரணமாய் இருந்தேன். தேர்தலுக்கு ஒரு வாரம் இருக்கையில், என்னுடைய ஜோக் ஒன்றை அவர் கூட்டத்தில் சொன்னதும், திடீரென்று ஒரு கல் வந்து அவருடைய மண்டையைத் தாக்கி ரத்தம் சிந்த வைத்தது. அதோடு கூட்டத்தில் சண்டை மூண்டு, பலருடைய மண்டைகள் உடைந்தன....அவருடைய இங்கிதக் குறைவை அவருடைய கட்சிக்காரர்களே கண்டித்தார்கள். இறுதியில் என்ன, அவர் தோற்றுப் போனார்.''

''அவர் சொன்ன ஜோக் எந்தப் பக்கத்தில் இருக்கிறது?'' என்று நான் கேட்டேன்.

''சொல்ல மாட்டேன். அதைப் படித்து விட்டு, இதனாலா அந்த அமளி என்று ஆச்சரியப்படுவாய். அதன் வேகம், அந்தச் சூழ்நிலையில் இருந்தது போல் இப்போது இருக்காது... பிரசங்கி மீது கல்லெறிந்தவர் ஓர் ஐரிஷ்காரர் என்பதை மட்டும் சொல்லுகிறேன்.''

''சரிதான். ஐரிஷ்காரர்களைக் கேலி செய்யும் ஜோக்காக இருந்திருக்கும் அது. ஒருவரை அல்லது ஓரினத்தைக் கேலி செய்யும் விகடம் மட்டமானதுதானே! வேண்டும் அந்த அரசியல்வாதிக்கு!''

''தேர்தலில் தோல்வியுற்ற அந்த ஆசாமி எல்லாம் என்னால் வந்த வினைதான் என்று என்னைத் தெருவிலே தூக்கி எறிந்தார். தலைகீழாய் விழுந்து நான் அழுதுகொண்டிருக்கையில் தீராத வயிற்று வலியால் அவதிப்பட்டு டாக்டர் வீட்டுக்கு நடவா நடை நடந்து கொண்டிருந்த ஒருவன் தன் வலியினால் உண்டான கோபத்தை என் மீது செலுத்தி, என்னை ஓங்கி ஓர் உதை உதைத்தான். தரை மேலே உருண்டேன் நான். என் பெயரைக் கண்ட அந்த வயிற்று வலிக்காரன் வயிற்றைப் பிடித்துக் கொண்டே என்னைக் குனிந்தெடுத்து, பக்கத்து வீட்டு வாசற்படியில் உட்கார்ந்து என்னைப் படிக்கலானான். முதல் இரண்டு ஜோக்குகளைப் படித்து மனசுக்குள்ளேயே சிரித்துக் கொண்டான். மூன்றாவது ஜோக்கைப் படித்ததும் வாய் விட்டு இடி இடி என்று சிரித்தான். அடுத்ததைப் படிக்க முடியாமலே இடி இடியென்று தொடர்ந்து சிரித்தான். திடீரென்று, தன் வயிற்றுவலி நின்றுவிட்டதை உணர்ந்தான். நன்றியுடன் என்னை மார்போடு அணைத்துக் கொண்டு, டாக்டர் வீட்டுக்குப் பதிலாகத் தன் வீட்டை நோக்கியே நிமிர்ந்து நடந்தான். தன் மனைவியிடம் மகிழ்ச்சியுடன், 'என் வயிற்றுவலிக்குச் சிரிப்புத்தான் மருந்து' என்று அறிவித்து, நடந்ததைச் சொன்னான். எதையுமே எளிதில் ஒப்புக் கொள்ளாத மனைவி அவள். 'இப்போதைக்குத் தீர்ந்துள்ள வயிற்றுவலி மறுபடியும் திரும்பி வந்தால் என்ன செய்வாய்?' என்று கேட்டாள். 'இன்னும் சில ஜோக்குகளைப் படித்துச் சிரிப்பேன்' என்றான் கணவன். 'எல்லா ஜோக்குகளும் தீர்ந்துபோனதும் என்ன செய்வாய்?' என்று தொடர்ந்து கேட்டாள். 'வேறு ஜோக் புத்தகங்களை வாங்கிப் படிப்பேன்' என்று விட்டுக்



கொடாமல் பதில் சொன்னான் அவன். 'போகட்டும், அதிகமாய்ச் சிரித்தால், அதனாலும் வயிற்று வலி உண்டாகுமே, அப்போது என்ன செய்வாய்?' என்று, அந்தப் பொல்லாதவன், அவன் சொன்னதற்கெல்லாம் எதிர்வாதம் பேசித் தாக்கவே, அவனுக்குத் தலையை வலித்தது; போன வயிற்று வலியும் திரும்பி விட்டது. வண்டி வைத்துக் கொண்டு வைத்தியர் வீட்டுக்கு விரைந்தான். நடந்ததை யெல்லாம் கேட்ட அந்த வைத்தியர், 'சிரிப்பினாலும் சரி, மனைவியினாலும் சரி, மருந்தினாலும் சரி குணமும் உண்டு, கோளாறும் உண்டு' என்று சொன்னார். 'அப்படி என்றால் நீங்களும் கூட என்னைக் கைவிட்டு விடுவீர்களோ?' என்று அந்த நோயாளி அலறினான். 'மாட்டேன், உன்னை நான் குணப்படுத்திக் கொண்டே இருப்பேன்'— என்று சொல்லி அபயம் அளித்தார் டாக்டர். புதிதாக ஒரு மருந்தும் கொடுத்தார். 'அடுத்த தடவை என்னைப் பார்க்க வருகையில், அந்தப் புத்தகத்தைக் கொண்டு வா, பார்ப்போம்' என்றும் சொன்னார். அதன்படியே அவன் என்னைக் கொண்டு போய், அன்பளிப்பாகவே டாக்டரிடம் கொடுத்து விட்டான்.

''என்னைப் படித்து வெகுவாக ரசித்த டாக்டர், தம்மிடம் வருகிற நோயாளிகளிடம் என்னுடைய ஜோக்குகளைச் சொல்ல ஆரம்பித்தார். 'சிரிக்கச் சிரிக்கப் பேசுகிறார்; ரொம்ப நல்ல டாக்டர்' என்று அவரைப் பற்றி அந்த வட்டாரத்தில் புகழ் பரவியது. மேலும் மேலும் அவரைத் தேடி நோயாளிகள் வந்தார்கள்; பன்மடங்காய் அவருடைய வருமானம் பெருகியது. ஆனால் சிறிது காலம் சென்ற பின், அவரைப் பற்றிய புகழ்ச்சி, இகழ்ச்சியாக மாறியது. 'வியாதியைக் கவனித்து மருந்து கொடுக்காமல், சும்மா விகடம் பேசி ஏமாற்றுகிறார்' என்பதாகப் பேச்சு பரவியது. நோயாளிகளின் வருகை குறைந்தது. அதன் காரணத்தைக் கம்பௌண்டர் மூலம் அறிந்து கொண்ட டாக்டர், தமது வக்கீல் நண்பர் ஒருவரிடம், ஏதோ தாராளமான ஒரு வெகுமதியைக் கொடுப்பது போல் என்னைக் கொடுத்து விட்டார்.''

''நிச்சயம் அந்த வக்கீல் தங்கள் மூலம் பயன் அடைந்திருப்பார். கோர்ட்டிலே உங்கள் ஜோக்குகளை எடுத்து விட்டிருப்பார்.''

''ஆமாம், அவருடைய தொழிலுக்கு நான் பெரிதும் உதவியாகத்தான் இருந்தேன். என்னுடைய ஜோக்குகளைச் சொல்லியும், அவை புகட்டும் நீதியை விளக்கியும், எத்தனையோ வழக்குகளில் வெற்றி கொண்டார். ஆனால் கடைசியில், அவரும் என் மூலம் சங்கடத்துக்கு உள்ளானார். ஒரு நாள், பழைய பெயிலி கோர்ட்டில், சட்டத்தைக் கழுதைக்கு ஒப்பிடும் என்னுடைய ஜோக் ஒன்றை, புதிய சிடுமூஞ்சி ஜட்ஜ் ஒருவரிடம் எடுத்துச் சொன்னார். கோர்ட்டில் இருந்தோர் எல்லாரும் சிரித்தார்கள் — ஜட்ஜைத் தவிர! அவர் வக்கீலை மட்டம் தட்டுவதற்காக, 'அப்படி என்றால், அந்தக் கழுதையை மேய்ப்பவர் நீங்களாக்கும்?' என்று கேட்டார். அதனால் எழுந்த சிரிப்பொலி அடங்கியதும், தம்மைத் தாமே மெச்சிக் கொள்ளும் விதத்தில், ஒரு கனைப்புக் கனைத்தார் ஜட்ஜ். உடனே வக்கீல், 'எனக்கு ரொம்பவும் பழக்கமான கனைப்பாய் இருக்கிறதே!' என்றார். அதைக் கேட்டு எழுந்த சிரிப்பு தணிவதற்கு ஐந்து நிமிடங்கள் ஆயிற்று. ஜட்ஜின் மனத்தில் எழுந்த கோபமோ தணியவே இல்லை. அவமதிப்பு நடவடிக்கை தொடுத்து, அந்த வக்கீலைத் தண்டித்தார்.''

''அந்த வக்கீலின் வீழ்ச்சிக்குத் தாங்கள் நேர்முகமாய்க் காரணம் ஆகவில்லையே !'' என்று என் கருத்தைத் தெரிவித்தேன்.

''மறைமுகமான காரணமாய் இருந்த போதிலும், என் மீது அந்த வக்கீலுக்கு வெறுப்பு ஏற்படவே செய்தது. ஆனாலும், என்னை அழிக்க மனமின்றி, பழைய புத்தகக் கடை ஒன்றுக்குள், தெருவில் நடந்தபடியே தூக்கி எறிந்து விட்டுச் சென்றார். அங்கே சில நாட்கள் பயனற்று இருந்த பிறகு, கிழக்கு லண்டன் கோமாளி ஒருவனின் கையிலும் கருத்திலும், பிறகு அவனுடன் மேடையிலும் ஏறி, பல்லாயிரக் கணக்கான மக்களைப் பல நாட்கள் சிரிக்க வைத்தேன். என் பெயரைக் கண்டதால் உண்டான ஐடியாவைக் கொண்டு அந்தக் கோமாளி, சீட்டுக் கட்டில் உள்ள ஜோக்கர் போலவே வேடம் அணிந்துகொண்டான். என்னுடைய ஜோக்குகள் சிலவற்றை அவன் பாட்டுக்களாயும் கட்டிப் பாடினான். பாட்டாலும், பேச்சாலும், நடிப்பாலும், நொடிப்பாலும், தானும் புகழ் தேடிக் கொண்டு எனக்கும் அளித்தான். அதன் காரணமாகவே வந்தது அவனுக்கு ஆபத்து!''

''என்ன போங்கள், உங்களால் ஆபத்துக்கு உள்ளாகாத ஆளே கிடையாது போலிருக்கிறதே?'' என்றேன், நான் அலுப்புடன்.

''அந்த டாக்டர் சொன்ன மாதிரி, என்னால் குணமும் உண்டு, கோளாறும் உண்டு; அரிய வாய்ப்பும் உண்டு, ஆபத்தும் உண்டு.''

''எந்த விதத்தில் அந்தக் கோமாளிக்கு ஆபத்து நேர்ந்ததோ ?''

''அந்தக் கோமாளியின் மீது பொறாமை கொண்ட இன்னொரு கோமாளி, 'திருட்டுக் கோமாளி' என்ற தலைப்புடன் ஒரு கேலிப் பாட்டு கட்டி, தன்னுடைய கூத்துக்களில் பாட ஆரம்பித்தான். அந்தப் பாட்டிலே அந்தப் போட்டிக் கோமாளி, என்னுடைய ஜோக்குகளை ஒருவன் திருடிக் கள்ளப் புகழ் சூடிக் கொண்டிருக்கிறான் என்றும், அந்தத் திருட்டுக் கோமாளியைக் கொண்டாடுகிறவர்கள் குருட்டு ஏமாளிகள் என்றும் வர்ணித்





தான். அதன் விளைவு என்ன? என்னுடைய கோமாளி தாழ்ந்தான்; போட்டிக் கோமாளி உயர்ந்தான்.''

''அத்துடன் தாங்களும் உயர்ந்திருப்பீர்களே? அதாவது உங்கள் புகழ் ஓங்கி, அதனால் உங்கள் விற்பனை அதிகமாகி யிருக்குமே ?'' என்று நான் கேட்டேன்.

''அப்படித்தான் ஆயிற்று. 'தி ஜோக்கர்' எத்தனையோ பதிப்புக்களாய் வெளியாகி, ஆயிரம் ஆயிரம் விற்றது. அதன் காரணமாகவும் ஒருவருக்கு அவமானம் நேர்ந்தது.''

''நேராமல் இருக்குமா? சொல்லுங்கள், அதை !''

''வீழ்ச்சியுற்ற அந்தக் கோமாளியின் கையிலிருந்து, மறுபடியும் நான் பழைய கடை ஒன்றில் அடைபட்டிருந்து விட்டு, ஒரு பெரிய பார்ட்டிக்குச் சென்று கொண்டிருந்த கனவான் ஒருவருடைய கையில் அகப்பட்டேன். கோச்சில் சென்றுகொண்டே அவர் என்னைப் புரட்டி, தமக்கு மிகவும் சிரிப்பூட்டிய நாலைந்து ஜோக்குகளைத் திரும்பத் திரும்பப் படித்து, மனத்தில் பதித்துக் கொண்டார். பார்ட்டி நடந்த மாளிகையை அடைந்ததும், என்னைப் பைக்குள் மறைத்து வைத்துக் கொண்டு, எல்லோரையும் சிரிக்க வைத்துச் சிறப்படையப் போகும் தோரணையுடன் உள்ளே நடந்தார். பேசுவதற்கு முதல் சந்தர்ப்பம் வந்ததுமே, ஒரு ஜோக்கை ஆரம்பித்தார். அதில் பாதியைச் சொல்லி முடித்ததும் மறு பாதியைப் பக்கத்தில் உள்ளவர் சொல்லி விட்டார். குறுக்கிட்ட ஆளைக் கொல்லுகிற பாவனையில் விழித்துப் பார்த்து விட்டு, இன்னொரு ஜோக்கை ஆரம்பித்தார். ஆரம்பித்த வுடனேயே, 'இது எங்களுக்கு ஏற்கனவே தெரியும்' என்று பல குரல்கள் கத்தின. அவ்வளவுதான், அதற்குப் பிறகு அவர் வேண்டா வெறுப்பாக உணவு வகைகளை உட்கொள்வதற்குத்தான், வாயைத் திறந்தார். வெளியே வந்ததும், தாம் ஒரு கனவான் என்பதை மறந்து, வண்டிக்காரன் காது கேட்க என்னைக் கெட்ட வசவுகளால் திட்டி, தெருவிலே வீசி எறிந்தார்.''

வருத்தத்துடன் நான் தெரிவித்த அனுதாபத்தை, நன்றியுடன் ஏற்றுக் கொண்டு, அது தொடர்ந்து சொல்லும்:

''நல்ல வேளை, வண்டிச் சக்கரங்களோ பூட்சுக் கால்களோ என்னை நசுக்கி அழிப்பதற்கு முன்னால், நாய் ஒன்று என்னைக் கவ்விக் கொண்டு, அதன் எசமானிடம் சேர்ப்பித்தது. அவன் என்னைப் படித்து ரசித்து விட்டு, உங்கள் தேசத்துக்குப் பயணமாகிக் கொண்டிருந்த தன் நண்பன், இளம் உத்தியோகஸ்தன் ஒருவனிடம், கப்பலில் படிப்பதற்கெனக் கொடுத்தான்.''

''அவ்விதமாய் இங்கே வந்து சேர்ந்தீர்களாக்கும்?''

''வரும் வழியிலே என்னுடைய விசித்திரமான விதி, அந்த இளம் உத்தியோகஸ்தனையும் பாதித்தது. அவன் பாவம், அவ்வளவாக வாக்கு வன்மை இல்லாதவன். என்னுடைய ஜோக்குகளை அவன், சக பிரயாணிகளிடம் எடுத்துச் சொல்லும் போதெல்லாம், உளறிக் கொட்டி, அவைகளையும் குழப்பி, கேட்பவர்களையும் குழப்பினான். அதன் காரணமாய், 'கப்பல் போர்' என்ற பட்டத்துக்கு இலக்கானான். அவன் அருகே வந்தாலே எல்லோரும் காதைப் பொத்திக் கொண்டு ஓடினார்கள். அந்தக் 'கப்பல் போர்' சென்னைக்கு வந்து, 'காரியாலய போராக'த் தொடர்ந்து 'போர்' அடித்தான். அவனுடைய 'போர'டிப்பைக் கேட்டும், அதனால் அவனுக்கு உண்டான கெட்ட பெயரைக் கண்டும், அவனிடம் இருப்பதே எனக்கு அவமானமாக இருந்தது. நல்ல வேளையாக, அந்தப் 'போரி'னுடைய பட்லர் வேறு பல பழைய புத்தகங்களுடன் என்னையும் கொண்டு போய், மூர்மார்க்கெட்டில் விற்று விட்டான்.''

''அந்தப் பிரபல மார்க்கெட்டிலிருந்து சீக்கிரமே நீங்கள் வேறு இடத்துக்கு மாறி இருப்பீர்களே ?''

''இல்லை. ஏனென்றால், அத்தனை வருஷ காலத்தின் அத்தனை அனுபவங்கள் காரணமாய், அருவருப்பான தோற்றம் கொண்டிருந்தேன். கடைக்கு வந்தவர்கள் எல்லாம் என்னைப் பார்த்த பார்வையிலேயே கழித்துத் தள்ளிக் கொண்டிருந்தார்கள். நாலைந்து வருடங்களுக்குப் பிறகு, உங்கள் தேசத்துப் பூச்சிகள் பல என்னைத் துளைத்துவைத்த பிறகு, ஜிப்பாக்காரன் ஒருவன் என்னை உற்றுப் பார்த்து உவகை கொண்டான். கேட்ட விலையைப் பேரம் பேசாமல் கொடுத்து என்னை வாங்கிக் கொண்டு, இங்கேயும் அங்கேயும் என்னைப்படித்து மகிழ்ந்துகொண்டே வீட்டை நோக்கி நடந்தான். அன்று முதல் அவன் ஒரு பிரபல எழுத்தாளன் ஆனான். என்னுடைய ஜோக்குகளை அப்படி அப்படியே மொழி பெயர்த்தும், அவற்றை அடிப்படையாய்க் கொண்டும், அவற்றால் ஊக்கப்பட்டும் நகைச்சுவை மிகுந்த கதைகளையும் கட்டுரைகளையும் வரைந்து தள்ளினான்.''

''யார் அந்த எழுத்தாளன் என்று கேட்டால் நீங்கள் நிச்சயம் சொல்ல மாட்டீர்கள். ஆகவே அதைக் கேட்கவில்லை. அந்த எழுத்தாளனையாவது உங்களுடைய 'அது' பாதிக்காமல் இருந்ததா சொல்லுங்கள்.''



''அவனையும் பாதிக்கத்தான் செய்தது.''

''சரியாய்ப் போச்சு!''

''ஆனால், அப்படி விபரீதமான பாதகம் ஏதும்



இல்லை...என் மூலமாய் நகைச் சுவை எழுத்தாளனாய்ப் பரிண மித்த அந்த எழுத்தாளன், பின்னர், வேறு கலைகளைப் புகுத்தி எழுத ஆசைப்பட்ட போது, அதற்கு யாரும் இடம் கொடுக்க வில்லை. எப்போது எழுதினாலும், நகைச்சுவை ஒன்றையே அவன் கையாளும்படி யாகி விட்டது. 'என்னை என்ன, வெறும் ஜோக்கர் என்று எண்ணி விட்டீர்களா?' என்று கத்திக் கொண்டே இருந்தான்..... என் பெயரையே அவன் இழிவாகப் பேசி விட்டான் பாரு... உன்னையே, கேட்கிறேன், ஜோக்கர் என்றால் கேவலமா என்ன ?''

அந்தக் கேள்விக்கு 'நான் நேரடியாகப் பதில் சொல்லாமல் மழுப்பி விட்டு, ''சென்னை யிலிருந்து தாங்கள் எப்படி இங்கே டெல்லிக்கு வந்து சேர்ந்தீர்கள், சொல்லுங்கள்'' என்று கேட்டேன்.

''அந்த நகைச்சுவை எழுத்தாளரின் தம்பிக்கு இங்கே டெல்லியில் வேலை கிடைத்தது. வேலை கிடைத்ததுமே கலியாணமும் ஆயிற்று. அழகிய இள மனைவியுடன் அவன் டில்லிக்குப் பயணம் ஆன போது, வழியனுப்ப வந்த அண்ணன், என்னை வழித்துணையாகக் கொடுத்தான். புது மணக் காதலர்கள் முதலில் என்னை அருவருப்புடன்தான் பார்த்தார்கள். ஆனாலும், கொஞ்சம் கொஞ்சிக் குலவி அலுத்த பிறகு, என்னைக் கணவன் எடுத்து, சில ஜோக்குகளைப் படித்ததும், அவர்களுடைய அருவருப்பு ஆசைப் பாராட்டாக மாறியது. 'கிழட்டுப் பயலாய் இருந்தாலும் நன்றாகச் சிரிக்க வைக்கிறான்' என்றான் அந்த இளங் காதலன். 'டில்லிக்குப் போனதும் இதற்கு அழகான அட்டை போட்டு பைண்டு செய்ய வேண்டும்' என்றாள் அந்தப் பெண்.''

''அப்படியாக நீங்கள் டில்லிக்கு வந்தீர்களாக்கும்? ஆனால் அந்த இளம் காதலர்களுடன் வந்தவர் எப்படிக் கடை வாசம் செய்ய நேர்ந்தது ?''

''டில்லியை ரயில் அடைந்ததும், அந்தக் கொஞ்சு மணிகள் கை மறதியாய் வண்டியி லேயே விடுத்துச் சென்று விட்டார்கள். பிறகு என்னைக் கண்டெடுத்த போர்ட்டர் ஒருவன், நீ என்னை மீட்டாயே இன்று, அந்தக் கடையில் விற்று விட்டான்.''

''அப்படியா அது?..... மிக மிக ரஸமான வரலாறுதான்.. இதைச் சொன்னதற்காக உங்களுக்கு என்ன கைம் மாறு செய்வதென்றே தெரிய வில்லை.''

''என்ன என்று சொன்னால், செய்வாயா''?

''கட்டாயம் செய்கிறேன்.''

''என்னை இந்தக் கணப்பிலே போட்டு எரித்து விடு.''

''ஐயோ, நான் மாட்டேன்.... அந்தப் பெண் ஆசைப்பட்டதைப் போல், நான் உங்களுக்கு அழகான தோற்றம் கொடுத்து, எப்போதும் என்னுடனே வைத்துக் கொள்வேன்.''

''சொல்வதைக் கேளு. நான் தோன்றிய போதே தனி மூலமாகத் தோன்றவில்லை. அப்படித் தோன்றியவனும்,' மேலும் பலவாக, நேராகவும் மறைவாகவும், உரு மாறியும், பல்கிப் பெருகினேன். ஒரு மொழியிலிருந்து பல மொழிகளுக்கும் மாறினேன். ஆகவே, இத்தனை வயதாகிய நீ, இத்தனை புத்தகங்கள் படித்துள்ள நீ, என்னைப் படித்துப் பார்த்தால் ஏமாற்றமே அடைவாய். ஆகவே, படித்துப் பாராமலே என்னைக் கொளுத்தி விடு......''

''பெரிய பாவம் ஒன்றைச் செய்யச் சொல்கிறீர்களே!''

''பாபம் அல்ல, புண்ணியம்! நீயாக அதைச் செய்தால்தான் பாவம்; என் வேண்டுகோளுக்கு இணங்கச் செய்தால் புண்ணியமே. என் கிழட்டுத் தோற்றமும் என் சொந்த அனுபவங்களும் எனக்கு அலுப்பாய் வெறுப்பாய் இருக்கின்றன. என் வரலாற்றையும் சொல்லி முடித்து விட்டேன். ஆகவே இனி, தனிப்பட்ட நான் அழியும்படி உதவி செய்வாயாக...... அழிந்த பிறகும் நான் எங்கெங்கோ எப்படி எப்படியோ வாழ்ந்து கொண்டுதான் இருப்பேன் என்பது உனக்குத் தெரியாதா என்ன?.... தயங்காதே. போட்டு விடு.... போட்டு விடு......''

கண்ணை மூடிக் கொண்டு அதைக் கணப்பிலே வீசினேன்.

எண்ணத்தை மீறிக் கண்ணைத் திறந்த போது, அது மலர்ந்து சிரிப்பது போலும் துடித்துத் தவிப்பது போலவும் இருந்தது.



# அவரும்

ஹாலிவுட்டின் இன்றையப் பிரபலமான நகைச் சுவை நடிகர் ஜெரி லூயி. அவரது நகைப்பூட்டும் ஒருசில முக பாவங்களையே இந்தப் பக்கத்தில் காண்கிறீர்கள்.



















# இவரும்

தமிழ் நாட்டு ஜெரி என்று கூறுமளவுக்கு முன்னேறி வருபவர் நாகேஷ். ஜெரியைப் போலவே இங்கு கல்கிக்காகப் பிரத்தியேகமாக நாகேஷ் நடித்துக் காட்டியிருக்கிறார்.



















# நகைச்சுவைக் கதம்பம்

## முன்னுரை

இன்று நாம் நகைச்சுவையாகக் கருதுவனவற்றிற்கும், பேசுவனவற்றிற்கும், பழைய தமிழ் இலக்கண இலக்கிய நூல்கள் நகைச்சுவையாகக் கூறுவனவற்றிற்கும் நிறைந்த வேறுபாடு உண்டு. எல்லாச் சுவைகளுக்கும் இலக்கணம் கூறிய ஆசிரியர் தொல்காப்பியனார், நகைச்சுவை எள்ளல், இளமை, பேதைமை, மடமை என்ற நான்கின் அடியாகப் பிறக்குமென்றார். 'பிறர் துன்பங் கண்டு விளையும் 'நகை' சுவை இலட்சணத்தில் சேர்த்துக் கொள்ளப்படாது என்று பெருந்தன்மையாக அதை விலக்கினார் தொல்காப்பியத்துக்கு உரை எழுதிய பேராசிரியர். நகைச் சுவையில் satire, irony போன்ற ஆழ்ந்த உணர்வுகளை அங்கதம், செம்பொருள் அங்கதம், கரந்த மொழி அங்கதம் என்று வேறு பெயர்களைக் கொடுத்து வேறு பகுதியில் கூறி விட்டார் தொல்காப்பியர். மார்க் ட்வைன், வில்லியம் சரோயன், ஹிலேர் பெல்லாக் போன்ற ஆசிரியர்கள் பழக்கத்துக்குக் கொண்டு வந்துள்ள இன்றைய புதிய உலகின் எளிய இனிய சிரிப்பு மயமான நகைச்சுவையைத் தமிழ் இலக்கிய வரலாற்றில் மிகவும் பிற்பட்ட காலமான தனிப் பாடல்களின் காலத்தில்தான் ஓரளவு காணலாம். நாகைப் பட்டினத்துக் காத்தான் சத்திரத்தில் சாப்பிட்ட சாப்பாட்டைக் கேலி செய்து காளமேகப் புலவர் பாடிய பாடலையும் — 'ஒருவர் மிருதங்கம் தட்டியதைக் கேலி செய்து, பெண்களெல்லாம் யாரோ எருக் தட்டுவதாக எண்ணிக் கொண்டு கூடையோடு ஓடி வந்தனர்' என்று வேறு ஒரு தனிப்பாடல் புலவர் பாடியதையும் நினைத்து இன்றெல்லாம் சிரிக்கலாம். தனிப் பாடல்களில் உள்ள நகைச்சுவைகளில் சில சிலேடை உருவில் சிக்கிக் கிடக்கின்றன. இன்னும் சில வெறும் குத்தலும் கிண்டலுமாக வாய்த்திருக்கின்றன. உருவமும் இலக்கணமும் வந்துவிட்டால் எந்தச் சுவையிலும் யதேச்சையான இயற்கை அழகு போய் விடும். 'பொருளொடு புணராப் பொய்ம் மொழியானும் பொருளொடு புணர்ந்த நகை மொழியானும்' என்று பிறிதோர் இடத்தில் தொல்காப்பியர் 'பொருளொடு புணர்ந்த நகைமொழி உண்டு' என்று உடன்படுகிறார். கலித்தொகையில் ஒரு தமிழ்க்காரி ஒரு குட்டை மனிதனைப் பார்த்து, ''உழுந்தைக் காட்டிலும் குறுகியவனே!'' என்று தொடங்கிக் கேலி செய்யும் காட்சி ஒன்று உண்டு. நந்திக்கலம்பகத்தில் தலைவி பாணனின் கூக்குரலை வெறுத்துக் கேலி செய்யும் போது, உன் குரலைக் கேட்டுத் தோழி, 'நாயென்றாள்! பேயென்றாள்! நரியென்றாள்' நானோ 'நீ யென்றேன்' என்று கூறும் பகுதியில் ஆழமான கோபத்தோடு கூடிய நகைச்சுவை இன்றைய நகைச்சுவையிலிருந்து வேறுபடுகிற ஆழமான உணர்வுகளை அடிப்படையாகக் கொண்டவை. தனிப் பாடல்களுக்கு அப்பால் தமிழில் நகைச்சுவை இலக்கியத்தின் எளிய இனிய ஆரம்பம் அட்டாவதானம் வீராசாமிச் செட்டியாரின் விநோத ரசமஞ்சரி, வேதநாயகம் பிள்ளை அவர்களின் பிரதாப முதலியார் சரித்திரம் ஆகியவற்றின் காலத்திலிருந்து தொடங்குகிறது. Wit, irony, satire, repartee என்ற நால் வகை வியாபகத்திலும் இன்றைய நகைச்சுவை கிளை பரப்பி வளர்ந்திருக்கிறது. ஆரம்ப கால இலக்கியங்களுள் வேதநாயகம் பிள்ளையின் பிரதாப முதலியார் சரித்திரத்தில் மட்டுமே மிக உயர்ந்த நகைச்சுவையைக் காண முடிகிறது. அதன் பின்பு இந்தத் தலைமுறை நகைச்சுவையின் யோக காலம். பல எழுத்தாளர்கள் நகைச்சுவையாக எழுதுவதும் ஒரு பரிபூரணமான கலை என்பதை நிரூபித்தார்கள். மாலி, ராஜு, போன்ற ஓவியக் கலைஞர்கள் சித்திரங்களிலேயே சிரிக்க வைக்க முடியும் என்று நிரூபித்திருக்கிறார்கள். எஸ். வி. வி., கல்கி, தேவன் முதலிய எழுத்தாளர்கள் இந்த நகைச்சுவைப் பொற்காலத்தைத் தமிழ் இலக்கியத்துக்குக் கொடுத்திருக்கிறார்கள். இந்தத் தலைமுறை நகைச்சுவை எழுத்தாளர்களை, அவரவர்களுடைய நகைச்சுவை நயம் தெரியும்படியான ஓரோர் பகுதியைத் தொகுத்து இங்கு அளிப்பதன் மூலம் நமது வாசகர்களுக்கு மறுபடியும் அறிமுகம் செய்கிறோம்; அல்லது நினைவுகூரச் செய்கிறோம்.

## வேதநாயகம் பிள்ளை — பிரதாப முதலியார் சரித்திரம்

பிரதாப முதலியாரைப் படிக்க வைக்க விரும்பிய பெற்றோர்கள் ஓர் கல்லூரி ஆசிரியரை நியமித்தனர். பிரதாப முதலியாருக்குப் படிப்பு வரவேயில்லை. மேலும் அவனைச் செல்லமாக வளர்த்து வந்தனர். அதனால் ஆசிரியர்களுக்குக் கீழ்ப்படிதலின்றி இருந்து வந்தான்.

ஒரு சமயம் முதலியாரின் பாட்டி ஆசிரியரிடம் வந்து, ''தம்முடைய பிள்ளையாண்டான் படித்துப் படித்துத் தொண்டை வறண்டு போகிறதே! இனிமேல் உம்முடைய மகன் பாடம் படிக்கட்டும். அவன் படிக்கிறதைக் கேட்டு என் பேரன் கல்வி கற்றுக் கொள்ளட்டும். பிற்பாடு என் பேராண்டிக்குப் பாடம் தெரியாவிட்டால் அவனுக்குப் பயம் உண்டாவதற்காக உம்முடைய மகனைப் பலமாக அடியும்'' என்றாள்.

இதிலிருந்து முதலியாருக்குப் பாடம் தெரியாதபோதெல்லாம் ஆசிரியர் தன் மகனை அடிக்கத் தொடங்கினார். வயிற்றுக் கொடு

யையினால் இந்தச் செயலைச் செய்து வந்தார் ஏழை ஆசிரியர்.

பிரதாப முதலியார் தன் மாமன் மகள் ஞானாம்பாள் படித்து வரும் ஆசிரியரிடத்தில் படிக்கச் சென்றார்.

ஒரு சமயம் ஆசிரியர் உயிர் எழுத்து எத்தனை, மெய்யெழுத்து எத்தனை? என்று கேட்டார். முதலியார் தெரியாமல் விழித்தார். ஏதாவது சொல்ல வேண்டுமே என்று எண்ணிய அவர் உயிர் எழுத்து 50, மெய்யெழுத்து 100 என்று கூறினார். உடனே ஆசிரியருக்குக் கோபம் வந்தது. கோபம் வந்தாலும் அடிக்க முடியாதே! அதனால் ஞானாம்பாளை அழைத்து வரும்படி கூறினார்.

அழைக்கச் சென்ற முதலியார் ஞானாம்பாளிடம் ஆசிரியர் கேட்ட கேள்விக்கு விடை கேட்டார். அவள் உயிர் எழுத்து 12, மெய்யெழுத்து 18 என்று சொன்னாள்.

''நான் உயிரெழுத்து 50, மெய்யெழுத்து 100 என்று அவ்வளவு அதிகமாகச் சொல்லியும் ஆசிரியர் ஒப்புக் கொள்ளவில்லையே? நீ குறைத்துச் சொல்கிறதை அவர் ஒப்புக் கொள்வாரா?'' என்று கேட்டவாறே அவளை அழைத்துக் கொண்டு போனார்.

## பாரதியார் — சின்னச் சங்கரன் கதை



சில சமயங்களில் ஜமீன்தார் குதிரை சவாரி செய்வார். இவருக்கு என்று தனியாக ஒரு சின்னக் குதிரை—மட்டம்—ஆட்டைக் காட்டிலும் கொஞ்சம் பெரிது—தயார் செய்துகொண்டு வருவார்கள். அதன் மேல் இவர் ஏறி உட்கார்ந்தவுடனே அதற்கு முக்கால்வாசி மூச்சு நின்று போகும். பிராணன் கொஞ்சம்தான் மிஞ்சியிருக்கும். எனினும், இவருக்குப் பயம் தெளியாது. இவருடைய பயத்தை உத்தேசித்தும், குதிரையை எப்படியாவது நகர்த்திக் கொண்டுபோக வேண்டுமென்பதை உத்தேசித்தும் முன்னும் பின்னும் பக்கங்களிலுமாக ஏழெட்டு மறவர் நின்று அதைத் தள்ளிக்கொண்டு போவார்கள். ஜமீன்தார் கடிவாளத்தை ஒரு கையிலும் பிராணனை மற்றொரு கையிலும் பிடித்துக்கொண்டு பவனி வருவார்

இவர் இப்படிக் கோழையாக இருப்பதைக் கருதி யாரும் நகைக்கலாகாது. அர்ஜுனனும் வீமனும், அபிமன்யுவும் தோன்றிய சந்திர வம்சத்தில் நேரே பிறந்ததாக இதிகாசங்களிலே கோஷிக்கப்படுகின்றன. கவுண்டனூர் ராஜ குலத்தில் இவர் சேர்ந்திருந்தும் இவ்வாறு கொஞ்சம் அதைரியப்படுவதற்குச் சில ஆழ்ந்த காரணங்கள் உண்டு. இவருக்குப் புத்திரபாக்கியம் இல்லை.

குதிரையிலிருந்து தவறி விழுந்து உயிர்போய் விடுமானால் பிறகு இவருடைய சக்ராதிபத்தியத்துக்கு ஒரு மகன் பிறக்க இடமே இல்லாமல் போய் விடுமல்லவா? எத்தனை பேர் குதிரையிலிருந்து விழுந்து செத்திருக்கிறார்கள்! அதையும் கவனிக்க வேண்டாமா?

## டி. கே. சி. – 'இதய ஒலி' புத்தகத்திலிருந்து



நாற்பது வருஷங்களுக்கு முன்னே நாடக மேடையில் நடிக்கிறதெல்லாம் அதிசயம் தான். ஒரு அணா தரை 'டிக்கட்டி'லிருந்து அரை ரூபாய் 'ரிசர்வ் சேர்' உள்பட எல்லோருக்கும் ஒரே திருப்தி. சூத்திரதாரர் வந்து ஒரு மணி நேரம் பீடிகை போடுவார். பிள்ளையார், சரஸ்வதி இரண்டு பேருமே விதூஷகனுக்குக் கடவுது' என்று சாபமிடுவார்கள். 'ராஜபார்ட்' என்றால் காம்பீர்யமயந்தான். பேச்சு, பாட்டு, முக்கியமாக நடை இதெல்லாம் தேவலோகத்திலிருந்து எழுதி வருத்தியதாகத் தோன்றும். ''ராக்ஷஸப் பார்ட்'' வந்துவிட்டாலோ கேட்க வேண்டியதில்லை. நாடக மேடையையே எதிரி என்று மிதிப்பார். 'ஹா, ஹோ' என்று இடியேறு நாணும்படி முழங்குவார். குங்குலுக்கம் போட்டு வாயிலிருந்து அக்கினிச் சுவாலையைக் கொப்பளிக்கச் செய்வார். அதிலும் தன் ஆட்சிக்குட்பட்ட 'அதல விதல சுதல....' என்னும் பதினாலு லோகங்களையும் எடுத்துச் சொல்லும்போது, அந்தப் பதினாலு லோகங்களுமே உதிர்ந்து நம்மீது விழுந்து விடுமோ என்று சொல்லத் தோன்றும். இதெல்லாம் சேர்ந்து எவ்வளவோ பயத்தை உண்டாக்கினாலும் இப்பேர்ப்பட்ட ராக்ஷஸர்கள் நாடகக் கொட்டகைக்கு வெளியே இல்லையென்ற உறுதியினால் எல்லோருக்கும் மனசுக்குள் எவ்வளவோ ஆறுதலும் தான். இது போக, அழுகிற கட்டம் வந்துவிட்டாலோ ஸ்திரீ பார்ட்டுக்காரன் அழுகையை லேசில் விடுகிறதில்லை. ஒரு மணி இரண்டு மணி நேரமேதான் ஆனுலென்ன? சோகம் பொங்கிக்கொண்டே தான் இருக்கும். சோக ரஸத்தை அந்தக் காலத்தில் மணிக் கணக்கில்தான் கணக்கிடுகிறது. இரண்டு மணி நேரம் அழுதான். மூன்று மணி நேரம் அழுதான் என்கிறது; ஆனால், படி மரக்கால்க்கணக்கில் கண்ணீரை அளந்து கணக்கிட்டால் எளிதாய் இருந்திருக்கும்; துன்பமாயும் இருந்திருக்கும்.

## எஸ். வி. வி. — பால் கணக்கு



"இந்த மாதம் பால்கணக்கு எவ்வளவு?" என்றேன். பால்காரன் பணத்துக்கு வருவதற்கு முன் எங்களுக்குள் கணக்கைச் சரிப்படுத்தி வைத்துக் கொள்ள வேண்டுமென்று என் எண்ணம்.

"என்ன கணக்கு! பார்த்துக் கொள்ளுங்களேன்! பதின்மூன்றும் தேதிவரைக்கும் காலையில் மூன்றுழாக்குப்பசும் பால், மூன்றுழாக்கு எருமைப் பால், சாயந்திரம் ஒன்றரை ஆழாக்கு எருமைப் பால். இதில் ஒரு நாள்மாடு உதைத்து விட்டது என்று ஒரு கால் படி...."

"பசும்பாலா? எருமைப் பாலா?"

"பசும் பால்! ஒரு நாள் சினிமாவுக்குப் போனோமே, அன்றைய தினம் வந்து பார்த்துவிட்டுப் போய் விட்டான். அன்றைக்குப் பால் வாங்கவில்லை. இது போன மாசம். அவன் நமக்கு ஏழு ஆழாக்குக் கொடுக்க வேண்டும். கணக்கென்ன, இதுதான் கணக்கு! பதின்மூன்றும் தேதி வரைக்கும் இந்தக் கணக்கு!"

"ஒவ்வொரு மாதமும் நான் சொல்லுகிறேனே இல்லையோ? அன்றன்றைக்கு வாங்கினதை ஒரு நோட்டுப் புஸ்தகத்தில் வரிசையாய் எழுதி வை என்று! எழுதி வைத்தால் சட்டென்று கூட்டிக் கணக்குப் போட்டுவிடலாமோ இல்லையோ?"

"எழுதி வைக்கிறதென்ன? நித்தியம் இவ்வளவு என்று கணக்காய்த்தானே வாங்குகிறோம்."

"என்ன கணக்காய் வாங்குகிறாய்? ஒரு நாளைக்கு இரண்டு ஆழாக்குக் குறைச்சல் என்கிறாய்! மற்றொரு நாள் மூன்று ஆழாக்கு அதிகம் என்கிறாய்! உன் கணக்கை இறந்து போனாரே ராமாநுஜம் அவர் திரும்பி வந்தால் கூடப் போட முடியாதே. சரி, என்னஆச்சு இப்போ பதின் மூன்றும் தேதி வரை..."

"அதுதான் சொன்னேனே, காலையில் மூன்றுழாக்குப் பசும் பால்; மூன்றுழாக்கு எருமைப் பால். பதின்மூன்று நாளைக்குப் பார்த்துக் கொள்ளுங்களேன், பதின்மூன்று அரை என்ன ஆச்சு? ஆறரை."

"பசும்பாலைத் தனியாயும் எருமைப்பாலைத் தனியாயும் சொல்லேன். பசும் பால் ஒரு ரூபாய்க்கு இரண்டரைப் படி. எருமைப் பால் இரண்டே முக்கால்படி. இரண்டையும் வெவ்வேறாகக் கணக்குப் போடவேண்டாமா?"

"அப்படித்தான் போடுங்களேன்!"

"சரி, பசும் பாலை முன்னாடி சொல். காலையில் எவ்வளவு? சாயந்திரம் எவ்வளவு?"

"அதுதான் சொன்னேனே, காலையில் மூன்று ஆழாக்கு. சாயந்திரம் ஒன்றரை ஆழாக்கு. மொத்தம் நாலரை ஆழாக்கு. பதின்மூன்று நாளைக்கு. இதில் சினிமா போன தினத்துக்கு ஒன்றரை ஆழாக்குக் கழித்துப் பாருங்கள்! போன மாதத்தில் ஏழு ஆழாக்கு அவன் நமக்குக் கொடுக்க வேண்டும்!"

"கழிக்கிறதையும் கூட்டுறதையும் அப்புறம் பார்க்கலாமே? முன்னே இந்தக் கணக்கு அற்றுபடியாகட்டுமே! பதின்மூன்றுநாலரைஆழாக்கா? பதின்மூன்று நான்கு ஏழுபத்திரண்டு!"

"பதின்மூன்று நான்கு ஏழு பத்திரண்டா? கணக்கில் ரொம்பக் கெட்டிக்காரர்! ஐம்பத்திரண்டு...."

"ஆமாம்! ஆமாம்! ஐம்பத்திரண்டு. உன் கணக்குப் போடுவதற்குள் மூளை தெறிப் போய்விடுகிறது....."

## தேவன் : மிஸ் ஜானகி



ஏதையும் காதில் போட்டுக்கொண்டு வருத்திக் கொள்ளாத சுபாவம் விட்டு எஜமானி பாகீரதி அம்மாளுக்கு. வயது ஐம்பத்திரண்டு ஆகிவிட்டது. அதிகம் நடமாடவோ ஓடியாடி வீட்டு வேலை செய்யவோ முடியாது. ஆனால் உட்கார்ந்த இடத்திலிருந்து அம்மாளின் நோக்கு எங்கும் வியாபித்திருந்தது. மனம் கோணுதிருக்கும் கணவன், வீட்டைக் கவனிக்கும் மூத்த பெண், காலேஜில் படிக்கும் பிள்ளை, அடங்கி நடக்கும் மாப்பிள்ளை—இன்னும் என்ன வேண்டும்? ஆதலால் தைரியமாகப் பாகீரதி தேக அசௌக்யத்தை வருவித்துக்கொண்டு, தினம் ஒரு புதிய வியாதியாகச் சொல்லி வந்தாள். திங்கள் கிழமை அஜீர்ணம், செவ்வாய்க்கிழமை ஒற்றைத் தலைவலி, புதன்கிழமை முதுகு வலி, வியாழக்கிழமை மூட்டுக்குப் பூட்டு குடைச்சல், வெள்ளிக்கிழமை கண்ணெரிச்சல், சனிக்கிழமை ஓரே ஓய்ச்சல் — இப்படியாக அந்த அம்மாளின் உடம்பைக் கொண்டு கிழமையைச் சொல்லிவிடும் அளவுக்கு தேகநிலை இருந்து வந்தது.

## சரித்திர நகைச் சுவை — தெனாலிராமன்

தெனாலிராமன் கிருஷ்ணதேவராயர் அவையில் விகடகவி. ஒரு தடவை அரசர் மனம் புண்படும் விதமாகப் பேசி விட்டான் அவன். உடனே அரசர் கோபமுற்று அவனுக்குத் தண்டனை கொடுத்து விட்டார். அவனைக் கழுத்தளவுக்குப் பூமியில் புதைத்து யானை மிதிக்க இடறச் செய்யும்படி கட்டளையிட்டார் மன்னர்.

உடனே மன்னரின் கட்டளையை நிறைவேற்ற அதிகாரி முன்வந்தார். முதலில் அவனைக் கழுத்தளவுக்கு மண்ணில் புதைத்து விட்டு, யானையின் பக்கத்துக்குப் போனபோது அதற்கு மதம் பிடித்து விட்டதைக் கண்டார். ஆகவே மற்றொரு யானையைக் கொண்டு வரச் சென்றார் அதிகாரி.

தெனாலிராமன் மண்ணில் புதையுண்டிருப்பதை வழியில் வந்த ஒரு கூனன் கண்டு, அவன் மீது பரிதாபப்பட்டு, "இப்படி யார் உன்னை மண்ணில் புதைத்துச் சித்திரவதை செய்தார்கள்?" என்று கேட்டான்.

"ஐயா! என் முதுகில் ஒரு கூனல் இருந்தது. அதை நீக்க அரசாங்க வைத்தியர் கைக் கொண்டுள்ள வைத்தியமாகும் இது! வைத்தியர் அவசர வேலையாக வீட்டுக்குப் போயிருக்கிறார். அவர் குறித்த நேரம் கடந்து விட்டது. என் கூனல் மறைந்து விட்டதா என்று பார்க்க விரும்புகிறேன். என்னை இந்தக் குழியிலிருந்து மண்ணை அப்புறப்படுத்தி வெளியே எடுத்துவிடும்" என்றான்.

கூனனுக்கும் அந்த வைத்தியத்தைக் கைக் கொள்ள வேண்டுமென்று ஆசை. தெனாலிராமனை விடுதலை செய்து விட்டு அவன் இடத்தில் கழுத்தளவு மண்ணில், தான் புதைந்து கொண்டான்.

## அரசியல் கேலிச் சித்திரம்

—உம்மன்

## சிரிக்கும் சிலேடை

சென்னையிலிருந்து கோவைக்குப் பேசப் போயிருந்த ஒரு புலவர் தமது பேச்சிலே சென்னையில் கிடைக்கும் பால், தயிர், நெய் இவற்றின் தன்மையைச் சொல்லி வந்தபோது "மானங் கெட்ட தயிரை நாங்கள் பருகுகிறோம். இவை உருவத்தால் தயிரே அல்லாது உருசியில் அல்ல" என்று சரமாரியாகப் பேசிக் கொண்டு போனார்.

மறுமுறை கோவைக்குப் பேச வந்த புலவரைத் தமது வீட்டுக்கு அழைத்து விருந்து படைத்தார் ஓர் அன்பர். கட்டித் தயிர் சட்டியை விட்டு வராதபடி அத்தனை பாறையாக இருந்தது.

"பேஷ்! தயிர் என்றால் இதன்றோ தயிர்! வெகு பேஷ்!" என்று புலவர் வெகுவாகப் பாராட்டினார்.

"எங்களூர் தயிர் மானங் கெட்ட தயிர் இல்லை. அதிக ஆடையுடன் இருக்கிறது!" என்றார் விருந்து போட்டவர்.

"கோவையில் இத்தனையில் இருக்க ஆடைக்கு ஏது பஞ்சம்!" என்று மீண்டும் சிலேடை போட்டார் புலவர்

புலவருக்கு ஆடைத் தயிரும், புத்தாடையும் கிடைத்தன!





கல்கத்தா மருந்துச்சாலை ஒன்றில் வேலை பார்த்து வந்த அவர் வங்காளி மொழியில் ஒரு கதை எழுதினார். அதைத் தம் நண்பர்களிடம் படித்துக் காட்டினார். கிண்டலும் கேலியும் நிறைந்த அந்தக் கதையைக் கேட்டவர்கள் விழுந்து விழுந்து சிரித்தார்கள்.

''இந்தக் கதையை உங்கள் சொந்தப் பெயரிலேயே வெளியிடப் போகிறீர்களா?'' என்று நண்பர்கள் கேட்டுக் கொண்டிருந்த வேளையிலே, வேலையாள் 'பரசுராம்' நுழைந்தான். 'இவன் பெயரில் அனுப்பப் போகிறேன்!' என்று கூறியவர் அன்று முதல் 'பரசுராமா'கவே ஆகிவிட்டார். இயற் பெயர் ராஜசேகர பஸு. அவரது நகைச்சுவைக் கதைகள் இந்திய இலக்கியத்துக்கே அணிகலனாக விளங்குகின்றன. இவரது கதைத் தொகுதிகளுக்கு சாகித்திய அகாதெமி பரிசு அளித்துப் புகழ் தேடிக் கொண்டது.

## 'ஜோக்'குக்கு ஒரு ராஜு

தமிழகத்திலுள்ள பல்வேறு மக்களையும் அவர்களுடைய வித விதமான மனோ பாவங்களையும் அப்படியே தம் பேனாவினால் உருவாக்கிக் காட்டி அவைவரையும் ஆனந்தக் கடலில் ஆழ்த்திய மாலியோடு ஒப்பு நோக்கி மதிக்கத் தகுந்த மற்றொருவர் காலஞ் சென்ற ராஜு.

''ஆனந்த விகட''னில் அவருடைய ஜீவனுள்ள ஹாஸ்யச் சித்திரங்கள் வெளி வந்த போது எங்கேயாவது நான்கு பேர்கள் சேர்ந்தால் மேற்படி சித்திரங்களைப் பற்றிப் பேசி ரசிப்பது வழக்கமாகி விட்டது. 'சீமா சீரீஸ்' என்ற இறவாத ஹாஸ்ய தொடரை உருவாக்கித் தமிழ் நாட்டுக் குடும்பங்களில் மகிழ்ச்சியை நிரப்பியவர் ராஜு.

இதோ ராஜுவின் நகைச்சுவை விருந்தி லிருந்து ஒருசில துளிகளை இங்கு அளிப்பதில் பெருமை கொள்ளுகிறோம்.

**ராஜுவின் படங்கள்**
நன்றி:
**ஆனந்த விகடன்**



ஒருவர்: ''எங்கே ஸார் கிளம்பினீர்?''

மற்றவர்: ''மாப்பிள்ளையை அழைச்சுண்டு வரத்துக்கு!''

ஒருவர்: ''அப்படியா? முகூர்த்தம் எப்போ?''

மற்றவர்: அதெல்லாம் ஒண்ணுமில்லை, ஸார்! மாப்பிள்ளை கோவிச்சுண்டு போயிட்டார்! கூட்டிண்டு வரத்துக்குப் போறேன்!''

★

''சார், போகலாம் வாங்கோ! அப்பவே தோட்டக்காரன் இங்கே உட்காரப்படாதுன்னு சொல்லியிருக்கான்! நாம் இங்கே உட்கார்ந்திருக்கிறதை அவன் பார்த்தான்னா அப்புறம், பின்னாலே ரொம்ப அசிங்கம்!''





எடையிலும் ஏக்கமா!

# எடை குறைந்து எடுப்பாய்விளங்க

# லிமிகல்

பாவையரைப் படரும் பைங்கொடியென வர்ணித்தான் பாவலன்! உடலோடு நன்குகப் பொருந்திய உடையணிந்து கொடிபோன்ற எழிலுருவத்துடன் உலவும் காரிமணிதான் இன்றைய நவநாகரீக சமுதாயத்தின் சின்னம். உடல் கனம் குறைவதற்குக் கடினமான தேகப் பயிற்சிகளோ, பத்தியங்களோ தேவையில்லை. லிமிகல் அருந்தி எளிய முறையில் இளைக்கலாம்.

லிமிகல் பானம் தயாரிப்பது வெகு சுலபம்—நீரில் கரைத்து அருந்த வேண்டியதுதான். ஒரு தம்ளர் லிமிகல் பானத்தில் ஒருவேளை ஆகாரத்தின் முழுச்சத்தும் அடங்கியிருக்கிறது. சாரம் மிகுந்த புரோட்டீன்கள், கார்போஹைட்ரேட்டுகள் விட்டமின்கள், மற்றும் மினரல்கள் இவற்றைச் சரியான அளவில் சேர்த்து சாஸ்திரிய முறையில் தயாரிக்கப்பட்ட உணவுதான் லிமிகல். ஒரு நாளைக்கு 900 கலோரிகள் கொடுக்கும் லிமிகல் பானத்தை அருந்தும் காலத்தில் உடல் இளைக்குமே தவிர நீங்கள் நல்ல ஆரோக்கியத்துடன் திகழ்வீர்கள்.

லிமிகலைப் பரீட்சார்த்தமாக அருந்தியவர்களின் உடல் நிறை வாரத்திற்கு சுமார் 3லிருந்து 5 பவுண்டுகள் வரை குறைந்திருக்கிறது. லிமிகல் அருந்திவரும் காலத்தில் உங்கள் வழக்கமான அலுவல்களைக் கவனித்து வரலாம்!




உங்கள் டாக்டரும்

# லிமிகல்

அருந்தும்படிதான் சிபாரிசு செய்வார்!

"ஸ்லிம்மிங் சஸ் லிம்பின்" என்னும் இலவச புத்தகத்தைப் பெற எழுதுங்கள்.

ஸாராபாய் கெமிகல்ஸ்
த. பெ. எண் 1688, பம்பாய்-1

பசியூட்டக்கூடிய மும்மணங்களிலும் கிடைக்கும் - வாழைப்பழம், சாக்கலேட், ஆரஞ்சு

சில்லறை விலை: 225 கிராம் டின் ரூ. 6-50, 1.6 கிலோகிராம் டின் ரூ. 33-50 (வரிகள் தனி)

# நகைச்சுவை நடிகர்கள்





✿

தமிழ் பேசும் படம் தயாரிக்கப்பட்ட நாளிலிருந்து எத்தனையோ நகைச்சுவை நடிகர்கள் தங்கள் திறமையான நடிப்பினால் நகைச் சுவைக்கு ஒரு தனிச் சுவை ஊட்டி நம்மையெல்லாம் சிரிக்க வைத்துக் களிப்பில் ஆழ்த்தியிருக்கின்றனர். திரைக் கதையின் சோகத்தையும் மறந்து நாம் சிரித்திருக்கிறோம். அப்படிப்பட்ட நகைச் சுவை நடிகர்களை, அவர்கள் நடித்த படங்களின் சில காட்சிகளோடு வெளியிட்டுள்ளோம். உங்கள் அன்புக்குப் பாத்திரமாகிப் பிரபலமான அவர்களை வரும் பக்கங்களில் கண்டு மகிழலாம்.

✿












ஆங்கிலத் திரைப்பட
நகைச்சுவை நடிகர்களில்
ஒரு சிலர்



# கண்படு மல்லிகை

அரு. ராமநாதன்

டாக்டர் ஜகந்நாதன் வசந்தி போக இருக்கும் இடத்தைக் கூறியதும் முதலில் அவன் திகைத்தாலும் அடுத்த விநாடியே சமாளித்துக் கொண்டு, ''ஆமாம்! என் பிளாஸ்டிக் கூடையில் ஆரஞ்சுப் பழங்களும், ஆப்பிளும் இருப்பதைப் பார்த்து விட்டு ஒரு நோயாளியைப் பார்ப்பதற்குத்தான் நான் போகிறேன் என்று யூகித்திருப்பீர்கள். இது என்ன பிரமாதம்?'' என்றான்.

''அங்கே உன் அக்காவைத்தானே பார்க்கப் போகிறாய்?''

''ஆமாம்! என் கையில் மல்லிகைப் பூ பொட்டலம் இருப்பதிலிருந்து அதை யூகித்திருப்பீர்கள்!'' என்று சொன்ன வசந்தி குறும்புச் சிரிப்புடன், ''உங்களுக்கென்ன, துப்பறியும் சி.ஐ.டி தொழிலா?'' என்று கேட்டாள்.

''இல்லை! என் தொழில் அதுவல்ல! ஆனால் துப்பறிவதில் எனக்குச் சுவாரசியம் உண்டு'' என்றார் ஜகந்நாதன்.

அதன் பிறகு வசந்தி தைரியமாக அவருடைய காரின் முன் சீட்டில் ஏறி அவருக்குப் பக்கத்திலேயே அமர்ந்து கொண்டாள். அவளுடைய சைக்கிளையும் தூக்கிக் காரின் பின் சீட்டில் வைத்தாள்.

ஜகந்நாதன் உற்சாகமாகக் காரை ஓட்டிச் சென்றார்.

சிறிது தூரம் சென்றதும், ''நீ மிகவும் புத்திசாலிப் பெண்!'' என்றார் அவர் மெல்ல.

அந்தப் பாராட்டுதலை ஒரு புன் முறுவலுடன் ஏற்றுக்கொண்ட வசந்தி, ''அதிருக்கட்டும்! நீங்கள் எதற்காகப் பூ வாங்கிக் கொண்டு போகிறீர்கள்? உங்கள் 'ஒய்ப்'புக்கா?'' என்று மெல்லக் கேட்டாள்.

''ஒய்ப்புக்கு எந்த மடையனாவது இவ்வளவு அக்கறையாகப் பூ வாங்கிக் கொண்டு போவானா?... எனக்கு இன்னும் கல்யாணமே ஆகவில்லை!''

''உங்கள் 'ஸிஸ்டர்' (சகோதரி) யாராவது இருக்கிறார்களா?''

''என்னைச் சுற்றி ஏராளமான வெள்ளை ஆடை உடுத்திய ஸிஸ்டர்கள் வளைய வருகிறார்கள். ஆனால் அவர்களில் ஒருத்தியாவது தலையில் பூ வைத்துக்கொள்ள மாட்டாள்!''

''பின்னே இந்தப் பூ யாருக்கு?''

''அது யாருக்கு என்று தெரிந்தால் நீ திகைப்பாய்! உலகத்தில் இப்படியும் நடக்குமா என்று ஆச்சரியப் படுவாய்!''

வசந்தி யோசனையில் ஆழ்ந்தாள்.

அவளை விஷமச் சிரிப்புடன் உற்று நோக்கிய ஜகந்நாதன், ''நீ டாக்டர் ஜகந்நாதனின் நாவல்களைப் படித்திருக்கிறாயா? அவர் ஒரு புரட்சிகரமான எழுத்தாளராம்! அவருடைய புத்தகங்களையெல்லாம் தீயில் வைத்துக் கொளுத்த வேண்டும் என்று பலர் சொல்லுகிறார்கள்!'' என்றார்.

''நீ என்ன? அவருக்குச் சரியான சூடு கொடுக்க வேண்டும்! அவர் பெண்களையெல்லாம் பரிகசித்து எழுதி வருகிறார்.''

''அதற்காக அவரை நீ பழி வாங்கப் போகிறாயா?''

''ஆமாம்! அவர் மிகப் பெரிய அறிவாளியென்றாலும் அவருடைய அறிவையெல்லாம் சிதறடிப்பேன்! அவரை அழ வைப்பேன்! அதற்கு நான் ஒரு திட்டமும் வைத்திருக்கிறேன்!''

அது என்ன திட்டமென்பது ஜகந்நாதனுக்கு ஓரளவு புரிந்துவிட்டதால் தமக்குள் சிரித்துக் கொண்டார்.

அவருடைய நர்ஸிங் ஹோமைக் கார் அடைந்ததும் வசந்தி கீழே இறங்கிக் கொண்டு, ''ஆமாம். நீங்கள் யார்?'' என்று அவரிடம் மெல்லக் கேட்டாள்.

''வசந்தி! நான்தான் டாக்டர் ஜகந்நாதன்! இந்த மல்லிகைப் பூ உன் அக்கா உமாவுக்குத்தான்!'' என்று கூறி ஜகந்நாதன் சிரித்தார்.

அதைக் கேட்டதும் வசந்தி அப்படியே அதிர்ந்து போய் நின்று விட்டாள்!

## அத்தியாயம் இருபத்து நான்கு

## பிரம்மாஸ்திரம்

''உமா! உன் தங்கை வசந்தி வருகிறாள்!'' என டாக்டர் ஜகந்நாதன் கூறிக் கொண்டே, உமா படுத்திருக்கும் தனியறைக்குள் நுழைந்தார்.

வசந்தியோ எப்போதும் ஜவான் போல ஜம்ஜம் என்று நடந்து வரக் கூடியவள், இப்போது தலையைத் தொங்கப் போட்டுக் கொண்டு ஜகந்நாதனுக்

குப் பின்னால் மெல்ல நடந்து வந்து உமாவின் அருகில் உள்ள மருந்து மேஜையின் மீது தன் பிளாஸ்டிக் பழக் கூடையை டக்கென்று வைத்தாள். அவளுக்கே வழக்கமான குறும்புத்தனம், துடுக்குத் தனம், குழந்தைத்தனமான குதூகலக் கும்மாளம் எதுவும்இப்போது. அவளிடம் தட்டுப்பட வில்லை. அது உமாவுக்குப் புதுமையாகத் தோன்றியது

''என்னடி, வசந்தி! ஏன் ஒருமாதிரியாக இருக்கிறாய்?'' என்று உமா கவலையுடன் கேட்டாள்.

ஜகந்நாதன் ஒரு புன்முறுவலுடன் குறுக்கிட்டு, ''ஒன்றுமில்லை, உமா ! உன் தங்கைக்குக் கொஞ்சம் தலை வலி உண்டாக்கி யிருக்கிறேன்! அதற்கு நானே 'ட்ரீட் மெண்ட்' செய்து விடுகிறேன்!'' என்றார்.

''என்ன, டாக்டர்? அவளுக்கு நீங்கள் தலைவலி உண்டாக்கினீர்களா?''

''ஆமாம். நோயும் நோய்க்கு மருந்தும் இரண்டுமே பெண்களின் கண்களில் இருப்பதாக நம் திருவள்ளுவர் சொல்லியிருக்கிறார். ஆனால் என் வார்த்தைகளிலேயே அவை இருக்கின்றன!''

உமா ஒன்றும் விளங்காமல் விழித்தபடி தன் தங்கையைக் கூர்ந்து பார்த்தாள். வசந்தியோ அக்கினியாஸ்திரம் போன்ற விழிகளால் ஜகந்நாதனை



முறைத்துப் பார்த்துக் கொண்டேயிருந்தான். ஆக்ரோஷத்தால் அவளுடைய உதடுகள் துடி துடித்தன. ஆனால் அவ்வுதடுகளிலிருந்து வார்த்தைகள் வெளி வர முடியாமல் தத்தளித்தன.

ஜகந்நாதன் வழக்கமான புன்முறுவலுடன், "என்ன உமா! ஏதோ மர்ம நாவலின் புதிர் போல் உனக்குத் தோன்றுகிறதா? அதை விளக்குகிறேன், கேள்! இன்று மத்தியானம் உன் தங்கையைப் பற்றி என்னிடம் சொன்னாய் இல்லையா? என் நாவல்களைப் படித்துவிட்டு எனக்கு எதிராகக் கட்சி கட்டிக் கொண்டிருக்கக் கூடிய ஒரு ரசிகையும் இருக்கிறாளா; அப்படிப் பட்டவளை நானே எதிர்கொண்டு அழைத்து வர வேண்டுமென்று நினைத்தேன். அதனால் அவளுடைய காலேஜ் விடுகிற நேரம் பார்த்து அங்கே நான் காரில் சென்று அவளைப் பின்தொடர ஆரம்பித்தேன்!" என்றார்.

"அவள்தான் வசந்தி என்பது உங்களுக்கு எப்படித் தெரியும், டாக்டர்? காலேஜில் யாரிடமாவது விசாரித்தீர்களா?" என்று உமா பரபரப்புடன் கேட்டாள்.

"இல்லை; அது எனக்கு அவசியப்படவில்லை. விசேஷக் கதாநாயகிகளைப் பொறுக்கியெடுப்பதில் நான் கைதேர்ந்தவன்! உன் தங்கை காலேஜ் தோழிகளின் மத்தியில் மட்டுமல்ல, ஆயிரக் கணக்கான பெண்களுக்கு மத்தியில் இருந்தாலும் அவள்தான் வசந்தி என்பதை நான் கண்டு பிடித்து விடுவேன். மேலும் அவளுடைய நடையுடை பாவனைகள் அனைத்தும் அவளைப் பிரமாதமாக விளம்பரப்படுத்திக்கொண்டிருந்தன!" என்று ஜகந்நாதன் தம் அறிவாற்றலின் கூர்மையை விளம்பரப் படுத்தி வியப்பூட்ட முயன்றார்.

"டாக்டர்! நீங்கள்.... வசந்தியைப் பின்தொடர்ந்தீர்களா......?"

"ஆமாம்! அவளுக்குத் தெரியாமல் என் காரிலே அவளைப் பின்தொடர்ந்து சென்று ஒரு பழக் கடைக்குள் அவள் நுழைந்த போது அதன் எதிரிலேயே என் காரை ஓசைப்படாமல் நிறுத்தி விட்டு எவனோ ஒரு மடையன் போல் தள்ளி நின்று கொண்டேன். பிறகு வசந்தியோடு பேச்சுக் கொடுத்து அவளுடைய வாயாடித் தனத்தைக் கிளறி விட்டு, ருசிகரமாகக் கொஞ்சம் வாய்ச் சண்டை போட வைத்தேன். கடைசியில் அவளையே என் காரில் பட்டணப் பிரவேசமாக அழைத்துக் கொண்டுவந்து விட்டேன்!"

"அவளுடைய சைக்கிள்....?"

"அவளுடைய சைக்கிளை ஓடக் கூடிய நிலையில் விட்டு வைத்தால் அவள் என் காரில் வருவாளா? அதனால் சைக்கிள் டயரில் நைஸாக ஒரு 'இன்ஜெக்ஷன்' போட்டு (ஊசி குத்தி) அதைப் பஞ்சராக்கி வைத்தேன். அதோடு பேய் மழை பிடித்துக் கொள்ளும் என்றும் அவளுக்குப் பயமுறுத்தினேன். மழை

## அட்டைப்பட விளக்கம்

நகைச்சுவை மலரின் மேலட்டையில் இடம் பெற்றிருந்தபோதிலும் சிரிக்காமலிருப்பதற்காக அந்த நால்வரையும் நாம் மன்னித்தேயாக வேண்டும்.

அந்தக் கைதியின் பாடு தேவலே. 'பிரமோஷனில்லாது போகுமோ? வேலையிலிருந்து நீக்கிவிடுவார்களோ?' என்பது போன்ற சஞ்சலம் தரும் சிந்தனைகள் எதுவுமின்றி அவன் மனம்விட்டுச் சிரிக்கிறான். சிரிப்பு ஒரு நல்ல டானிக் என்பது நிஜமானால் அவன் நிறையத் தண்டனையை அனுபவிக்கத் தேவையான தெம்பையெல்லாம் இந்த இரண்டு நிமிஷச் சிரிப்பிலே பெற்றுவிடுவான்! இன்ஸ்பெக்டருக்குக் கைலாகு கொடுத்துத் தாங்கித் தரையிலிருந்து தூக்கி நிறுத்தி வைத்த பிறகு இந்தப் போலீஸ்காரர்கள் என்ன செய்யப் போகிறார்கள், தெரியுமா? அந்தக் கைதி மீது பொறாமைப்படப் போகிறார்கள்! 'அடடா! இத்தனை ஆனந்தமாகச் சிரிக்க நமக்குக் கொடுத்து வைக்கவில்லையே' என்று. பாருங்கள், கைதியாக இருப்பதிலும் ஒன்றிரண்டு அனுகூலங்கள் இருக்கத்தானே செய்கின்றன?

சற்றும் எதிர்பாராத தருணத்தில் சறுக்கியோ, தடுக்கியோ (பலமான அடி படாத வகையில்) 'தொபுகடீ'ரென்று விழுவோரைப் பார்த்துத் தம்மை மறந்து, ஆதிநாள் முதல் இன்று வரை எத்தனையோபேர் எத்தனையோ இடங்களில் வயிறு புண்ணாகும்படி சிரித்திருக்கிறார்கள். இத்தகைய ஒரு சிரஞ்சீவி ஹாஸ்யத்தில் ஒரு சில்லறை விஷமம் செய்து நகைச்சுவை மலரின் மேலட்டையில் வழங்கும் கார்ட்டூன் கலைஞர் சாமா, இங்கே சந்தோஷப்பட்டுக் கொண்டிருக்கவில்லை; சிரிக்க முடியாது அவதிப்படும் அந்தத் துரதிர்ஷ்டசாலிகளான அந்த மூன்று போலீஸ்காரர்களுக்காகவும் அனுதாபப்பட்டுக் கொண்டு உட்கார்ந்திருக்கிறார்!

யில் தன் விசேஷ அலங்காரங்கள் கலைந்து விடக் கூடாதென அவள் துடிப்பாள் என்பதும் எனக்குத் தெரியும்!'' என்று கூறி நிறுத்தி ஒருகணம் பெருமூச்சு விட்ட ஜகந்நாதன் மறுபடியும் தன் முகத்தில் தமாஷான புன்முறுவலை வரவழைத்துக்கொண்டு, ''மேலும் நான் யார் என்பதை முன்னறிவிப்பாக அவளிடம் சொல்ல வில்லை. அவள் மீது பிரும்மாஸ்திரத்தைப் பிரயோகிக்க விரும்பினேன். அதாவது வசந்தியைத் திடீரென திடுக்கிட வைத்துப் பிரமிப்பில் ஆழ்த்திவிட விரும்பினேன். ஏனெனில், முன்னறிவிப்பின்றி முற்றுகையிட்டு எதிரிகளைப் பிரமிக்க வைத்து முறியடிப்பது யுத்த முறைகளில் மட்டுமல்ல, பெண்கள் விஷயத்திலும் சுலபமான வழி!''

வசந்தியால் அதற்கு மேலும் பொறுக்க முடியவில்லை. எரிமலை வெடிப்பது போல் குதித்தாள். ஜகந்நாதனை எரித்து விடுவது போல் பார்த்துக் கொண்டே உதடுகள் படபடக்கக் கூவ முயன்றாள்.

''அக்கா!.... அவர்.... அவர்.... ஒரு பெரிய..... பெரிய......''

''பெரிய ராஸ்கல், பெரிய போக்கிரி என்றுதானே என்னைச் சொல்ல வந்தாய் வசந்தி? அதைத் தாராளமாகச் சொல்லி விடு!'' என்று உற்சாகப் படுத்திய ஜகந்நாதன், ''அதை நான் பெரிதும் ரசிப்பேன். உணர்ச்சிகரமான பெண்களின் வாயால், 'இடியட், ஸ்டுபிட், முட்டாள்' என்ற வார்த்தைகளைக் கேட்பதை விட, 'ராஸ்கல், போக்கிரி, முரடன்' என்ற பட்டங்களைப் பெறுவதுதான் இந்தக் காலத்தில் ஆண்களுக்கு வெகு உற்சாகம்! ஏனெனில், அத்தகைய பட்டங்கள் ஆண்மகனின் வீர தீர சூரத்தனத்துக்கு எடுத்துக் காட்டுகள்!'' என்று வெகு சுவாரசியமாகச் சொன்னார்.

''டாக்டர்! உங்கள் நாவல்களைப் பற்றி அவள் ஏதோ விளையாட்டாக என்னிடம் விமரிசனம் செய்தாள் என்பதற்காக நீங்களும் அவளுக்குச் சமதையாக இப்படியெல்லாம் செய்யலாமா? பாவம், அவள் குழந்தைதானே!'' என்றாள் உமா.

''குறும்புத் தனமாகச் சிரிக்கும் குழந்தைகளைக் கிள்ளி அழ வைத்து வேடிக்கை பார்ப்பது ஒரு தமாஷ் தானே உமா? இதையெல்லாம் நீ 'சீரியஸாக' எடுத்துக் கொள்ளாதே!''

''நான் ஒன்றும் குழந்தை யில்லை!'' என்று கூச்சலிட்டபடி வசந்தி ரோஷத்தோடு குதித்து முன்னால் வந்து அதற்கு மேல் என்ன செய்வது என்று தெரியாமல் சுற்றிச் சுழன்று விட்டு அழாத குறையாய் உமாவை நோக்கி, ''அக்கா! அவர் உனக்கு மல்லிகைப் பூ வாங்கி வந்திருக்கிறாரக்கா! அது 'ஸீரியஸ்' இல்லையா?'' என்று குமுறினாள்.

''ஓ!'' என்று ஜகந்நாதன் சிரித்துக் கொண்டே, ''உமா! உன் தங்கையைப் பார்த்தாயா, அதற்குள் பொறுமைப்பட ஆரம்பித்து விட்டாள்!''— என்றார் பொறுமை என்கிற வார்த்தையை அழுத்தம் திருத்தமாக உச்சரித்தபடி.

வசந்திக்கு முகமெல்லாம் குப்பென்று சிவந்து விட்டது. பொறுமை என்கிற பதப் பிரயோகம் அவளுடைய நெஞ்சில் சுருக்கென்று பிரும்மாஸ்திரம் போல் பாய்ந்தது.

''ரைட்டர் சார்! நீங்கள் பொறுமை என்று எந்த அர்த்தத்தில் சொல்கிறீர்கள்? அதை முதலில் 'க்ளியர்'

## சிரிக்கும் வாயு



பல் வைத்திய நிபுணர்கள் இருவர் ஹாலிவுட் குழந்தை நட்சத்திரத்திடமும் ஹாவர்ஷாட் பிரபுவிடமும் தங்கள் தங்கள் கைவரிசைகளை ஒரே சமயத்தில் காண்பிக்கஆரம்பித்தார்கள். இருவரும் சிரிக்கும் வாயு என்றுபெயர்பெற்றநைட்ரஸ் ஆக்ஸைடைத் தங்களிடம் சிகிச்சை பெற வந்தோருக்கு அளித்து அவர்களை மயக்கமுறச் செய்தார்கள். அத்தருணத்தில் — பூலோகமா, மேல் லோகமா என்று நிச்சயிக்க முடியாத நிலையில் நோயாளிகளின் ஆவி சஞ்சரித்துக் கொண்டிருந்த வேளையில்தான் அந்த விபரீதம் நிகழ்ந்தது. குழந்தை நட்சத்திரத்தின் ஆவி பிரபுவின் உடலுக்குள் புகுந்து கொண்டது. பிரபுவின் ஆவி குழந்தை நட்சத்திரத்தின் உடலுக்குள் புகுந்து கொண்டது. இந்த இட மாற்றத்தால் என்னென்னவெல்லாம் வேடிக்கைகள் ஏற்படும் என்பதற்குப் பொருளடக்கப் பகுதியில் வெளியாகியுள்ள படம் ஒரே ஒரு உதாரணம் தான். இத்தகைய ஓர் அபூர்வக் கற்பனை யார் மூளையில் உதயமாயிற்று? சந்தேகமென்ன? இதோ மேலே நீங்கள் காணும் வோட்ஹவுஸ்தான் ''சிரிக்கும் வாயு'' என்ற மேற்கூறிய நூலை எழுதியவர்.

அறுபதுக்கு மேற்பட்ட நாவல்களை எழுதித் தள்ளியுள்ள வோட்ஹவுஸ் நாடகங்கள், கவிதைகள் ஆகியவற்றை இயற்றுவதிலும் வல்லுனர்தான்.

பண்ணிவிட்டு (விளக்கிச் சொல்லிவிட்டு) மறு காரியம் பாருங்கள்!'' என்று வசந்தி எதிர்முழக்கமிட்டாள்.

''ஓ! அதற்கு வியாக்கியானம் வேண்டுமா? உன் அக்காவுக்கு நீ ஒருத்திதான் பூ வாங்கிக் கொண்டுவந்து கொடுக்க வேண்டுமென்று நினைக்கிறாயே! அதனால்தான் உனக்குப் பொறாமை என்றேன்'' என்றார் ஜகந்நாதன்.

''நான் தங்கை! பூ வாங்கியும் வருவேன்; அக்காவின் தலையில் சூட்டியும் விடுவேன்! ஆனால் நீங்கள் யார்? என் அக்காவுக்கு நீங்கள் எதுக்காகப் பூ வாங்கிக் கொடுக்கணும்?''

''ஏன்? நான் மருந்து மட்டும்தான் கொடுக்கணுமா? சில சமயங்களில் மருந்தின் நெடியை விட மல்லிகைப் பூவின் மணம் நோயாளிக்கு அதிகத்தெம்பூட்டிச் சீக்கிரம் குணமடையச் செய்வதுண்டு! நான் வெறும் மருந்து டாக்டர் மட்டுமல்ல! மனோதத்துவ நிபுணனும்கூட! அதை நீ ஞாபகம் வைத்துக் கொள்!'' என்று திரித்துக் கூறிய ஜகந்நாதன், ''உன் அக்காவுக்குத்தான் இந்தப் பூவை வாங்கினதாக உன்னிடம் சொன்னேனே தவிர, என் கையாலே கொடுப்பதற்கு அல்ல!'' என்று சொல்லி விட்டுத் தன் கையில் உள்ள பூப் பொட்டலத்தைத் தன் சட்டைப் பைக்குள்ளேயே பத்திரமாக வைத்துக் கொண்டு, ''நீ வாங்கி வந்த பூவையே உன் அக்காவின் தலையில் சூடி நீயே அழகு பார்த்துக் கொள்!'' என்று கிண்டலாகச் சிரித்தார்.

வசந்தி யோசனையுடன் மெல்ல ஜகந்நாதனை ஏறிட்டுப் பார்த்தாள்.

அதை ரசிப்பவர் போல் ஜகந்நாதன் அவளையே கண் கொட்டாமல் உற்றுப் பார்த்தபடி அழகாக ஒரு புன்முறுவல் பூத்தார்.

வசந்தி சட்டென்று தன் முகத்தை வேறு பக்கம் திருப்பிக் கொண்டாள். அதையும் ஜகந்நாதன் ரசித்தார்!

பிறகு அவர் அமைதியூட்டும் குரலில், ''வசந்தி! இந்தப் பூவில்தானே உனக்குத் தலைவலி ஏற்பட்டது? பொதுவாகப் பூ பாரத்தாலோ, தலைக் கனத்தாலோதான் தலை வலி உண்டாகிறது. இப்போது உனக்கு அந்தத் தலைவலி தீர்ந்து விட்டதல்லவா? இனி மேல் உனக்கு ஏதாவது தலை வலி தேவையென்றால் என் புத்தக அறைக்கு வா! பலருக்கு ஆவலை உண்டாக்கிய என்னுடைய புத்தகங்கள் அங்கு ஏராளமாக இருக்கின்றன!'' என்று சொல்லி விட்டு விர்ரென்று அவ்வறையிலிருந்து வெளியே போய் விட்டார்.

அவர் போன திசையையே வசந்தி தன் கருவிழிகளைச் சிறிதும் அசைக்காமல் வெறித்துப் பார்த்துக் கொண்டு நின்றாள்.

உமா தனது வலது கால் பேண்டேஜ் போடப்பட்டு மேலே தூக்கிக் கட்டப்பட்டிருக்கும் நிலையில் கட்டிலில் படுத்திருந்த வாறே தன் பார்வையைக் கட்டிலுக்கு அப்பால் நிற்கும் வசந்தியின் மீது செலுத்தி ஒரு பெருமூச்சு விட்டு விட்டு, ''வசந்தி! நம் டாக்டர் ஜகந்நாதன் ஒரு வேடிக்கையான மனிதர்! அவர் மற்றவர்களை யெல்லாம் தம்முடைய நாவலின் கதாபாத்திரங்கள் போல் பாவிக்கிறார். அதனால்தான் அவர் விசித்திரமாக நடந்து கொள்கிறார். அவர் சொல்வது எதையும் நீ அர்த்தப்படுத்திக் கொள்ளவோ, மனத்



தில் வைத்துக் கொள்ளவோ கூடாது'' என்று கூறினாள்.

''அது எனக்குப் புரிந்து விட்டதக்கா! அவர் ஒரு 'ஸினிக்'! எதையுமே நையாண்டி செய்பவர்!'' என்று வசந்தி சிரித்தாள்.

சிறிது நேரம் கழித்து நர்ஸிங் ஹோமின் ஒரு கோடியில் உள்ள புத்தக அறையில் டாக்டர் ஜகந்நாதன் தனியாக உட்கார்ந்து ஏதோ எழுதிக்கொண்டிருந்த போது வசந்தி மெல்ல அங்கு வந்து, ''டாக்டர் சார்!'' என்று குரல் கொடுத்தாள்.

''ஓ, வசந்தியா? அதற்குள் உன் கோபமும், சண்டைக் குணமும் பஞ்சாகப் பறந்து விட்டதா? அப்படித்தான் இருக்க வேண்டும்! பொய்க் கோபம்தான் பெண்களுக்கு அழகாக இருக்கும்! வா! வா!'' என்று உற்சாகமாக வரவேற்ற ஜகந்நாதன், ''உனக்கு மறுபடியும் ஏதாவது தலைவலி தேவையா?'' என்று வழக்கமான விஷமப் புன்முறுவலுடன் கண்களைச் சிமிட்டியபடி கேட்டார்.

''நான் தலைவலியைத் தேடி வரவில்லை!'' என்று வெடுக்கெனக் கூறிய வசந்தி, ''என் அக்காவைப் பற்றி உங்களிடம் விசாரித்துப் போகத்தான் வந்தேன்!'' என்றாள்.

''உன் அக்காவுக்கென்ன? நீ புதுமையின் பிறப்பிடம் என்றால் உன் அக்கா பழம்பெரும் பெண்மையின் பண்புகளுக்கெல்லாம் உறைவிடம்!''

''உங்களிடம் வர்ணனை வசனங்கள் கேட்க வரவில்லை, ரைட்டர் ஸார்!'' என்று சிணுங்கிய வசந்தி, ''என் அக்காவின் காலில் சிறு 'பிராக்சர்' தான் (முறிவு) ஏற்பட்டிருக்கிறது என்று சொன்னீர்களாமே?'' என்று ஆரம்பித்தாள் வசந்தி.

''அப்படிச் சொன்னால்தான் உன் அக்காவின் மனத்துக்கு ஆறுதலாகவும் தெம்பாகவும் இருக்குமென்று சொன்னேன்!''

''அப்போ ஸீரியஸா டாக்டர்...'' என்று பரபரப்புடன் கேட்ட வசந்தி அழுது விடுவாள் போல் தோன்றியது.

ஜகந்நாதன் சிரித்துக் கொண்டே, ''பயப்படாதே! உன் அக்கா சீக்கிரம் எழுந்து நடமாடுவதற்காக என் திறமையெல்லாம் காட்டி ஒரு விசேஷ முறையைக் கையாளப் போகிறேன்!'' என்றார்.

''என் அக்கா முன் போலவே நன்றாக நடக்க முடியுமல்லவா?''

''முடியா விட்டால்தான் நீ எனக்கு வெடி வைத்து விடுவாயே!''

''வெடி வைத்து விடுவேன் என்று என் அக்காவிடம் அல்லவா சொன்னேன்! அது உங்களுக்கு எப்படித் தெரிந்தது டாக்டர்? அக்காவே சொன்னாளா அல்லது உங்கள் நர்ஸுகளில் யாராவது வந்து உங்களிடம் கோள் சொன்னார்களா?''

''ஏன் நானேகூட ஒட்டுக் கேட்டிருக்கலாம்!''

''உங்களுக்கு அந்தப் பழக்கம்கூட உண்டா?''

''அது மட்டுமா? கோள் சொல்வது, சிண்டு முடிந்து விடுவது, சமயோசிதமாகப் புளுகுவது, முகஸ்துதி செய்வது முதலான எல்லாவிதக் கெட்ட பழக்கங்களும் என்னிடம் உண்டு! மனிதன் முன்னேறுவதற்கு அவையெல்லாம் இந்தக் காலத்தில் அவசியம்!''

''சார்! உங்களுக்கு 'செல்ப்-டினயல்' சற்று அதிகமாய் இருக்கு சார்!''

''அடேயப்பா பெரிய வார்த்தையாகப் போடுகிறாயே, ஸெல்ப் டினயல் என்றால் என்ன சொல்லு பார்ப்போம்.'' என்றார் ஜகந்நாதன். (தொடரும்)

மார்பில்
ஜலதோஷத்திற்கு
சிறந்தது

# அமிர்தாஞ்சனம்

10 மருந்துகள் கலந்த அமிர்தாஞ்சனம் வெகு துரிதமாகவும் பூரணமாகவும் நிவாரணமளிக்கிறது. ஒவ்வொரு முறையும் சிறிதளவே தேவைப்படுவதால் ஒரு பாட்டில் பல மாதங்களுக்கு வரும். 70 வருடங்களாகப் புகழ் பெற்ற அமிர்தாஞ்சனம், தசைவலி, சுளுக்கு, தலைவலி, மற்றும் எல்லா வலிகளுக்கும் ஜலதோஷத்திற்கும் கைகண்ட நிவாரணியாகும்.

சீதோஷ்ண நிலையில் ஏற்படும் மாறுதல்களாலும், அன்றாட அலுவல்களினால் மனதுக்கும் உடலுக்கும் ஏற்படும் சோர்வின் காரணத்தினாலும் வலிகளும் ஜலதோஷமும் ஏற்படுகின்றன. ஆகையால் எப்போதும் ஒரு பாட்டில் அமிர்தாஞ்சனம் வைத்திருப்பது நலம்.

**10 மருந்துகள் ஒருங்கே
சேர்ந்தது அமிர்தாஞ்சனம்**




ஞாபகமிருக்கட்டும். அமிர்தாஞ்சனம் இப்போது புதிய அட்டைப் பெட்டியில் வருகிறது. சீசாவினுள்ளே இருக்கும் அமிர்தாஞ்சனத்தின் இரட்டிப்பு பாதுகாப்புக்காக 'அலு-காப்' வில் வைக்கப் பட்டுள்ளது.

அமிர்தாஞ்சன் லிமிடெட்,
மதராஸ்-பம்பாய்-கல்கத்தா-புது டெல்லி



# 'சினிமா' பார்ப்போர் சங்கடம்

**"கதிர்"**

இரவு சினிமாவுக்குப் போய் விட்டு, நடு ராத்திரியில் வீடு திரும்புகிறவர்கள் சிலரை, சென்னை போலீஸ்காரர்கள் சந்தேகப்பட்டு வழி மறித்தாலும் வழிமறித்தார்கள். இதைப் பற்றித்தான் இப்போது எங்கும் பேச்சாகி விட்டது. இந்தப் பரபரப்பும் ஒரு விதத்தில் நல்ல பலனையே அளித்திருக்கிறது என்றால் ஆச்சரியமா யிருக்கும்! போலீஸ்காரர்கள் இப்படி சினிமா விட்டு வருபவர்களை நிறுத்தி விசாரிப்பதை வேடிக்கை பார்ப்பதற்காகப் பல இடங்களில் நகரவாசிகளும் இரவு தூங்காமல், ரோந்து சுற்றும் போலீஸ்காரர்களைத் தேடியவாறு சுற்றிக் கொண்டிருக்கிறார்களாம்! இதெல்லாம் நல்லதுதானே? போலீஸ்காரர்களும், தூங்காமல் நகர வாசிகளும் தூங்காமல் தெருக்களில் ஜன நடமாட்டம் இருந்து கொண்டேயிருந்தால் திருட்டுப் புரட்டும் குறையும் அல்லவா? ஓரளவு குற்றங்கள் குறைந்திருந்தாலும்கூட, இரவு சினிமாக் காட்சிகள் விஷயத்தில் போலீஸ்காரர்களின் சந்தேகம் குறைந்ததாகத் தெரியவில்லை. இதே மாதிரிதான் படம் முடிந்து வெளியே நடந்து வருபவர்களுக்கு வழியில் போலீஸ்காரர்கள் வழிமறிப்பார்களோ என்ற சந்தேகமும் நீங்கியபாடாக இல்லை. நேற்றிரவு ஒன்றரை மணிக்குச் சினிமாக் காட்சி முடிந்து வெளியே வரும் போது கந்தசாமிக்கு இந்தக் கலக்கம் ஏற்பட்டு, வீட்டுக்குப் போகாமல் தியேட்டர் பக்கமே விடியுமட்டும் இருந்து விடலாமா என்று தோன்றிற்று. ஆனால் இந்த யோசனையைச் சினிமாவுக்கு அவனை அழைத்து வந்த அவன் நண்பன் மிருதங்க வாத்தியக் கார மாணிக்கம் கேட்கவில்லை. மாணிக்கம் அங்கங்கே தெரு பஜனைகளுக்கு மிருதங்கம் வாசித்து, கிடைக்கும் சொற்பப் பணத்தைக் கொண்டும், தேங்காய் மூடிகளைக் கொண்டும் காலம் தள்ளுபவன். மாணிக்கம்தான் ஒரு கோவில்பக்கம், சந்தித்த கந்தசாமியைநிறுத்தி ''வா, அப்பா, இன்றைக்கு யானைக் கவுனியிலே படம் பார்த்து விட்டு வரலாம். படம் நன்றாக இருக்கிறதாம், 'தாய் வீட்டு மாமன்'!'' என்று அழைத்தான்.

''வேண்டாமப்பா, இப்போதுதான் 'ஓவர் டைம்' வேலை முடிந்த தொழிற்சாலையிலே யிருந்து களைப்பா வருகிறேன். இன்னொரு நாளைக்குப் போகலாம். மேலும் கையிலே துட்டும் மில்லை'' என்று மறுத்தான் கந்தசாமி.

'' துட்டு இல்லையானால் பரவாயில்லை, தம்பி. உனக்கு ஒரு எட்டணாதான் நான் தர மாட்டேனா? போகலாம் வா. படம் முடிந்ததும் நீ தேனாம்பேட்டைக்குப் போய் விடு. நான் அமிஞ்சிக்கரைக்குப் போய் விடுகிறேன்'' என்றான் மாணிக்கம்.

இருவரும் சினிமாத் தியேட்டருக்குச் சென்றார்கள். கீழ் வகுப்புக்குக் கூட்டம் ஏராளமாக இருந்தது. 'க்யூ' வரிசை ஒழுங்கு முறையெல்லாம் காற்றில் பறந்து டிக்கெட் கொடுக்கும் ஜன்னல் முன் ஒரே போராட்டம். இருவரையும் கூட்டம் கீழே உருட்டித் தள்ளி, சட்டை, கால் சட்டை யெல்லாம் கிழித்து அலங்கோலப்படுத்தி விட்டது. இருவருக்கும் முகமெல்லாம் காயமும், நெற்றியில் புடைப்புக்களும் ஏற்பட்டன. எவ்வாறோ, இந்தப் போராட்டத்தில் வெற்றி யடைந்து டிக்கெட்டுகளை வாங்கினான் மாணிக்கம். சினிமாவையும் பார்த்துவிட்டு இருவரும் வெளியில் வந்தார்கள். கந்தசாமியைக் கவலை வந்து சூழ்ந்து கொண்டது.

''நீ என்னமோ, சந்தோஷமா வீட்டுக்குப் போகப் போறே. உன் வீடு கிட்டத்திலே தான் இருக்கிறது. நான் போகணும் தேனாம்பேட்டை தாண்டி. இன்னைக்கு என் முகத்தையும், சட்டை டிராயர் கிழிந்து போன நிலைமையையும், போதாக் குறைக்கு நெற்றியிலே ஏற்பட்டிருக்கிற காயத்தையும், நடு வழியிலே ரோந்து போலீசுக்காரரு யாராவது பார்த்தால் கட்டாயம் பிடிச்சுக்கத்தான்போறாரு. இருட்டிலே பங்களா சுவர் தாண்டிக் குதிச்சு ஓடி வருகிற திருடனைப் போல் என் தோற்றம் காட்சி தருகிறது. இதை நினைத்தால்தான் என் மனசு 'திக்' 'திக்' என்கிறது!'' என்றான் கந்தசாமி.

''அதெல்லாம், ஒன்றும் பயப்படாதே, போப்பா! தலை மயிரை மட்டிலும் கொஞ்சம் படிய விட்டுக் கொண்டு தைரியமாகப் போ'' என்றான் மாணிக்கம்.

கந்தசாமிக்கு மட்டும் தைரியம் உண்டாகவில்லை. தயங்கியவாறே, திரும்பித் திரும்பிப் பார்த்துக் கொண்டு தேனாம்பேட்டை பெரிய சாலையில் நடந்து செல்லலானான். எங்கும், ஒரே நிசப்தமும், ஜன நடமாட்டம் இல்லாமலும் பேயறைந்தது போன்றிருந்தது. — கதீட்ரல் மாதா கோயில் பக்கம் அவன் வந்த போது அவனுடைய மனம் இன்னும் திக் என்றது. சாலையில் வரிசையாக மெர்க்குரி விளக்குகளும், அதன் ஒளியை மறைத்த வண்

ணம். இருபுறமும் மரங்களும் இலை வீசி நின்று கொண்டிருந்தன!

தேனாம் பேட்டையைத் தாண்டி, காலாடிகள் அதிகமாக நடமாடும் இடம் என்று கூறப்படும் பனகல் புரம் வரும் போது, சற்றுத் தூரத்தில் ஒரு மதகு மீது உட்கார்ந்து கொண்டிருந்த போலீசு உருவம் ஒன்றை அவன் கண்கள் பார்த்ததன் விளைவாகக் கால்கள் பின்னிக் கொண்டன. நடையில் ஏற்பட்ட மாற்றத்தைச் சமாளித்துக் கொண்டு மதகுமீது உட்கார்ந்திருந்த போலீசு உருவத்தைப் பார்க்காதது போல், வேகமாக நடந்து சென்றான். ஏளனமாக ஒரு சிரிப்புச் சிரித்தது அந்தப் போலீசு உருவம், அவனைப் பார்த்து. அவருடைய பற்களைக் காணக் கந்தசாமிக்குப் பயமா யிருந்தது.

"என்ன, அண்ணாச்சி ! நம்பளை கவனிக்காமலே போறீங்களே! வாங்க இப்படி!" என்று அருகில் அழைத்தான் கான்ஸ்டேபிள் துரைக் கண்ணு மதகில் உட்கார்ந்தபடியே.

"என்னையா, சார்....!" என்று நடுங்கிய வாறே இழுத்தான் கந்தசாமி.

"ஆமாம், அண்ணாச்சி ! வாங்க, இப்படி! உங்களைத்தாங்க.... சும்மா வாங்க... பேசாமலே, பார்த்தும் பார்க்காதது போலப் போறீங்களே!" என்று துரைக்கண்ணு, கூறிவிட்டு, தலையிலிருந்த சிவப்புக் குல்லாயைக் கழற்றிக் கையில் வைத்துக் கொண்டான்.

கந்தசாமி ஒன்றும் பேச முடியாமல் திணறிவிட்டு, "ஒண்ணுமில்லே... சார்..!" என்று ஏதோ சொல்ல முயன்றான்.

"எங்கே அப்பா தம்பி போறே?" தொடர்ந்தார் போலீஸ்காரர்.

"வீட்டுக்கு சார்!"

"எங்கே போயிட்டு, இந்த நேரத்திலே வீட்டுக்குப் போறே? பாவம், வீட்டிலே இருக்கிறவங்களுக்கு எவ்வளவு கஷ்டம். நீ வரவில்லையே, போன மகனைக் காண வில்லையே என்று எல்லோரும் தவிச்சுட்டு இருப்பாங்க."

" சும்மா, சினிமாவுக்குப் போயிட்டுப் போறேங்க !"

"அப்படித்தானே இருக்கணும். வேறே இந்த நேரத்திலே மாமியார் வீட்டுக்கா போயிட்டு வருவாங்க. அது போகட்டும் அண்ணாச்சி பேரு என்ன?"

"கந்தசாமி!"

"எங்கே வீடு?"

"பனகல்புரம் அம்மன் கோவிலண்டை, நடேச மேஸ்திரி தெருவுங்க.....! வீட்டு நம்பர் பதினாறுங்க!"

"நிசந்தானா?"

"நிஜந்தான் சார்!"

"எந்தச் சினிமாவுக்கு? எங்கே?"

"யானைக்கவுனியிலேங்க. சபாபதி தியேட்டரிலே நடக்கிற படம் பார்த்து விட்டுத்தான் வர்றேங்க !"

"அவ்வளவு தூரம் போய்ப் படம் பார்ப்பானேன்? ஏங்க அண்ணாச்சி? உன் சட்டையெல்லாம் கிழிஞ்சு கிடக்கிறதே! முகத்திலே கூட, எங்கே இப்படித் திரும்பு.....காயம் பட்டிருக்கிறதே...என்ன சங்கதி அப்பா? யாராவது துரத்தி அடிக்க, நீ தப்பிச்சு ஓடி வந்தாயா? சொல்லி விடு, அப்பா நிஜத்தை..."

"யாரும் துரத்தவும் இல்லே ஒண்ணுமில்லே சார் இன்றைக்குத் தியேட்டரிலே, டிக்கெட் வாங்கிற இடத்திலே பாருங்க, ஒரே கூட்டம்! ஒருத்தரை ஒருத்தர் மேலே தள்ளி முண்டியடிச்சுட்டதிலே, இப்படியாச்சுங்க — சார்! சட்டையெல்லாம் ஒரே போடா கிழிஞ்சுட்டுதுங்க!"

"அதென்னப்பா, அவ்வளவு கூட்டமா, ஒரு படத்துக்கு? அது என்ன படமப்பா ?"

"அதாங்க, 'தாய் வீட்டு மாமன்!'"

"சரி, சரி. அப்போ சரி! ரொம்பக் கூட்டம்னுதான் சொல்றாங்க."

"ஆமாம், சார்! பின்னே, நான் போகட்டுங்களா, சார்!"

"போகலாம், இரு அப்பா! அவசரப்படுறியே....... 'தாய் வீட்டு மாமன்' பார்த்தாய் நீ, இல்லையா?"

"ஆமாம், பார்த்தேன் சார். இதோ வேண்டுமானாலும் பாருங்க, டிக்கெட்டினுடைய 'அவுட் பாஸ்' வைத்திருக்கிறேன். உங்களுக்கு நம்பிக்கை யில்லேன்னா பாருங்க!" என்று கூறிவிட்டு, கந்தசாமி தனது கையிலிருந்து ஒரு துண்டுச் சீட்டை எடுத்துக் காட்டினான்.

"இந்த அவுட் பாஸ் காகிதத் துண்டைப் பார்த்து நாங்க நம்பி விடுவோமா? இதே மாதிரி துண்டுச் சீட்டுகள் தியேட்டர் வாசலிலே எவ்வளவோ பொறுக்கி எடுத்து வரலாமே தம்பி! இதை யெல்லாம் நீயே வைச்சுக்க. படம் பார்த்தது உண்மையானால், எங்கே கதையைச் சொல்லு, பார்க்கலாம்!"

"ஓ! சொல்றேன், கேளுங்க..ஆனால்... நான் கதை சொல்வது சரியாக



ருக்கா, இல்லையா என்று உங்களுக்கு எப்படித் தெரியும் சார்? நீங்கள் இந்தப் படம் பார்த்திருக்கிறீங்களா ?''

''பார்த்தேன், பார்க்கவில்லை. அதைப் பற்றி உனக்கென்ன? நீ கதையைச் சொல்! அதெல்லாம், நான் மந்திர சக்தியால் கண்டு பிடித்துக் கொள்வேன். கதையை ஆரம்பி'' என்று தூண்டினான் துரைக்கண்ணு.

''சரி, நல்லது சார். தாய் மான் தங்க ராஜு முதலியாரு ஒரு வியாபாரி. வியாபாரத்திலே நஷ்டம் ஏற்பட்டு விடுகிறது. நிறையப் பணம் சம்பாதிக்கச் சுருக்கு வழி, எலக்ஷன்லே நின்று உதவி பெறலா மென்று நினைத்துக் கிராம சேவையில் இறங்குகிறாரு. அப்படியே கதர் ஜிப்பா வெல்லாம் போட்டுக் கொண்டு படிப் படியாகத் தன்னை விளம்பரப் படுத்திக் கொண்டு எலக்ஷனிலேயும் ஜயிக்கப் புடறாரு. லட்சக் கணக்கில் 'பிளாக்'கிலே பணம் பண்ணி இரும்புத் தொழிற்சாலையின் அதிபராயிடறாரு......!''

''ஹம்.... சரி..... மேலே!'' என்று ஊக்கிக்கொண் டிருந்தார் துரைக்கண்ணு. கந்தசாமியும் உற்சாகமாகக் கதையைச் சொல்லி முடித்தான்.

''சபாஷ், ரைட்டு தம்பி, கதை சரிதான்! அப்புறம்?''

''அப்புறம் என்ன சார், படம் முடிஞ்சு போயிட்டது..... நான் வீட்டுக்குப் போகலாமா சார்?''

''போகலாம் அப்பா, இரு போகலாம். அவசரப்படுறியே 'அம்முணுச்சி' மனேஜராக நடிச்சது யாரு?''

''அவருதான் சார், ஸ்டண்டு சம்பத்து!''

''சரி, ஜயந்தியாக...?''

''இந்திர குமாரிங்க சார்!''

''ரைட்டு.... கோபால் வீட்டு வேலைக் காரியாக வருகிறதே. அது யாரு.... எங்கே இதையும் சொல்லி விடு, பார்க்கலாம்....!''

''அந்த வேலைக்காரிதானுங்களே.... அது தான் ரத்தினகுமாரி.....!''

''என்ன ரத்தின குமாரியா....?''

''ஆமாம், சார். ரத்தின குமாரியேதான்!''

''கிடையாது. தப்பு.... தப்பு.. அது யாரோ ஒரு எக்ஸ்ட்ரா!''

''ரத்தின குமாரியேதான் சார். வேலைக் காரியா ஆக்டு பண்ணியிருக்கு. இதோ நீங்க வேணும்னு பாருங்க. பாட்டுப் புஸ்தகத்திலே கூட அதன் பெயரைப் போட்டிருக்காங்க!'' என்று கூறி விட்டுக் கந்தசாமி தனது கால் சட்டைப் பையிலிருந்து ஒரு புத்தகத்தை எடுத்து அதில் ஒரு பக்கத்தைப் பிரித்துக் காட்டினான்.

மெர்க்குரி விளக்கொளியில் அதை உற்றுப் பார்த்தான் கான்ஸ்டேபின் துரைக்கண்ணு. பார்த்து விட்டு, 'சரிதான் தம்பி, சரிதான்...; ரத்தின குமாரின்னு போட்டிருக்கு!'' என்று தலையை அசைத்தான்.

''அப்புறம் என்ன சார்? நான் போகலாமா வீட்டுக்கு?'' என்று நயந்தவாறே கேட்டான் கந்தசாமி.

''வீட்டுக்கா? அதுக்குள்ளேயுமா? என்னை மட்டும் இங்கே தனியா விட்டு விட்டு நீ மட்டும் போகலாமாப்பா...... அது நியாயமில்லே, பாரு..... ஆசையினாலே நான் சொல்லு கிறேன் கேளு. என்னோட போலீஸ் ஸ்டேஷ னுக்கு வா. அங்கே 'ஏட்டு' இருப்பாரு. நல்லவரு, அப்பா அவரு நல்லவரு. அவரு கிட்டே நீ வந்து போயிட்டு வரேன்னு சொல் லிக்கிட்டுப் போகலாம். அதுதான் மரியாதை. வா, என் கூட!'' என்று கான்ஸ்டேபின் கூறவும், கந்தசாமிக்கு அச்சம் தலைக்கேறியே விட்டது.

''என்ன சார், நான் இவ்வளவு சொல்லி யும் என் மீது உங்களுக்கு நம்பிக்கைப்பட வில்லையா? போலீஸ் ஸ்டேஷனுக்கு வரச் சொல்றீங்களே!''

''நம்பிக்கை யில்லாமல் போக வில்லை. ஆனால் அந்த ஏட்டு ஒரு மாதிரி மனுசன். யார் என்ன சொன்னாலும் நம்ப மாட்டாரு. நீதான் நேரிலே வந்து சொல்லிக் கொள் !'' என்று கூறி விட்டு, கந்தசாமியை அன்பு அணைப்புப்போல் அணைத்தவண்ணம் பனகல் புரம் போலீஸ் ஸ்டேஷனை நோக்கி நடந்தான் துரைக் கண்ணு.

பனகல் புரம் போலீஸ் ஸ்டேஷன் மங்க லான விளக்கொளியில் பாசி படிந்த நிறத்தில் காட்சி தந்து கொண்டிருந்தது. மேஜை மீது கால்களை நீட்டியவாறு நாற்காலியில் சாய்ந்து



கொண் டிருந்த ஹெட் கான்ஸ்டபிள் பாஷ்யம் நாயுடு, தூக்கம் பிடிக் காமல் தனக்குத் தொல்லை யளித்து வந்த கொசுக்களை அடிக்கடி கையால் விரட் டிக் கொண் டிருந்தார். திடீரென்று காலடிச் சத் தம் கேட்டு எழுந்து உட் கார்ந்து வாசற்புறம் பார் வையைச் செலுத்தினர் 'ஏட்டு'. யாரோ ஒரு பேர்வழியை அழைத்துக் கொண்டு, கான்ஸ்டேபிள் துரைக்கண்ணு வருவ தைக் கவனித்து விட்டுத் தொண்டையைக் கனைத் துக் கொண்டார். பிறகு, கந்தசாமியை ஒரு மாதிரி யாக உற்றுப் பார்த்து விட்டு, "என்னப்பா, 'டு நாட் திரீ டு' என்ன சங்கதி அப்பா?" என்று கான்ஸ்டேபிள் துரைக் கண்ணுவை வினவினர்.

"நான் சொன்னல் நம் பலே மாட்டேன்னு கூறினீங்களே, இந்த ஆளை விசாரிங்க. எந்தச் சினிமாவுக்குப் போயிட்டுவரேன்னு கேளுங்க!" என்று கூறினன் கான்ஸ்டேபிள்.

"எந்தச் சினிமாவுக்குப் போயிட்டு வரே?" என்று கேட்டார் ஏட்டு.

கந்தசாமி மிரண்டவாறே, "தாய் விட்டு மாமன் சினிமா பார்த்து விட்டு வரேனுங்க!" என்றான்.

கான்ஸ்டேபிள் துரைக்கண்ணு மறுபடியும், ஏட்டு பாஷ்யம் நாயுடுவைப் பார்த்து, "அந்தப் படத்திலே வேலைக்காரியாக ஆக்டு பண்ணுதே அது யாருன்னு கேளுங்க!" என்று கூறினன்.

"யாரப்பா ஆக்டு பண்ணுது?" என்று கேட்டார் ஏட்டு.

"ரத்தின குமாரி சார்!" என்றான் சற்று தைரியமடைந்த குரலில் கந்தசாமி.

"என்ன?...." என்று கேட்டார் ஏட்டு.

"ஆமாம், ரத்தின குமாரிதான் சார்!" என்றான் கந்தசாமி.



நடிகை: உங்க பத்திரிகைக்கு எனது வசீகரப் படம் வேணும்னு சொன்னீங்களே. இதோ..... டிரஸ் பண்ணிட்டு வந்துட்டேன்! போட்டோ எடுத்துக்குங்கோ!

"இப்போ என்ன சொல் றீங்க?" என்று கான்ஸ் டேபிள் துரைக் கண்ணு, 'ஏட்'டைப்பார்த்து வினவி விட்டு, "நான் படிச்சுப் படிச்சு ரத்தின குமாரி தான்னு நேற்றுச் சொன் னேன். இல்லவே இல்லே, அவள் நடிப்பை விட்டே இரண்டு வருடம் ஆகி விட்டது. யாரை வேண்டு மானுலும் கேட்டுப் பாரு. இந்தப் படத்திலே அவள் வேலைக்காரியாக நடிக்கவே இல்லே. பந்தயம் வேண்டு மானலும் ஒரு ரூபாய் கட்டத் தயார்' என்று கூறி, 'பெட்டு' கட்டினீங்களே! இப்போ என்ன சொல்றீங்க. எடுங்க, ஒரு ரூபாயை!" என்று ஆரவாரம் செய் தான் கான்ஸ்டேபிள் துரைக்கண்ணு.

"ஆமாம், சார், கான்ஸ் டேபிள் ஐயா சொல்றது தான் சரி. பாட்டுப் புஸ்த கத்திலே கூட ரத்தின குமாரின்னுதான் போட்டிருக்கிறது. இதோ பாருங்க நீங்க ளே!" என்று கூறிக் கந்தசாமி தனதுசட்டைப் பையிலிருந்த பாட்டுப் புத்தகத்தை எடுத்து ஏட்டு முன்னல் நீட்டினன்.

"உம்.... எடுங்க, சார், ஒரு ரூபாயை இப்படி!" என்று 'டு நாட் திரீ டு' துரைக் கண்ணு மேஜையைத் தட்டியதும், ஏட்டு பாஷ்யம் நாயுடு ஒரு ரூபாய் நோட்டை எடுத்து மேஜை மீது வீசினர்.

"அப்படி வாங்க வழிக்கு!" என்று கூறி விட்டு அந்த நோட்டை எடுத்துக் கொண்டு கந்தசாமியைப் பார்த்து, "வா, தம்பி! உன்னல் எனக்கு ஒரு ரூபாய்ப் பந்தயப் பணம் கிடைத்தது. எங்கேயாவது போய் டீ சாப்பிடலாம். அப்புறம் நீ வீட்டுக்குப் போக லாம்!" என்று கூறினர்.

"என்னத்துக்கு சார், டீ காப்பி வேல் லாம்!" என்று நகைத்தவாறு கந்தசாமி கான்ஸ்டேபிள் துரைக் கண்ணுவைப் பின் தொடர்ந்து சென்றான்!

# ஒரு நல்ல தோழன்




ஓர் ஆக்பா ஸிங்க்ரோ பாக்ஸ் காமிரா மூலம் நீங்கள் ஒரு நல்ல தோழனின் எல்லா நற்குணங்களையும் அனுபவிக்க முடியும் வலுவுள்ளதாலும், நம்பகமானதாலும் ஆக்பா ஸிங்க்ரோ பாக்ஸ் காமிராவை நீங்கள் போகுமிடமெல்லாம் கொண்டு செல்லலாம். அதன் கொக்கியை அழுத்திய மாத்திரத்திலேயே பிக்னிக் காட்சிகளையும், உல்லாசப் பயணங்களையும், மகிழ்ச்சியளிக்கும் குடும்பக் காட்சிகளையும் அது பிரமாதமாகப் படம் பிடித்துவிடுகிறது.

ஜெர்மன் ஆக்பாவைப் புகைப்படத் தொழிலில் உலகப் புகழ்பெற்றதாகச் செய்த அதே தொழிலியல் திறனுடன் ஆக்பா ஸிங்க்ரோ பாக்ஸ் காமிரா இப்போது இந்தியாவில் தயாரிக்கப்படுகிறது. விலை ரூ. 36/- உள்ளூர் வரி தனி.




ஏகபோக விநியோகஸ்தர்கள்:

**ஆக்பா இந்தியா லிமிடெட்**

பம்பாய் • நியூ டில்லி • கல்கத்தா • மதராஸ்

# உங்கள் நினைவுடன் செய்த புதிய மெர்ரிட்* ஸ்டைல்-ஆர்ம்

**நவீன அமைப்போடு நேர்த்தியாக வேலை செய்யக்கூடியது**

இதன் நவீன மிடுக்கான தோற்றத்தை நீங்கள் பெரிதும் விரும்புவீர்கள்... மிகவும் எளிதாக கடினமின்றி தைக்கக்கூடிய புதிய மெர்ரிட் ஸ்டைல் ஆர்ம் கண்ணைக்கவரும் இரண்டு டோன் பழுப்பு அல்லது சாதாரண கருப்பு நிறங்களில் கிடைக்கும். மெர்ரிட் ஸ்டைல்-ஆர்ம் எல்லா வகையிலும் அலங்காரத் தோற்றமளிக்கிறது...சிறந்த கவனத்துடன் மெர்ரிட்டிற்கே உரிய வேலைப்பாடுகளுடன் கூடியது. தனிப்பெருஞ் சிறப்புகளுடன் தயாரிக்கப்பட்டுள்ளது.

---

**...ஸிங்கரின்* சிறப்புகளுடன் தரம் குறையாது தயாரிக்கப்பட்டது. விற்பனைக்குப் பின் உடனடியாக வழங்கப்படும் தவறாத சேவை.**

புதிய இலக்கமிட்ட டென்ஷன் ரெகுலேடர்

சீர்திருத்தி செம்மையாக்கப்பட்ட புதிய லாக்கிங் தையல் ரெகுலேடர்









ஹிந்தி "மாயா"
பத்திரிகையில்
திரு சிட்சார்த்தியின்
கேலிச் சித்திரங்கள்







# “கொஞ்ச நேரம் வேலை செய்வதற்குள் இத்தனை களைப்பா?”



## இல்லை, இல்லவே இல்லை !

நான் போர்ன்-விடா சாப்பிடுகிறேன்.
தினசரி இரண்டு கப் சாப்பிடுகிறேன்.
போர்ன்-விடா அளிக்கும் சக்தியினால்
நான் முழுவதும் களைப்பின்றி
வேலை செய்கிறேன்.

# BOURN-VITA

சக்திக்கும் வலிமைக்கும்






தயாரிப்பாளர்கள்:

Cadbury's

# பொன் விலங்கு

மணிவண்ணன்



## நாற்பத்தொன்பதாவது அத்தியாயம்

இன்ஸ்பெக்டர் சத்தியமூர்த்தியை 'அரெஸ்ட்' செய்து கொண்டு போக வந்திருப்பதாய்க் கூறினார். ''என்ன காரணத்துக்காக என்னை அரெஸ்ட் செய்ய வந்திருக்கிறீர்கள்?'' என்று சிறிதும் பதறாமல் நிதானமாக அவரை வினவினான் சத்தியமூர்த்தி. இன்ஸ்பெக்டர் காரணத்தைக் கூறியபோது, 'நீ விவரந் தெரியாம நெருப்போடு விளையாடிக்கிட்டிருக்கிறே! உன்னை உள்ளே தள்ளிக் கம்பி எண்ண வச்சுப்பிடுவேன், தெரியுமா?' என்று முன் தினம் ஜமீன்தார் தன்னைக் கூப்பிட்டு மிரட்டியிருந்ததைச் சத்தியமூர்த்தி நினைவு கூர்ந்தான். தம்முடைய பயமுறுத்தலை ஜமீன்தார் இப்போது இப்படி நிரூபித்து விட்டார் என்று அவனுக்குப் புரிந்தது. 'பண பலமும் அதிகார பலமும்—நியாயத்துக்கு எதிராய் எப்படி எப்படி வலுவாக எதிர்த்துக்கொண்டு வந்து நிற்கின்றன?' என்பதை நினைத்தபோது அந்தக் கணத்தில் சத்தியமூர்த்திக்கு இந்த உலகத்தின் மேல் கோபம் வரவில்லை. சிரிப்புத்தான் வந்தது. 'திரைப் படங்களிலும், நாவல்களிலும்தான் கதாநாயகர்களுக்கு எதிராக அளவு மீறிக் கெடுதல் செய்கிற கொடியவர்கள் வருவார்கள்' என்று அடிக்கடி வேடிக்கையாகச் சொல்வான் குமரப்பன். வாழ்க்கையில் கண்ணெதிரிலேயே அப்படிப்பட்ட கொடியவர்கள் உண்டு என்பதை மஞ்சள் பட்டியார் இப்போது நிதரிசனமாகக் காண்பித்து விட்டார்.

குமரப்பன் அங்கு வந்திருந்த போலீஸ் இன்ஸ்பெக்டரோடு எவ்வளவோ வாதாடிப் பார்த்தான். இன்ஸ்பெக்டர் சத்தியமூர்த்தியை 'அரெஸ்ட்' செய்தே ஆக வேண்டுமென்று பிடிவாதமாகக் கூறினார். அவசியமானால் குமரப்பன் போலீஸ் ஸ்டேஷனுக்கு உடன் வந்து ஜாமீனில் சத்தியமூர்த்தியைத் திருப்பி அழைத்துக் கொண்டு போகலாமென்று அந்த இன்ஸ்பெக்டர் விரைவாகப் பேச்சை முடித்துக்கொண்டு புறப்படத் தயாராகி விட்டார். போலீஸ்காரர்கள் புடைசூழ இன்ஸ்பெக்டருக்குப் பின்னால் விலங்கு மாட்டப்படாத கைதியாய் — ஆனால் அதே சமயத்தில் உடம்பின் ஒவ்வொரு பகுதியிலும் — பல்லாயிரம் விலங்குகள் விழுந்து அழுத்தி உறுத்துவதைப் போன்ற கூச்சத்தோடு சத்தியமூர்த்தி படியிறங்கி நடந்துசென்றபோது மல்லிகைப் பந்தலின் அழகிய வீதிகளில் பொழுது நன்றாக விடிந்திருந்தது. மனிதர்கள் நடமாடத் தொடங்கியிருந்தார்கள். செய்யாத குற்றத்துக்காக அநியாயப் பழி சுமத்தப்பெற்றுப் போலீஸ்காரர்களுக்குப் பின்னால் நடந்து போய்க் கொண்டிருந்தாலும் தன் மேல் பொய்யாகக் குற்றம் சுமத்தி விட்ட இந்த உலகத்தை நிமிர்ந்து பார்க்க மன விருப்ப



யில்லாமல் வெறுத்தாற் போல் தலை குனிந்து சென்று கொண்டிருந்தான் சத்தியமூர்த்தி. ஜாமீன் கொடுத்துத் திரும்ப அழைத்துக் கொண்டு வருவதற்காகப் பின்னால் சென்று கொண்டிருந்த குமரப்பனோடு ராயல் பேக்கரி-ரொட்டிக் கடை நாயரும், அறையில் உடனிருந்த தாவர இயல் விரிவுரையாளர் சுந்தரேசனும் கூடச் சென்றார்கள். மல்லிகைப் பந்தலைப் போல் சிறிய நகரம் ஒன்றில் பலருக்கு அறிமுகமான கல்லூரி விரிவுரையாளர் ஒருவரைப் போலீஸ்காரர்கள் தெரு வழியே அழைத்துக் கொண்டு போனால் மக்கள் எவ்வாறு பரபரப்பாகக் கூடி நின்று கவனிப்பார்களோ அப்படிக் கவனிப்பதற்குச் சத்தியமூர்த்தியும் அன்று பாத்திரமானான். இவ்வாறு போலீஸ்காரர்களால் அவன் தெரு வழியே அழைத்துக் கொண்டு போகப்படும் காட்சியைக் கண்டவர்களில் சில மாணவர்களும் இருந்தார்கள். மாணவிகளும் இருந்தார்கள்.

> **பொன் [illegible]**
>
> தங்களுடைய சொந்தப் பலத்தை நியாயத்துக்கு எதிராகவும் கூடப் பரிசோதித்துப் பார்க்க வேண்டுமென்கிற ஆசை உள்ளவர்களால் வெற்றி கிடைக்கிறவரை சூதாட்டத்தைப் போன்ற அந்த ஆசையை இழக்கவே முடியாது

மல்லிகைப்பந்தலைப் போன்ற சிறிய ஊரில் கல்லூரி மாணவர்களின் வேலை நிறுத்தத்திலிருந்து காய்கறிக் கடை வாசலில் நடைபெறுகிற சிறிய பூசல் வரை எதுவுமே இரகசியமாக இருக்க முடியாது. நல்ல வேளையாக அந்த ஊரிலிருந்து தினசரிப் பத்திரிகைகள் எதுவும் பிரகரித்து வெளியிடப்படுவதில்லை. தினப் பத்திரிகை இருந்திருந்தாலோ, 'விடுதிக்கு நெருப்பு வைக்கும்படி மாணவர்களைத் தூண்டியதாகத் தமிழ் விரிவுரையாளர் கைது' என்று சாயங்காலப் பதிப்பிலேயே கொட்டை எழுத்துக்களால் அச்சிட்டு முதற் பக்கத்தில் தலைப்பிலேயே வந்து விடும். அத்தனை அவசரமாகச் செய்தி எங்கும் பரவி விட்டது. சத்தியமூர்த்தியும் உடன் வந்தவர்களும் போலீஸ் ஸ்டேஷன் இருந்த சாலையை நெருங்கிவிட்ட சமயத்தில் அந்த நிலையில் அங்கே சந்திப்பதற்கு மனம் கூசக் கூடிய ஒருத்தியைச் சத்தியமூர்த்தி எதிர்பாராமல் அங்கே சந்தித்து விடும்படி நேர்ந்தது. மல்லிகைப் பந்தல் போலீஸ் ஸ்டேஷனுக்குப் போவதற்காகக் கீழ் நோக்கி இறங்குகிற மலைச் சாலையும், சற்றே மேடான இடத்தில் உள்ள பூபதியின் பங்களாவுக்காக மேல் நோக்கி ஏறுகிற மலைச் சாலையும் 'வி' என்ற ஆங்கில எழுத்தைச் சாய்த்து வைத்தாற்போல் அருகருகே இருந்ததனால், தந்தையை இழந்த துக்கத்தில் வீட்டிலேயே அடைபட்டுக் கிடந்து விட்டு நீண்ட நாட்களுக்குப் பின்பு வீட்டிலிருந்து காரில் எங்கோ புறப்பட்ட பாரதி — கீழ்ப்புறத்துச் சாலையில், போலீஸ்காரர்கள் புடை சூழச் சத்தியமூர்த்தி செல்வதைப் பார்த்து விட்டாள். அவனும் அவளுடைய காரைப் பார்த்தான். உடனே டிரைவரிடம் காரை நிறுத்தச் சொல்லி விட்டுத் துடிக்கும் நெஞ்சுடன் பாரதி கீழே இறங்கி நின்று பார்த்தான்.

''இவரு ஏதோ பையன்களைத் தூண்டி விட்டு ராத்திரியோடு ராத்திரியா.... ஹாஸ்டலுக்கு நெருப்பு வச்சிட்டாராம். அதுனாலே ஜமீன்தார் ஐயா தான்.... போலீஸிலே சொல்லி ஆளை உள்ளார வைக்கிறதுக்கு ஏற்பாடு பண்ணியிருக்கிறாரு'' என்று அவள் கேட்காமலே தானாகச் சொல்லத் தொடங்கினான் உடன் இருந்த டிரைவர். இதைக் கேட்டுப் பாரதியின் நெஞ்சு வேகமாக அடித்துக் கொண்டது. கீழே வளைவாகச் சரிந்து இறங்கும் செம்மண் சாலையில் நோக நோக நடந்து செல்லும் சத்தியமூர்த்தியின் பொன்னிறப் பாதங்கள் மேற்புறத்துச் சாலையிலிருந்து பார்த்துக் கொண்டிருந்த அவள் கண்களுக்கு நன்றாகத் தெரிந்தன. நெடு நாட்களுக்குப் பின்பு அந்தப் பளிங்கு நிறப் பாதங்கள் அவளுக்கு இன்று காட்சி கொடுத்தன. அவள் நின்ற இடத்திலிருந்து அவனை நன்றாகப் பார்க்க முடிந்தது. அவனுடைய நடையில் அதே பழைய கம்பீரமும் பெருமிதமும் இருந்தன. ஆனால் பொய்யும் அநீதியும் மலிந்து விட்ட இந்த உலகத்தை நிமிர்ந்து பார்க்கக் கூசினாற் போல் அவனுடைய தலை மட்டும் சற்றே தாழ்ந்து கீழ் நோக்கிக் குனிந்திருந்தது. அவனுடைய கைகளும், கால்களும் படுகிற இடமெல்லாம் ரோஜாப் பூப் பூத்துக் கொட்டுவதாகத்தான் முன்பு ஒரு சமயம் அவள் கற்பனை செய்திருக்கிறாள். கல்லூரி விடுதிக்கு நெருப்பு வைக்க அவனுடைய கைகள் தூண்டியிருக்க முடியுமென்று இன்று அவளால் நினைப்பினுள் கற்பனை செய்யவும் முடியவில்லை. தந்தையின் மரணத்துக்குப் பின் பல நாட்களாக அவள் கல்

லூரிக்கே போகவில்லை. அதனால் கல்லூரி நடைமுறைகள் எதுவும் அவளுக்கு விவரமாகத் தெரிய வழியில்லாமல் போய் விட்டது. மஞ்சள்பட்டி ஜமீன்தாரும், கல்லூரி முதல்வரும் அடிக்கடி கல்லூரி நிர்வாக சம்பந்தமாக வீட்டில் சந்தித்துப் பேசிக் கொள்வதைத் தானும் அதே வீட்டில் இருந்ததன் காரணமாகச் சில சமயங்களில் பாரதி கண்டிருக்கிறாள். சத்தியமூர்த்திக்கும் கல்லூரி நிர்வாகத்தினருக்கும் நல்ல உறவு இல்லாமல் முறிவு ஏற்பட்டிருக்கிறது என்பதும், விடுதி மாணவர்களும், பிறரும் சில நாட்களாக வேலை நிறுத்தம் செய்திருக்கிறார்கள் என்பதும் ஒருவாறு அவளுக்குத் தெரிந்திருந்த உண்மைகள்தான். ஆனால் அந்த உண்மைகளின் விளைவு இவ்வளவு பயங்கரமாக மாறிச் சத்தியமூர்த்தியைப் போலீஸ் ஸ்டேஷன் வரை இழுத்துக் கொண்டு போய் விடும் என்று அவள் கனவிலும் எதிர்பார்த்ததில்லை. கல்லூரி முதல்வருக்கும் — சத்தியமூர்த்திக்கும் அடிநாளிலிருந்தே நல்ல உறவு இல்லை என்பது அவளுக்குத் தெரியும். தன் தந்தை இருந்த வரை முதல்வருடைய இடையூறுகளைப் பொருட்படுத்தாமல் அவரே சத்தியமூர்த்தியை நேரடியாகக் கவனித்து அன்பாக நடந்து கொண்டது போல் மஞ்சள்பட்டி ஜமீன்தார் நடந்து கொள்ள மாட்டார் என்பதையும் தனக்குத் தானே அநுமானித்து உணர்ந்து கொண்டிருந்தாள் பாரதி. மேற்பக்கத்துச் சாலையில் வேகமாகத் திரும்பிக் கீழிறங்கிக் கொண்டிருந்த கார் நின்றதையும் — காரிலிருந்து அவள்வெளியே இறங்கிப் பரபரப்பாகத் தன்னைக் கவனித்ததையும் சத்தியமூர்த்தி கண்டிருந்தான். ஆனால் போலீஸ் ஸ்டேஷன் நெருங்கி விட்டதன் காரணமாக நின்று நிதானித்து அவளை நிமிர்ந்து பார்க்க நேரமும் விருப்பமும் இல்லாமல் போய் விட்டது அவனுக்கு. தன்னை அந்தக்கோலத்தில் அந்த நிலையில் போலீஸ்காரர்கள் புடைசூழப் போலீஸ் ஸ்டேஷனுக்கு அருகில் பார்த்ததும் அவள் என்ன நினைத்துக் கொண்டு செல்வாள் என்று மனத்துக்குள் சிந்தித்துப் பார்க்கக்கூட அப்போது அவனுக்கு நேரமில்லை. போலீஸ்காரர்களும், இன்ஸ்பெக்டரும், அவனும், அவனோடு கூட வந்தவர்களும் ஸ்டேஷனுக்குள் நுழைந்து விட்டார்கள். தெருவில் அங்கங்கே நின்று பார்த்துக் கொண்டிருந்த மாணவர்கள் மற்ற மாணவர்களுக்குச் சொல்லி மற்ற மாணவர்கள் இன்னும் வேறு சில மாணவர்களுக்குச் சொல்லி — அதன் பயனாகப் போலீஸ் ஸ்டேஷன் வாயிலில் பெருங்கூட்டம் கூடி விட்டது. வெகு நேரம் மேற்கொண்டு என்ன செய்வதென்று கையும் காலும் ஓடாமல் மேலே உள்ள சாலையில் காரருகே நின்றபடி போலீஸ் ஸ்டேஷன் வாயிலையே வெறித்துப் பார்த்துக் கொண்டிருந்தாள் பாரதி. தன்னையறியாமலே அவளுக்குக் கண் கலங்கி விட்டது. சத்தியமூர்த்தி தன்னிடம் பாராமுகமாக இருக்கிறான் என்றும், தன்னுடைய அன்பைப் புரிந்து கொள்ளாமல் விலகி விலகிப் போகிறான் என்றும் அவனைப் பற்றி அவள் மனத்தாங்கலும், ஏக்கமும் கொண்டிருந்தாலும் இன்று அவனுக்குத் துன்பம் வந்து விட்டதைப் பார்த்துக் கண்ணும், மனமும், கலங்காமல், அவளால் விலகிப் போய் விட முடியவில்லை. தந்தை இறந்தபின் பல நாட்களாக அவள் வீட்டிலிருந்து வெளியேறி எங்கும் போகவேயில்லை. இன்றோ உடல் நலம் பரிசோதித்துக் கொள்வதற்காக டாக்டர் வீட்டுக்குப் போகலாம் என்று புறப்பட்டிருந்தவள் — டாக்டர் வீட்டுக்

**அழகு மறையவில்லை**





குப் போகும் எண்ணத்தையே விட்டு விட்டு யாராவது அந்தரங்கமானவர்களிடம் அந்த விடிகாலை வேளையில் சத்தியமூர்த்திக்கு இழைக்கப்பட்டுவிட்ட அநீதியையும், துன்பத்தையும் பற்றிக் குமுறிக் குமுறிப் பேச வேண்டுமென்று தோன்றியது. நல்லவேளையாக மாணவர்களுடைய விடுதியில் மட்டும்தான் வேலை நிறுத்தம் நிகழ்ந்து கொண்டிருந்தது. கல்லூரியில் உள்ள மாணவிகளின் விடுதியில் வேலை நிறுத்தம் எதுவும் கிடையாது. மாணவிகள் விடுதிக்கு உடனே போய் மகேசுவரி தங்கரத்தினத்தையோ, அவள் இல்லாவிட்டால் வேறு யாராவது ஒரு தோழியையோ தன்னோடு காரில் வீட்டுக்கு அழைத்துக் கொண்டு சென்று எல்லா விஷயங்களையும் மனம் விட்டுப் பேச வேண்டுமென்று தோன்றியது பாரதிக்கு. கல்லூரி மாணவர்களின் வேலை நிறுத்தத்தைப் பற்றியும், சத்தியமூர்த்தி அதற்கு எந்த விதத்தில் காரணம் என்பதைப் பற்றியும்-கல்லூரி விடுதியிலேயே இருக்கிற ஒரு மாணவியிடம் விசாரித்து விட வேண்டுமென்று அப்போது அவள் மனம் துடிதுடித்துக் கொண்டிருந்தது. தன் மனத்தில் அன்பும் அநுதாபமும் கலந்து கனத்துக் கிடக்கும் உணர்வுச் சுமைகளை யாரிடமாவது பங்கிட்டுக் கொண்டாக வேண்டும் போலவும் தவிப்பாக இருந்தது அவளுக்கு.

''காரை நேரே பெண்கள் ஹாஸ்டலுக்கு விடு'' என்று ஏறி உள்ளே உட்கார்ந்து கொண்டு டிரைவருக்குக் கட்டளையிட்டான் பாரதி. கார் அங்கிருந்து நேரே பெண்கள் ஹாஸ்டலுக்கு விரைந்தது. கல்லூரிக் காம்பவுண்டைச் சுற்றிலும், சாலைகளிலும் — விடுதி முகப்பிலும், முதல்வர் அறையருகேயும் ஏராளமாக 'ஸ்பெஷல் மலபார் ரிஸர்வ் போலீஸ்' காவல் காத்துக் கொண்டிருந்தது. கட்டிடங்களும், விளையாட்டு மைதானமும், புல்வெளியும் வகுப்பறைகளும் களை இழந்து தெரிந்தன. 'அப்பா உயிருடன் இருந்திருந்தால் புகழ் பெற்ற இந்தக் கல்லூரியின் வரலாற்றிலே இப்படி ஒரு களங்கம் நேர விட்டிருக்க மாட்டார்!'— என்று மனத்தில் நினைத்த போது பாரதிக்கு அழுகை பொங்கிக் கொண்டு வந்தது. நியாயத்துக்கு எதிராகத் தன்னுடைய வலிமையைப் பரிசோதித்துக் கொள்ள வேண்டுமென்ற ஆசை அப்பாவுக்கு ஒரு போதும் இருந்ததில்லை. இப்படி ஒரு நிகழ்ச்சி நேர்ந்து கல்லூரியின் பெயர் கெடுவதை அவரால் பொறுத்துக் கொள்ளவே முடியாது! ஜமீன்தார் மாமாவிடமோ எல்லா முரட்டுக் குணங்களும் உண்டு. அதிகம் படிப்பில்லை. அதிகம் படிப்பில்லாதவர்களால் தங்களை இன்னொருவன் மதித்துப் பயப்பட வேண்டும் என்கிற ஆசையை ஒரு போதும் இழக்கவே முடியாது. தங்களுடைய சொந்த பலத்தை நியாயத்துக்கு எதிராகக் கூடப் பரிசோதித்துப் பார்க்க வேண்டுமென்ற ஆசை உள்ளவர்களால் வெற்றி கிடைக்கிற வரை சூதாட்டம் போன்ற அந்த ஆசையை இழக்கவே முடியாது. ஜமீன்தார் மாமா சூதாட்டத்தில் ஆசை உள்ளவர். வாழ்க்கையையும் சூதாட்டத்தைப் போலவே ஆடப்பார்க்கிறார் அவர்' என்று எண்ணினாள் பாரதி. மாணவிகளின் விடுதியைச் சுற்றியும் கூடப் பலமான போலீஸ் காவல் இருந்தது. கலைக்கூடமாகிய அந்தக் கல்லூரியின் அழகிய கட்டிடங்கள் இப்படிப் போலீஸ்காரர்களின் காவலோடு போர்க்களமாகக் காட்சி தருவதைக் கண்டு அதை நிறுவியவரின் மகள் என்ற உணர்வோடு மனம் வருந்திக் கண்கலங்கினாள் அவள்.

பிட்சர்த்தி - மாயா



மகேசுவரி தங்கரத்தினத்தையும் — உடன் அழைத்துக் கொண்டு கல்லூரி விடுதியிலிருந்து பாரதி வீட்டுக்குத் திரும்பிய போது காலை எட்டு மணிக்கு மேல் ஆகியிருந்தது. காரிலேயே இருவரும் பேசிக் கொண்டு வந்தார்கள்.

''நான் கேள்விப்பட்டவரை மாணவ மாணவிகள் எல்லாரும் இப்படித்தான் பேசிக் கொள்கிறார்கள் பாரதி! சத்தியமூர்த்தியை 'டிஸ்மிஸ்' செய்து இந்தக் கல்லூரியிலிருந்து வெளியே அனுப்புவதற்குச் சரியான காரணம் வேண்டும் என்பதற்காகக் காலேஜ் பிரின்ஸிபாலும், நிர்வாகியும் ஹாஸ்டலிலிருந்த பழைய கூரை ஷெட்டுக்குத் தாங்களே நெருப்பு மூட்டி விட்டு அவர் மேல் பழியைச் சுமத்தியிருப்பதாகத்தான் மாணவர்கள் எல்லாரும் பேசிக் கொள்கிறார்கள். இந்த அநியாயம் தெய்வத்துக்கே அடுக்காது. சத்தியமூர்த்தி எப்போதுமே 'ஸ்ட்ரெயிட் ஃபார்வர்ட்'. அவருக்குப் பொய் பேசத் தெரியாது. பொய்யாகப் பழகத் தெரியாது. பொய்யாக வாழத்தெரியாது. அவரைப் பழி வாங்கி வஞ்சம் தீர்த்துக் கொள்வதற்கு ஏதோ சூழ்ச்சி நடக்கிறது. நீ வீட்டிலேயே இருக்கிறாய்! ஜமீன்தாரும் பிரின்ஸிபாலும் அடிக்கடி உன் வீட்டில் தானே சந்தித்துப் பேசிக் கொள்கிறார்கள்? உனக்குத் தெரியாதது எனக்கென்னடி தெரியும்?''

''வீட்டில் சந்தித்தால் எனக்கென்ன தெரிகிறது? நான் எங்கோ ஒரு மூலையில் அடைந்து கிடக்கிறேன். அவர்கள் இன்னொரு மூலையில் சந்தித்துப் பேசிக் கொள்கிறார்கள். ஜமீன்தார் மாமாவும் கண்ணாயிரமும் வந்து தங்கியபின் நான் வீட்டின் முன் பக்கத்துக்கு அதிகமாக வருவதே கிடையாது. இன்னும் ஒருமாதமோ, இரண்டு மாதமோ என்னோடு இருந்து விட்டு அப்புறம் ஜமீந்தார் இந்த ஊரிலேயே இருக்கிற அவரோட சொந்தப் பங்களாவுக்குப் போகப் போகிறார்'' என்று பாரதி தன் தோழிக்கு மறுமொழி கூறிக் கொண்டிருந்த போது கார் டிரைவர் ஒரு கனைப்புக் கனைத்து விட்டு ஏதோ சொல்லத் தயாரானான். ''பெரிய ஐயா.... இந்த மலையிலே எஸ்டேட் வாங்கின நாளிலே யிருந்து நான் அவரிட்ட டிரைவராயிருக்கேன் அம்மா! நீ குழந்தையாக இருந்த வயசிலேயிருந்து உன்னை எடுத்து வளர்த்திருக்கேன். உங்கிட்ட மெய் பேசாமற் போனாத் திங்கிற சோறு என் வவுத்துலே ஒட்டாது. ஆனாலும் இப்போ நான் சொல்லப் போறதை நான் சொன்னேனின்னு நீ யாரிட்டேயும் சொல்லப்படாது. நான் ஏழை. வல்லமை உள்ளவங்களை விரோதிச்சுக்கிட்டு வாழ முடியாதவன். நீங்க ரெண்டு பேரும் பேசிக்கிட்டு வர்ற விஷயத்தைக் கேட்டதினாலே அதைப் பத்தி எனக்குத் தெரிந்த நெசத்தை நான் உங்கிட்டச் சொல்லிடணுமின்னு தோணுது. பணத்துக்கும் அதிகாரத்துக்கும் எதிரா நெஞ்சமும், நியாயமும் கூட நிற்கிற காலமில்லேம்மா இது.....''



''நீ என்ன சொல்லப் போகிறாய், முத்தையா?'' என்று பாரதி வியப்போடு அந்த டிரைவரைக் கேட்டாள்.

''வேறொண்ணுமில்லேயம்மா! நீங்க பேசிக்கிட்டிருக்கிற அதேவிஷயம்தான்!'' என்று மேலே பேசவேண்டியதைப் பேசத் தயங்கினாற்போல் சிறிது நேரம் மௌனம் சாதித்தான் அவன்.

(தொடரும்)

# விரைந்து தொழில் செய்யும் விரல்களின் கடமை

குளுமையும் தூய்மையும் மிக்க மலைக் காற்றில் அசாமின் தேயிலைத் தோட்டங்கள் பச்சைப் பட்டென விரிந்து பரந்து கிடக்கின்றன. தேயிலைக் கொழுந்துகளே பதப் படுத்துவதற்கு ஏற்றவை. எனவே அவை வளர வளர, உற்சாகமான தேயிலை பறிப்போர் மின்னல் வேகத்தில் அக்கொழுந்துகளைக் கிள்ளி விடுகிறார்கள். புதிய இந்தியாவின் உயர்வில் நம்பிக்கையும், மகிழ்ச்சியும், சுறு சுறுப்புமுள்ள இத்தகைய தொழிலாளர்கள்தான் நாட்டின் உண்மையான மக்கள். நாடு நெடுகிலும் பரவிக் கிடக்கும் தனது ஏராளமான கிளைகளின் மூலம் **ஸ்டேட் பாங்க் ஆப் இந்தியா** நாட்டுக்குப் பணிபுரிகிறது; அதன்வழி நாட்டின் உயர்வுக்கான தன் பங்கைச் செலுத்துவதில் பெருமை கொள்கிறது.

**ஸ்டேட் பாங்க் ஆப் இந்தியா**



இந்தியாவின் முன்னோடியான பாங்க்.

### அத்தியாயம் முப்பத்து மூன்று

## அன்னையின் ஆசை

நெஞ்சின் வேதனையை மறைக்க ஓர் இளநகை பூத்தவாறு தலை நிமிர்ந்த பரமேசுவரவர்மன், ''அம்மா! நம் நாட்டின் இன்றைய நிலவரங்களைப் பற்றித் தாங்கள் அறிவீர்கள், அல்லவா?'' என்று மெல்லப் பேச்சை ஆரம்பித்தான்.

இந்நேரம் மகிழ்ச்சியுடன் காணப்பட்ட மகாராணி காடவன் மாதேவியின் முகத்தில் சஞ்சல மேகம் சூழ்ந்தது. ஒரு கணம் பேசாதிருந்த அவர், ''பல்லவ மன்னனைக் கடந்து வந்து என் செவிகளுக்கு எட்டிய சில சேதிகளைக் கொண்டு நிலைமையை ஓரளவு அறிந்துதான் இருக்கிறேன்'' என்றார் கவலை தேங்கிய குரலில்.

''அன்னையார் அது பற்றி என்ன நினைக்கிறார் என்பதைத் தெரிந்துகொண்டு போகவே இங்கு வந்தேன்'' என்று சொல்லித் தன் தாயின் முகத்தை ஏறிட்டு நோக்கினான் பரமேசுவரவர்மன்.

காடவன்மாதேவி இதைக் கேட்டுப் புன்னகை புரிந்தார்: ''எந்த விஷயமாகவும் முன்கூட்டியே ஏதாவதோர் அபிப்பிராயத்தை உருவாக்கிக் கொள்வதைக்கொஞ்சகாலமாகவே நான் தவிர்த்து வருகிறேன், மகனே! ஏனென்றால், ஒன்றைப் பற்றி நாம் ஓர் அபிப்பிராயம் கொண்டபின் அதற்கு மாறுபட்ட அபிப்பிராயத்தைக் கேட்க நேரிடும்போது அதை எதிர்த்து வாதிடவோ அல்லது பணிந்து போகவோ நேரிடலாம். அதனால் மனத்தின் அமைதி குலைந்து வீணான வருத்தமும் கிலேசமும் உண்டாகலாம். எது பற்றியும் எவ்வித அபிப்பிராயமும் கொள்ளாமலே இருந்து விட்டால் இம்மாதிரிச் சங்கடங்கள் ஏற்பட வழியில்லை.

# பத்தினிக் கோட்டம்

### ஜெகசிற்பியன்

எனவேதான், வாழ்க்கையில் சாந்தியையும் நிம்மதியையும் தேடிக் கொண்டிருக்கும் நான் இந்தப் பழக்கத்தைக் கைக் கொள்ள முயன்று வருகிறேன்.'' இவ்வாறு சொன்ன மகாராணியை வியப்புடன் பார்த்த பரமேசுவரவர்மன் ''அன்னையாரின் ஞானமார்க்கம் அற்புதமானது!.... ஆயினும் புத்திபூர்வமாக ஒரு விஷயத்தைக் கிரகிக்கும்போது நம்மையறியாமலே நம்முள் அதுபற்றி ஓர் அபிப்பிராயம் உருவாவது இயற்கை; அப்படி உடனடியாக உருவாகும் அபிப்பிராயத்தையாவது வெளியிடலாம் அல்லவா?'' என்று சிரித்துக் கொண்டே வினவினான்.

''அது அபிப்பிராயமாகாது, பரமேசுவரா! வெறும் பதிலாகத்தான் அது இருக்கும்! எந்தக் கேள்விக்கும் பதில் சொல்ல நான் எப்போதும் தயாராக இருக்கிறேன்!''

சற்றுத் தொலைவில் நின்றிருந்த பெரும்பிடுகு முத்தரையர், தாய்க்கும் தனயனுக்குமிடையே ஆரம்பமான உரையாடலை வெகு கவனமாகக் கேட்டுக் கொண்டிருந்தார்.

சிறிது நேரம் சிந்தனையில்மூழ்கியிருந்த பரமேசுவரவர்மன் சட்டென்று நிமிர்ந்து, ''அம்மா! விடுதலை பெற்ற பல்லவ நாட்டின் மன்னனாக நான் வீராபிஷேகம் செய்து முடிசூட்டிக் கொள்வதோடு என் திருமண வைபவத்தையும் சேர்த்து நடத்திவிட விரும்புகிறேன்; தங்களுக்கு இதில் ஆட்சேபணை ஏதும் இல்லையே?'' என்று பூஞ்சிரிப்புடன் கேட்டான்.

''காதால் கேட்கும் போதே நெஞ்சமெல்லாம் இனிக்கச் செய்யும் இந்த இனிய சேதிகளை நிகழ்ச்சி வடிவில் கண் குளிரக் காணவேண்டுமென்பதற்காக ஒவ்வொரு நாளும் ஏங்கிக் குமைந்து இறைவனிடம் மன்றாடிப் பிரார்த்தித்துக் கொண்டு வருகிறேன்,

மகனே!'' என்றார் மகாராணி மகிழ்ச்சிக் கலவையிட்ட குரலில்.

''அப்படியானால் பல்லவ சாம்ராஜ்யத்தின் பட்டமகிஷியாக நான் தேர்ந்தெடுத்திருக்கும் பெண்மணியை என் அன்புக்குரிய அன்னையாரும் தமது அருமை மருமகளாக ஏற்றுக் கொள்ளச் சம்மதித்து விட்டார் என்பதுதானே, இதற்கு அர்த்தம்?''

''தவமாத் தவமிருந்து பெற்ற என் செல்வத் திருக்குமாரனின் உள்ளத்தைக் கொள்ளை கொண்ட அவ்வுத்தமப் பெண்மணியை நான் இன்னும் நேரில் சந்திக்கவில்லை யென்றாலும், அவளது அறிவு, ஆற்றல், அழகு, குணம், நடத்தை ஆகியவற்றைப் பற்றிச் சோழ இளவரசியின் வாயிலாக நிரம்பவும் கேள்விப்பட்டிருக்கிறேன். அப்பெண்ணரசியின் பேருதவியாலேயே இந்தப் பழம் பெருமை வாய்ந்த பல்லவ நாடு, சளுக்கியரின் ஆதிக்கப் பிடியிலிருந்து விடுதலை பெற முடிந்தது என்ற உண்மையையும்



அறிந்து உள்ளம் பூரித்தேன். அப்படிப் பட்ட ஒரு மங்கை நல்லாளே என் மருமகளாக வரவேண்டு மென்றும் ஆசைப் பட்டுக் கொண்டிருக்கிறேன்.....''

அன்னையின் இந்த மொழி கேட்டு ஆனந்தப் பரவச மடைந்த பரமேசுவர வர்மன், தன் கழுத்தில் பல நவரத்தின ஹாரங்களுக்கிடையே தவழ்ந்துகொண்டிருந்த அந்தச் சவுக்கைக் காய் மாலையைத் தன்னை மீறிய ஓர் ஆவலுடன் தொட்டுப் பார்த்துக் கொண்டான்.

''ஆனல், பரமேசுவரா! அந்த என் பேராசை நிராசையாகி விடுமோ என்ற அச்சம் என்னை இப்போது அலைக்கழித்து வருகிறது! ஆந்திர இளவரசி உத்தமசீலியை என் மருமகளாகப் பெற முடியாத துர்ப்பாக்கிய சாலியாகி விடுவேனே என்னும் பெரும் துயரில் ஆழ்ந்து ஒவ்வொரு நாளையும் வேதனையோடு கடத்திக் கொண்டு வருகிறேன்!''

பலத்த அதிர்ச்சியுற்றவன் போல் திரும்பிய பரமேசுவர வர்மன்,— ''ஏனம்மா, இப்படிச் சொல்கிறீர்கள்?'' என்று துடிப்புடன் கேட்டான்.

''எனது ஆசாபங்கத்துக்குரிய காரணத்தை நீயும் அறிந்திருப்பாய் என்றே கருதுகிறேன்'' என்று கம்மிய குரலில் அமைதியாகப் பதிலிறுத்தார் அன்னை.

''அதாவது, ஆந்திர இளவரசி உத்தமசீலி, சமண சமயத்தைச்சார்ந்தவளாக இருக்கிருளே என்று அன்னையார் ஆயாசப்படுகிருர், அப்படித்தானே ?''

''அவ்வாறு சொல்ல எனக்கு உரிமையில்லை, மகனே! உன்னை நான் ஒரு சைவனைப் பெற்றெடுத்து விட்டேனே என்பதே என் ஆயாசத்துக்குக் காரணம்!''

தாளமுடியாத மன வேதனையோடு சிலை போல் நின்று கொண்டிருந்த முத்தரையரைப் பார்த்து, ''பழையாறைச் சோழருடையவும் கோவிந்த வர்மனுடையவும் தீய பிரசாரம் என் அன்னையாரின் விரிந்த மனத்தைக் கூட இந்த அளவுக்குச் சுருக்கி விடும் என்று நான் சிறிதும் எதிர்பார்க்கவே இல்லை, ஐயா!'' என்று அடைத்த குரலில் கரகரத்தான்.

''அப்படிச் சொல்லாதே, பரமேசுவரா ! அவர்களுடைய நோக்கத்துக்கும் , எனது கருத்துக்கும் நிறைய வேறுபாடு உண்டு. அவசரப்பட்டு என்னைத் தவருகப் புரிந்து கொள்ளாதே!'' — என்று படபடப்புடன் கூறிய மகாராணி மேலும் தொடர்ந்து, ''ஆனல்....''

''சைவனை நான், சமணத்தைச் சார்ந்த அவளை மணக்க விரும்புவதை மட்டும் தாங்கள் ஒப்புக் கொள்ளத் தயங்குகிறீர்கள்? அதாவது, அவர்கள் அரசியல் காரணத்துக்காக அவளை எதிர்க்கிருர்கள்; நீங்களோ சமய வேறுபாட்டுக்காக அவளை ஏற்க மறுக்கிறீர்கள்?'' என்று முகத்தைத் திருப்பிக் கொண்டு முணு முணுத்தான் பரமேசுவரவர்மன்.

''ஆம், மகனே! அதில் ஓரளவு நியாயம்இருப்பதாகவே நினைக்கிறேன்.''

''சமய வேறுபாட்டைக் கொண்டு மனிதரை மனிதர் பிரித்துக் காண்பதில் எத்தகைய நியாயமும் இருக்க முடியாதென்பது என் கருத்து!''

''உண்மைதான், பரமேசுவரா ! சமயம் என்பது மனித சமூகத்தை அறநெறியில் வழி நடத்த உதவும் ஒரு கைவிளக்குப் போன்றதுதானே தவிர, அது பிளவுபடுத்தி வேற்றுமையைக் கட்டிக் காக்கும் தடைச் சுவர் போன்றதல்ல என்பதை நான் நன்கு அறிவேன். ஆனல், ஓர் ஆணும் பெண்ணும் சேர்ந்து நடத்துவதான திருமண வாழ்க்கைக்கு அவ்விருவரின் அழகு — குணம் நடத்தை முதலானவற்றில் ஒரு நெருங்கிய ஒருமைப்பாடு வேண்டப்படுவது போல ஒரே சமயச் சார்பும்அதற்கு அவசியத் தேவையாகிறது. இனம், மொழி, நிறம் ஆகியவற்றைத் திருமண உறவு கடந்து செல்வதாயிருக்கலாம்; ஆனல் சமய ஒருமையை மட்டும் அத்தனை எளிதாக அது கடந்து சென்றுவிட முடியாது. அப்படிச் சென்றால் அப்புனித உறவில் எப்போதேனும் ஒரு காலத்தில் ஏதேனும் ஒரு குறை ஏற்பட்டே தீரும். அல்லது ஏற்படுவது போலத் தோன்றவாவது செய்யும். இது உலக நியதி. மனித வாழ்க்கையின் இயற்கைப் போக்கு. எனவேதான்...''

''இவ்வளவையும் நான் சிந்தித்துப் பார்க்காமலே அந்த முடிவுக்கு வந்திருப்பேன் என்று நினைக்கிறீர்களா, அம்மா?''

''அப்படி ஒரு போதும் நினைக்க மாட்டேன், மகனே! உன்னைப் பற்றி எனக்குத் தெரியாதா? எந்தச் சிறு விஷயமானாலும் அதன் சகல மூலைகளையும் துருவி ஆராய்ந்து பாராமல் அவசரப்பட்டு ஒரு முடிவுக்கு வரும் பழக்



Unity

REGISTERED TRADE MARK

STEEL SAFETY PINS

ஸேப்டி பின்களில்

**யூனிடி**க்கு பதில்

வேறொன்றுமேயில்லை



- ★ நேர்த்தியான தரம்
- ★ திருத்தமாக அமைக்கப்பட்ட தலைபாகம்
- ★ கூரான முனை
- ★ கனமான நிக்கல் பூச்சு
- ★ உன்னத தயாரிப்பு

'யூனிடி' யே ஜார்ஜ் குட்மேன் லிமிடெட்டின் ரிஜிஸ்டர்டு டிரேடு மார்க்காகும்;

ரிஜிஸ்டர் செய்யப்பட்ட உபயோகிப்பாளர் ;

**கெஸ்ட், கீன், வில்லியம்ஸ், லிட்.,**

கல்கத்தா பம்பாய் மதராஸ் புது டில்லி

GKW3187A

கம் உன்னிடம் கிடையாதென்பது எனக்கு நன்ருகத் தெரியும். ஆனால் அப்படிப்பட்ட நீ, உன் திருமண விஷயத்தில் மட்டும் கேள்விக்கு இடமான அந்த முடிவை எப்படித் தேர்ந்தெடுத்தாய் என்பதை நினைக்கும் போது ஆச்சரியமாகத்தான் இருக்கிறது.''

''இதிலிருந்தே அன்னையார் தெரிந்து கொள்ளலாமே, என்னுடைய திருமண முடிவில் இன்று மட்டுமல்ல—என்றுமே எவ்விதக் கேள்விக்கும் இடம் இருக்காது என்று?''

''மெத்த மகிழ்ச்சியடைகிறேன், பரமேசுவரா! இந்த இனிய பதிலே நீ ஒரு சாதாரண மனிதனுக இருந்து சொல்ல, நானும் ஒரு சாதாரணத் தாயாக இருந்து கேட்டிருந்தால் இன்னும் இரட்டிப்பு மகிழ்ச்சியடைந்திருப்பேன். ஆனால் நீ ஒரு மாபெரும் தேசத்து மன்னனுகவும், உன்னைப் பெற்றெடுத்த நான் ஒரு மகாராணியாகவும் அல்லவா இருக்கிருேம்? இதில்தானே நம்முடைய துர்ப்பாக்கியமே அடங்கியிருக்கிறது ?''

''அவ்வளவு தூரத்துக்கு நம் துர்ப்பாக்கியத்தை மிகைப்படுத்த வேண்டாம், அம்மா! எனக்கும் என் மனைவியாகத் தேர்ந்தெடுத் திருப்பவளுக்கும் இடையே உள்ள சமயப் பிரிவு எங்கள் திருமண வாழ்க்கையில் எள்ளத்தனை கசப்பையும் ஏற்படுத்தாது என்று நான் உறுதியாக நம்புகிறேன். ஏனென்ருல் எங்கள் சமய உணர்வு அப்படி!''

''எனக்கும் அதில் பரிபூரண நம்பிக்கை உண்டு, மகனே! ஆயினும் உன்னுல் ஆளப்படும் மக்கள் அதை நம்ப வேண்டுமே? பல்லவ நாடு ஒரே சமயச் சார்புள்ளது அல்ல; பல்வேறு சமயங்களைக் கொண்ட நாடு. அதிலே சைவமும் சமணமும்தான் பிரதானமானவையாக விளங்குகின்றன. துரதிர்ஷ்டவசமாக இவற்றின் கடந்த காலம் பகையும் பூசலுமாகக் கழிந்து, உன்னுடைய தலைமைக்குப் பிறகுதான் ஓரளவு சீர் திருந்தியிருக்கிறது. இந்நிலையில் நீ சைவனுகவும், உன் கரம் பற்றுகிறவள் சமணளாகவும் ஆட்சி பீடத்தில் அமர நேரிட்டால் அந்தப் பழைய பிளவு மீண்டும் தலை தூக்கி விடாதா? சந்தேகமும், நம்பிக்கையின்மையும் உள்ள மக்களைக் கொண்ட ஒரு தேசத்தை ஆள்வது மிக மிகக் கடினம் ஆயிற்றே, மகனே?''

## அத்தியாயம் முப்பத்து நான்கு

# கிரீட தண்டனை

மகாராணியாரின் உணர்ச்சி மிக்க பேச்சை மிகவும் கவனமாகக் கேட்டுக் கொண்டிருந்த பரமேசுவரவர்மன் மெல்லிய குரலில் அமைதியாக, ''அம்மா! தங்கள் அன்பு மைந்தன் பரமேசுவரவர்மன் ஒரு மனிதனுக வாழ வேண்டுமென்று விரும்புகிறீர்களா? அல்லது அவன் மன்னனுக மட்டும் வாழ்ந்தால் போதும் என்று ஆசைப்படுகிறீர்களா?'' என்று கேட்டான்.

காடவன் மாதேவி இதைக் கேட்டுக் கலகல வெனச் சிரித்தார். ''காலஞ்சென்ற உன் தந்தையாரிடம் இந்தக் கேள்வியைக் கேட்டிருந்தால், 'நீ ஒரு மன்னனுக வாழ்ந்தால் போதும்' என்று பதில் சொல்லி யிருப்பார், மகனே! ஆனால் உன்னைப் பெற்றெடுத்த தாயாகிய நான் அவ்வாறு சொல்ல மாட்டேன். என் ஆருயிர்ச் செல்வன் மன்னனுக மட்டுமல்ல, மனிதனுகவும் வாழ வேண்டும் என்றே ஆசைப்படுவேன்.''

மெல்லத் தலையசைத்த பரமேசுவரவர்மன், ''அன்னையாரின் இந்த ஆசையை என்னுல் நிறைவேற்ற முடியாது என்றே நினைக்கிறேன்!'' என்ருன்.

''அப்படி யெல்லாம் அதைரியப்பட்டுப் பேசாதே, மகனே! எதற்கும் ஒரு மார்க்கம் ஏதாவது இல்லாமல் போகாது...''

''அன்னையார் என்ன சொல்கிருர்?''

தயக்கத்துடன் அவனை ஏறிட்டு நோக்கிய மகாராணி, ''என் எளிய மனத்தில்பட்ட ஒரு சிறிய யோசனையைச் சொல்வேன்; அதைக் கேட்பாயா, பரமேசுவரா?'' என்ருர்.

''என்னுல் ஏற்கக் கூடிய யோசனையாயிருந்தால் நிச்சயமாக ஏற்பேனம்மா'' என்றவாறு தன் தாயின் முகத்தை ஆவலுடன் நோக்கினுன் பரமேசுவரவர்மன்.

மீண்டும் சற்றே தயங்கிய காடவன் மாதேவி தம்மைச் சமாளித்துக் கொண்டு அமைதியாகச் சொன்னுர்: ''ஆந்திர இளவரசி உத்தமசீலியை நீ எந்த அளவுக்கு நேசிக்கிருயோ அதே அளவுக்கு அவளும் உன்னை நேசிப்பாள் என்றே நம்புகிறேன். அப்படி நேசிப்பது உண்மையானுல், உனக்கு நேர்ந்துள்ள இந்த இக்கட்டான நிலைமையைப் போக்க அவள் ஒரு காரியம் செய்யலாம். அதாவது.... தான் சார்ந்துள்ள சமண சமயத்தை விட்டுச் சைவ சமயத்தை ஏற்பாளேயானுல்....''

நெஞ்சிலே நெருப்பை வாரிக் கொட்டினுற் போல் துடித்துப் பதறிய

எனக்குப் பிரியம் வர வர நான் சிறிய வஸ்துக்களிலுள்ள பெருமைகளையே அதிகமாக நாடுகிறேன். .... பெரிய ஸ்தானத்திலுள்ள யாருமே பெரியவராக இருந்துவிட முடியும். எனக்கோ வர வர, புழுவிடமுள்ள பெருமைதான் உண்மைப் பெருமையாகத் தெரிகிறது. அது எவ்வளவு மௌனமாக, சீராக, கணத்துக்குக் கணம் - மணிக்கு மணி - தன் கடமையைச் செய்கிறது! — **ஸ்வாமி விவேகானந்தர்**

பரமேசுவரவர்மன், ''அம்மா!'' என்று அலறிக் கொண்டே துள்ளி யெழுந்து நின்றான். அவன் உடல் நிலை கொள்ளாமல் அதிர்ந்து நடுங்கியது. கண்கள் தீப் பிழம்பாகச் சிவந்து பழுத்தன. ''அம்மா! தாங்களா இந்த யோசனையைச் சொன்னீர்கள்? தங்கள் வாயிலிருந்தா இந்தச் சொற்கள் வெளி வந்தன? என்னால் நம்பவே முடியவில்லையே!'' என்று இரைந்து கூவியவாறு தன் செவிகளை இறுகப் பொத்திக் கொண்டே அவன், ஆத்திரம் பொருமிய அடித் தொண்டையில் மேலும் படபடத்தான்: ''ஆந்திர இளவரசி சைவ சமயத்தைத் தழுவி வரட்டும் என்று தாங்கள் சொன்னதை விட என்னைச் சமணனாக மாறும்படி சொல்லியிருக்கலாமே! அப்படிச் சொல்லியிருந்தால்கூட அதைப் பொறுத்துக் கொண்டிருக்க முடியுமே! தயை கூர்ந்து தங்கள் திருவாயால் இனியொரு முறை அவ்வாறு கூறாதீர்கள், தாயே! சமயம் என்பது ஒரு தர்ம நெறி. அக வாழ்க்கையைச் செம்மைப் படுத்திப் பிறவியை முழுமையாக்குவது ஒன்றே அதன் நோக்கம். இந்த நோக்கத்தை மறந்து, லௌகிக நலன்களுக்காக அதைப் பயன்படுத்த முனைவது மன்னிப்பே இல்லாத பாவமாகும். உலக வாழ்க்கையின் வெற்றிக்காகவும், இந்திரிய சுக போகங்களுக்காகவும் சமயம் விட்டுச் சமயம் மாறுவதோ மாற்றம் செய்விப்பதோ இழிவான செயல் மட்டுமல்ல, வெறுக்கத் தக்க குற்றமும் ஆகும். எனவே, மிக உயர்ந்த அறநெறிப் பண்பாட்டில் வளர்ந்திருப்பவளான என் இதயப் பேரரசி உத்தமசீலி அத்தகைய இழிந்த செயலுக்கு ஒரு போதும் உடன்படமாட்டாள். என் பொருட்டு அவள் தன் சமயத்தைத் துறக்கத்துணிந்தாலும் நான் அதற்குச் சம்மதிக்க மாட்டேன். இது உறுதி.''

தலைக்குனிவுடன் அமர்ந்திருந்த காடவன்மாதேவி, ''என் மைந்தனுக்கு நான் சொன்ன யோசனை தவறானது என்பதை உணர்கிறேன். அதற்காகப் பல்லவ மன்னனிடம் மன்னிப்புக் கோருகிறேன்'' என்றாள் குரல் தழுதழுக்க.

தாயின் பாதங்களைத் தொட்டு வணங்கி விட்டு அமைதியாக நடந்து போய் முத்தரையரின் எதிரே நின்ற பரமேசுவரவர்மன் அவரை இமைக்காமல் நோக்கியவாறு, ''சந்திரலேகைச் சிற்றரசே! தங்களிடம் நான் தெரிவிப்பதாகச் சொன்ன என் முடிவை இப் போது தெரியப் படுத்துகிறேன், கேளுங்கள்!'' என்றான்.

பிரமை பிடித்தவர் போல் நின்றிருந்த முத்தரையர் அவனைத் திருதிருவெனப் பார்த்து விழித்தார்.

''பழையாறைச் சோழரும், பல்லவ இளவரசனான கோவிந்தவர்மனும் கூட்டுச் சேர்ந்து என் நாட்டிலே எனக்கு எதிரான பிரசாரம் செய்து வருவதன் நோக்கம் என்னவாயிருக்கும் என்று நீங்கள் நினைக்கிறீர்கள், நண்பரே?''

''விடுதலைப் போரில் அவர்களுடைய உதவியை நாடாமலும், அவர்களுக்குப் போதிய மு க்கியத்துவம் தராமலும், தாங்களே தங்கள் சுய முயற்சியைக் கொண்டு தனித்து நின்று போரிட்டு வெற்றி தேடிக் கொண்டதால் ஏற்பட்ட காழ்ப்பினாலேயே அவர்கள் அவ்வாறு தவறான பிரசாரத்தில் இறங்கியிருக்கிறார்கள் என்று அன்றும் சொன்னேன்; இன்றும் அதையே சொல்கிறேன், அரசே!'' என்றார் முத்தரையர் கரகரத்த குரலில்.

''இல்லை; நான் அப்படி நினைக்கவில்லை. என் அன்புக்குரிய இளவலான கோவிந்த வர்மனுக்கு இந்தப் பல்லவ நாட்டின் முடிமன்னனாக வேண்டுமென்னும் ஆசை இருக்கலாம் என்று நான் நினைக்கிறேன்! அந்த ஆசையை அவனிடம் பழையாறைச் சோழர் தம் சுயநலத்துக்காகத் தூண்டி விட்டிருக்கலாம் என்றும் கருதுகிறேன்!''

''அரசே!....''

''இவ்வளவு பெரிய குற்ற எண்ணம் கொண்ட கோவிந்தவர்மனுக்கு என்ன தண்டனை விதிக்கலாம்?''

''மன்னாவர்கள் சொல்வது?....''

''மரண தண்டனையல்ல! இந்த மாபெரும் தேசத்தின் ஆட்சிப் பொறுப்பை அவனிடமே ஒப்படைத்து விட்டு நான் வெளியேறுவதுதான் அவனுக்கு அளிக்கப்படும் பெரிய தண்டனை! இதுதான் முடிவு! இதுவே என் முடிவு!''

காடவன்மாதேவியும், பெரும்பிடுகு முத்தரையரும் இதைக் கேட்டு இடியால் தாக்குண்டவர்கள் போல் நடுநடுங்கி விட்டார்கள். (தொடரும்)

**Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs Bharathan Publications Private Limited at the Kalki Press Kilpauk Madras-10 Managing Editor T. Sadasivam.**

# அவள் அழகி...அவள் பாண்ட்ஸ் உபயோகிக்கிருள்

## உங்கள் முக சருமத்திற்கு மினுமினுப்பும் இளமை வசீகரமும் அளிக்க எண்ணெய்ப்பசையற்ற உன்னத

## பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீம்




பாண்ட்ஸ் வானிஷிங் க்ரீம் முக சருமத்தை பூப்போல மென்மையாகவும், மினுமினுப்பாகவும், மனோகரமாகவும் வைக்கிறது. முகத்திலுள்ள சிறு பருக்கள் போன்றவை நீங்க வழி செய்கின்றது. இதைத் தடவி பவுடர் போட்டுக் கொண்டால் பவுடர் ஒரே சீராக மணிக்கணக்கில் படிந்திருக்கும். உங்கள் முக வனப்புக்கு மெருகூட்ட பாண்ட்ஸ் ஃபேஸ் பவுடர் உபயோகியுங்கள். அது சீராகப்படிகிறது, முகத்திலுள்ள சிறு குறைகளை மூடி மறைக்க உதவுகிறது.

**பாண்ட்ஸ் கோல்ட் க்ரீம்:**



தினமும் இரவில் உங்கள் முகத்திலும், கழுத்திலும் பாண்ட்ஸ் கோல்ட் க்ரீம் தடவுங்கள். இரண்டு நிமிஷங்களுக்குப் பிறகு அதிகப்படியான க்ரீமைத் துடைத்து விடுங்கள். நன்கு சுத்தம் செய்யப்படுவதால் சருமத்தின் உள் அடங்கி கிடக்கும் அழுக்கு முதலியவைகளை அது வெளியேற்றும்.

சீஸ்ப்ரோ-பாண்ட்ஸ் இன்கார்ப்பொரேடட்

(வரையறுக்கப்பட்ட பொறுப்புடன் யு.எஸ்.ஏ.யில் இணைக்கப்பட்டது)

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon

